ஸ்ரீரஸ்து

மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்கள் அருளிச்செய்த

# முதலாயிரம்.

## மூன்றாவது பாகம்.

பெருமாள் திருமொழி, திருச்சந்த விருத்தம், திருமாலை, திருப்பள்ளி
யெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு,

## இவ்வாறு பிரபந்தங்களும்,

———0———

இவற்றிற்கு

பெரியவாச்சான் பிள்ளை, பெரியஜீயர் அருளிச்செய்த

## வ்யாக்யானமும்

அந்த வ்யாக்யானத்தை யநுசரித் தெழுதப்பட்ட

ப்ரதிபத வ்யாக்யானமும்,

பல ப்ரதிகளுக்கிணங்க பண்டிதர்களால்

பரிசோதிக்கப்பட்டு

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய ஸஞ்ஜீவினீ சபையாரால்

ஸ்ரீ ஸுதர்சன முத்ராக்ஷரசாலையில்

அச்சிடப்பட்டன

——(*)——

காஞ்சீபுரம்.

1910

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பெரியாழ்வார் திருமொழிச் செய்யுளகராதி.

பெரியாழ்வா திருமொழிச செய்யுளகராதி



மணக்கால நம்பிகள் அருளிச்செய்தது.

இருவிகற்ப நேரிசை வெண்பா.

மூ —இன்னமுதமூட்டுகே னிங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்— ¶ பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோனெங்கள்
குலசேகரனென்றே கூறு க

ப—ரை.— பை— பசுத்த நிறத்தையுடைய, கிளியே— வாராய் மடக்கிளியே, இன் அமுதம்— போக்யமான அம்ருதத்தை, ஊட்டுகேன்— உண்ணக் கொடுக்கிறேன்; இங்கே வா— என்னருகே வா, தென்— தென்திசைக்குத் திலகமாயுள்ள, அரங்கம்— திருவரங்கம் திருப்பதி விஷயமாக, பாடவல்ல— பாடுகையில் சதுரராய், சீர்— பாகவத பக்தியாகிற குணவிசேஷ பரிபூர்ணராய், பெருமாள்— 'பெருமாள்' என்ற நிரூபக நாமத்தையுடையராய், பொன்- ஸ்ப்ருஹணீயமாய், அம்- அழகியதான சிலை- சிலைபோன்ற புருவத்தை, சேர்- முகத்திலே சேர்த்துடைய, நுதலியர்- ஸ்த்ரீகளுக்கு, வேள்- காமனைப்போல் ரஞ்ஜநீயராய், சேரலர்— சேரவம்சத்திலவர்களுக்கு கோன்— நிர்வாஹகராய், எங்கள் குலம்— ப்ரபந்நரான எங்கள் குலத்துக்கு, சேகரன்— சிரோரத்நமாயிருந்துள்ள ஸ்ரீ குலசேகரப்பெருமாள், என்றே கூறு— என்கிற இந்தவாசகமொன்றையே சொல்லிப்போரு

வ்யா. இன்னமுதமூட்டுகேன் "இன்னடிசிலொடுபால மூட்டி யெடுத்த வென கோலக்கிளியை" என்னக்கடவதிறே இங்கு * தேனுபபாலமுமுதுமாய திருமால் திருநாமத்தையிறே ஊட்டிவளர்த்தது, அதுதோன்ற ஆழ்வான் வலத்திருச்செவியிலே முன்பு ப்ரார்த்தித்த தவயத்தை மீளவும் ப்ரஸாதித்தருளிற்று "இங்கேவா" என்று- திருநாமம் சொல் என்றதால் வடிவில் பிறந்த ஹர்ஷத்தைக் கண்டு வரவழைக்கிறது பைங்கிளியே பசுத்து மரகதம்போலேயிருக்கிற மடக்கிளியே இத்தால - "என்னுருயிர்க்காகுத்தன னெசெபபவாயொக்குமவாயன்கண்ணன கைகாலினன் நின்பசுஞ்சாம நிறத்தனன்" என்னும்படியான ரூபஸாம்யத்தை சொல்லுகிறது (க) * வரவேலாத்ருஷ்டுவெதிறே ஏதுக்காக வென்னை யழைக்கிறதென்ன, தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள் பொன்னஞ் சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோனெங்கள் குலசேகரனென்றே கூறு என்கிறது தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாளாகையாவது - "இருளிரிய" "தேட்டருந் திறல்தேன" "மெய்யில்வாழ்க்கை" என்கிற மூன்று திருமொழியிலும் பாடி, முடிவிலும் "யாவரும் வந்தடிவணங்க வரங்கநகர்த்துயின்றவனே" என்றும், மற்றும் திருமலை முதலாயிருக்கிற ஆராங்களான திருப்பதிகளையும் "காகுத்தா கண்ணனே" என்றும் அர்ச்சாவதாரத்துக்கு கடியான அவதாரங்களையு மருளிச்செய்து தலைக்கட்டுகையாலும், அவதாரம், * செருவிலேயரக்கர் கோனைச்செற்ற நம்சேவகனாரையாலும், * வெண்ணெயுண்ட வாயனுகையாலும், எல்லாம் திருவரங்கத் திருப்பதி விஷயமாகலாமிறே * பொன்னஞ் சிலைசேர் நுதலியர் வேளாகையாவது - ஸ்ப்ருஹணீயமான வில்லுக்கு ஸதாசமான புருவத்தை முகத்திலே சேர்த்துடைய ஸ்த்ரீகளுக்கு ரஞ்ஜநீயராயிருக்கிறவர் வேள் - காமன. (உ) "கந்தர்ப்ப இவமூர்த்திமாந்" "காமர்மானேய் நோக்கியர்க்கு" என்னக்கடவதிறே

¶ "பொன்னின்" என்றும் பாடம் காண்கிறது

(௧) ' பரஸ்பரஸாம்யமுபைதி " (உ) " கந்தர்ப்ப இவமூர்த்திமாந் "

இத்தால் - ஜ்ஞாநத்துக்கு மேலான ஸ்வரூபதாந்த்யத்தை யுடையவர்களுக்கு தாஸநீயமாயிருக்குமவரென்றபடி. சேரலர்கோன் சேரவம்சத்திலவர்கட்கெல்லாம் ராஜாவென்கை (க) "ராஜாதிராஜஸ் ஸர்வேஷாம்" என்கிற ராஜ குலத்துக்கு நிர்வாஹகரென்றபடி. எங்கள்குலசேகரன் பாபங்குலசேகரனென்கை "இராமாநுசனெங்குலக்கொழுந்து" என்னுமாப்போலே குலசேகரனென்றே கூறு * நான்வளர்த்த சிறுகிளிப்பைதலே, இன்குரலநீ மிழற்றாதே, குலசேகரனென்றே கூறு, கூறினவாய்க்கு * அமுதமாய திருமால் திருநாமமான * இன்னமுதமூட்டுகேன்; ஆகையாலே குலசேகரனென்றே கூறு. (உ) "வக்தவ்யம் ஆசார்யவைபவம்" என்னக்கடவதிறே .. ... ... க.

அ ஆரங்கெட இதில் - அவர் ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்தில் பக்ஷபதித்த இருக்கிறபடியைச் சொல்லுகிறது-

கட்டளைக்கலித்துறை

மூ — ஆரங்கெட்ட பரனன்பர்கொள்ளாரென் றவர்களுக்கே
வாரங்கொடுகுடப்பாம்பிற் கையிட்டவன்மாற்றலரை
வீரங்கெடுத்தசெங்கோற் கொல்லிகாவலன் வில்லவர்கோன்
சேரன்குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே உ

ப-ரை— ஆரம் கெட — (மந்த்ரிகளுடைய க்ருத்ரிமத்தாலே) முக்தாஹாரம் காணாமல்போக (விசாரித்ததில 'ஸ்ரீவைஷ்ணவர்கள் களவுகண்டார்கள்' என்ற மந்த்ரிகள் பக்கல் சீறி,) பரன் அன்பர் — 'பரவஸ்துவிலே பக்திபண்ணுமவர்கள், கொள்ளார் என்று — பரவஸ்துவை களவுகொள்ளார்' என்று, அவர்களுக்கே வாரம்கொடு— ஆந்த ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே பக்ஷபதித்து, குடம் பாம்பில்— பாம்புள்ள குடத்தில், கை இட்டவன்— (பாம்பின் படத்திலேபட) கையையிட்டவர், மாற்றலரை— சத்ருக்களை, வீரம் கெடுத்த— பக்நவீர்யர்களாகப் பண்ணின, செங்கோல— ஆஜ்ஞையை யுடையவராய, கொல்லி— 'கொல்லி' என்கிற நகரத்துக்கு, காவலன்— நிர்வாஹகராய, வில்லவர்— அவாந்தர ராஜர்களுக்கும், கோன்— அதிராஜராய், சேரன் குலம்— சேரனுடைய குலத்துக்கு, சேகரன்— சிரோபூஷண பூதராய, முடி— கிரீடதாரிகளான, வேந்தர்— அரசர்களுக்கு, சிகாமணி— சிகாமணியாயிருக்கிற ஸ்ரீ குலசேகரப் பெருமாள் [ திருநாமத்தின அநுஸந்தாநமாத்ரமே போக்யமாயிருக்கை ]

வ்யா ஆரங்கெடவென்று தொடங்கி ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்தில அவர்க்குண்டான பாரவஶ்யத்தைக் குலைக்கவேணுமென்று மந்த்ரிகள் அவர் திருவாரத்தை யெடுத்து மறையவைத்து அவர்கள்பேரிலே ஆரோபிக்க; அத்தைக்கேட்டு பரனன்பர்கொள்ளாரென்று. பரவஸ்துவிலே பக்திபண்ணுமவர்கள் பரவஸ்துவைக் கொள்ளாரென்று ப்ரதிஜ்ஞைபண்ணி. பரனன்பரல்லாதவர்களிறே * பிறர் நன்பொருள் தன்னை நம்புவது இப்படியாகையால அவர்களுக்கே வாரங்கொடு அவ்வளவன்றிக்கே அவர்கள் விஷயத்திலே பக்ஷபதித்து. "ராம்பாராவாய கைநீட்டலபார்த்தி" என்கிறபடியே பாம்புக்குடத்திலே அதின் படத்திலே

(க) "ராஜாதிராஜஸ் ஸர்வேஷாம்" (உ) "வக்தவ்யம் ஆசார்யவைபவம்"

பட்டுக் கைவிட்டு " அவர்கள் ஆபரணமிட்டார்கள் " என்று பாசுரத்திலே கைவிட்டவர். அப்படி செய்தவர்தான் அல்பரோவென்னில்; சத்ருக்களை நிரஸிக்கும் வாள்வலியையுடையரென்கிறது மற்றலரைவீரங்கெடுத்த என்று சத்ருக்கள் வீர்யத்தை நிர்வீர்யமாகப் பண்ணினவிது எந்தாலேயென்னில், செங்கோல் - ஆஜ்ஞையாலே " இருநிலத்தை செங்கோல் நடாவுதிர். " கோல்லிகாவலன் ' குடைக்காவலன் " என்னுமாப்போலே " கொல்லி " எனகிற நகரத்துக்கு நிர்வாஹகரானவர். வில்லவர்கோன் அவாந்தரராஜர்களுக்கும் அதிராஜரானவர் அன்றிக்கே, " வில்லவர்கோன் " என்று - வில்லவரென்றுபேர் " கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன குலசேகரன " என்கிறபடியே கோழி - உறையூர். உறையூருக்கும் இறையவரென்கிறது. அது சோழன்ராஜதானி. சேரன்குலசேகரன சேரனுடைய குலத்துக்கு சேகரன். குலசேகரர் - திருநாமம் இப்படி ராஜாதிராஜரானவையாலே முடிவேந்தர்சிகாமணி என்கிறது முடிவேந்தர் சிகாமணியானவரானது - * மணிமகுடந்தாழத் *துளங்கு நீள்முடியரசர், அடியிலே வணங்குகையாலே " மாலைமுடிமேல் சோலமாங்குலசேகரன " என்று தமக்கிருக்குமாப்போலே தாமும அவர்களுக்கு சிகாமணிபோலே சேகரிக்குமவராய அலங்காரவஹராயிருக்கை "பெருமானிவரைவருக்கிவைத்த" (ச) " ஸமஸ்தராஜரகஸ்ரீமத்கிரீட கடீதிவ பாதபீடம்" என்னக்கடவதிறே இவர் பெருமானை குலசேகரப்பெருமாளான இவர்பெருமையும அப்படியே இப்படி முடிவேந்தர் சிகாமணியான இவரும ஒருவரே யென்னுதல்; இப்படி பெரியவேண்டப்பாட்டை யுடையவரோ குடப்பாம்பில் கையிட்டவரே! என்று ஈடுபாடாதல இத்தால் - " அரங்கன் மெய்யடியார்கள தம் எல்லையிலடிமைத்திறத்தினி லென்று மேவுமனத்தனும் " என்றதற்கு அநுரூபமான பாபவஸாயியாமப்படி அநுஷ்டித்த பகாரத்தைச் சொல்லிற்றாய்த்து . . ட,

குலசேகரப் பெருமாள் திருவடிகளே சரணம்.

---

பிள்ளைலோகஞ்ஜீயர் திருவடிகளே சரணம்.

——(ℓ)——

---

(ச) " ரக்ஷமாணை ஶ்ரீமத்கிரீடகடீதி பாதபீட "

றம் போல் — மேற்கட்டி போல், எங்கும் — மேற்பக்கமெங்கும், மிக பரந்து — மிகவும் பரந்திருப்பதாய், அழல — (சத்ருக்கள் அணுகவொண்ணாதபடி) அழலாநின்றுள்ள, நாகம் — திருவனந்தாழ்வான், மேல வேளும் — இடைவிடாமல், உமிழ்ந்த — வாயால் உமிழ்கிற, செஞ்தீ அதன் கீழ் — அக்நிஜ்வாலைகளாகிற அதன் கீழே, மலர் வியாத — பூமாறாத, சென்னி — திருமுடியையுடையனுமாய், காயா மலர் — காயாம பூக்களால் தொடுக்கப்பட்டு, அழகிதாயிருந்துள்ள, பிறங்கல் அன்ன — மாலை போலேயிருக்கிற, மாலை — ஸர்வேச்வரனும், அணைகப்போருப்படியான திருமதிள்களையுடைய, அரங்கத்து — திருவரங்கத்திலே, அரவு அணையில் — சேஷசயநத்திலே, பள்ளி கொள்ளும — திருக்கண்வளர்ந்தருளுகிற, மாயோனை — ஆச்சர்யபூதனை, மணத்தூணே பற்றி நின்று — ஆமோதஸ்தம்பத்வயத்தைப் பற்றிநின்று, என வாய் ஆர — என் வாய் நிரம்ப, வாழ்த்தும் நாள் — துதிக்குங்காலம், என்று கொல் ஓ — என்றோ!

வயா இரண்டாம்பாட்டு. வாயோரீரைஞ்ஞூறு துதங்களார்ந்த. மசோஜ்ஞப் பாட்டி க்ர்ஷ்ண ஸ்பர்சத்தால்வந்த ஸுகத்துக்குப் போக்குவிட்டேத்துமாப்போலே பகவதநுபவ ஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே வந்த ப்ரீதிக்குப் போக்குவிட்டேத்துகைக்காக ஆயிரம் வாயையும்; துதங்களாவது - ஸ்தோத்ராதிகளைப் புறப்படவிடுகை ஸ்துதமிறே. வளையுடம்பிலழல் நாகம் வெளுத்த நிறத்தையுமுடையனாய், பரிபக்ஷர் தங்களுக்கு வந்தணுகவொண்ணாதபடி அழலியவனாயிருக்கிற திருவனந்தாழ்வான உமிழ்ந்தசெந்தீ வியாதமலாச சென்னி விதானமேபோல் மேன்மேலும் மிகவெங்கும் பரந்ததனகீழ. அவன்வாயாலே இடைவிடாதே யுமிழ கிற அக்நிஜ்வாலைகளின் ஜ்யோதிஸ்ஸாகிற மேற்கட்டியின் கீழே, வியாதமலர்ச்சென்னி — பூமாறாத திருமுடியை யுடையனுமாய காயாம்பூமலர் பிறங்கலன்னமாலை காயாவின அழகிய பூவாலே செய்யப்பட்ட மாலை போலேயிருக்கிற ஸர்வேச்வரனை கடியாங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும் அரணாகப்போரும மதிளையுடைய கோயிலிலே அப்படிப்பட்ட திருவனந்தாழ்வானமேலே கண்வளர்ந்தருளுகிற மாயோனை (க) "ஸப்ரேவ ப்ரித ஸ்ரோது" என்னும்படி கண்வளர்ந்தருளுகிற ஆச்சர்யபூதனை. மணத்தூணே பற்றிநின்று — ஆமோத ஸ்தம்பத்வயங்களைப்பற்றி நின்று. அழகிலே அகப்பட்ட ஹர்ஷத்தாலே தளரு கின்றமை இரண்டு ஸ்தம்பங்களைப்பற்றிநின்று வாயார என்றுகொலோ வாழ்த்துநாளே கண டால் கொள்வது வேறொரு ப்ரயோஜனமில்லையிறே, 'பல்லாண்டு பல்லாண்டு' என்னு மித்தனையிறே ... . .. . . .. உ

௩ — எம்மாண்பின் அயன்நான்கு நாவினாலும் எடுத்தேத்தி ஈரிரண்டு முகமுங்கொண்டு
எம்மாடும் எழில்கண்கள் எட்டினோடும் தொழுதேத்தி இனிதிறைஞ்ச நின்ற செம்பொன்
அம்மான்தன் மலர்க்கமலக் கொப்பூழ் தோன்ற அணியரங்கத் தரவணையிற் பள்ளிகொள்ளும்
அம்மான்தன் அடியிணைக்கீழ் அலர்களிட்டு அங்கு அடியவரோடு என்றுகொலோ அணுகும் நாளே ௩

ப-ரை. — எ மாண்பில் — எல்லாப்படியாலும் [illegible] மாட்சிமையையுடைய, அயன் — ப்ரஹ்மாவானவன், நான்கு நாவினாலும் — நாலு நாக்காலும், எடுத்து — தன்பரிவுக்குத்தக்க படி எடுத்து, ஏத்தி — ஸ்துதித்து, ஈர் இரண்டு முகமும் கொண்டு — நான்கு முகங்க

(க) "ஸப்ரபோதித ஸ்ரீரங்க"

யைடைய கொண்டு, பர்யாப்‌— எல்லாப் பக்கங்களிலும், எழில— அழகிய, கனகள் கட்டி ஜோடு— எட்டுக்கண்களோடே, தொழுது— பக்தாஞ்ஜலி புடைக்கொண்டு, ஏத்தி— ஸ்துதித்து, இனிது— ஸாஸ்த்ரோக்தமாக [ ஸாஷ்டாங்கமாக என்றபடி. ] இறைஞ்ச நின்ற— ஸேவிக்கும்படி நின்றவனும், செம்பொன்— செம்பொற்கட்டிபோலே ஸ்ப்ருஹணீயனும், அம்மான்தன்— ஸர்வேஸ்வரனுடைய, கமலம் மலர்— தாமரைமலரையுடைய, கொப்பூழ்— திருநாபியானது, தோன்ற— தோன்றும்படி, அணி— ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, அரங்கத்து— கோயிலிலே, அரவு அணையில— சேஷசய்யையிலே, பள்ளிகொள்ளும்— பள்ளிகொண்டருளுகிற, அம்மான் தன்— எம்பெருமானுடைய, அடி இணை கீழ— திருவடிகளின் கீழ், அலர்கள் இட்டு— புஷ்பங்களைப் பணிமாறி, அங்கு— அங்கே, அடியவரோடு— அந்தரங்க கிங்கரர்களோடு, அணுகும் நாள்— கிட்டும் நாள், என்று கொல்லோ— என்றோ! [ † "மாடு— பொன், பக்கம், செல்வம்" என்று நிகண்டு ]

வயா மூலமுபாட்டு. எம்மாணவிலை அயன் எப்படிப்பட்ட யாட்சியையுடைய ப்ரஹ்மா ஆதாவது - ஸ்தோத்ராதிகளைப் பண்ணும் தன்மை குறைவற்றிருக்கை நான்கு நாவிலுலும் ஸ்தோத்ராதிகளுக்கு பரிகரமான நாவுகளாலும் எடுத்தேத்தி தன ஸாத்மதைக்குத் தக்கபடி ஏத்தித்தேத்தி. ஈரிரண்டு முகமுங்கொண்டு நாலுவேதத்துக்குச் சமைந்த நாலு முகமுங்கொண்டு. எம்மாடும் பின்னும் முன்னுமடங்களாகிற பர்யந்தங்களெங்கும் எழில்கண்களெட்டினோடும் அழகை யநுபவிக்கைக்குப் பல கண்படைத்த ப்ரயோஜநம் பெறும்ன் தொழுதேத்தி யினி திறைஞ்சநின்ற ப்ரீதி பரீவாஹனுப் சொல்லுகொண்டு ஸ்தோத்ராதிகளைப் பண்ணுவது தண்டனிடுவ தாமபடி நின்ற செம்பொனம்மான்றன் மலர்க்கமலக் கொப்பூழ்தோன்ற ஸ்ப்ருஹணீயமாய இவவருகுணடான காயவாக்குக்கெல்லாம் காரணமென்னும் மஹத்வம் தோற்றுமபடி யாயிருக்கிற தாமரைப் பூவையுடைய தன் திருநாபி தோன்ற. அணியரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளு மம்மான்றன. ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான கோயிலிலே திருவனந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஸ்வரனுடைய அடியிணைக்கீழலர்களிட்டு அவன் திருவடிகளின்கீழே புஷ்பாத்யுபகரணங்களைப் பணிமாறி அங்கடியவரோ டென்றுகொலோ வணுகுநாளே அங்கு அந்தரங்க வ்ருத்தி செய்யுமவர்களோடே ஸஜாதீயனுனாலும் கிட்டுவதென்றோ "அரியார்கள் குழாங்களை" இத்யாதி. .. .. .. ரு.

மு —மாவினைவாய்பிளந்துகந்தமாலை வேலைவண்ணனை யென்கண்ணனை வன்குன்றமேந்தி
ஆவினையன்றுய்யக்கொண்ட வாயரேற்றை யமரர்கடந்தலைவனையந்தமிழினபப
பாவினையவ்வடமொழியைபபற்றற்றார்கள் பயிலரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும்
கோவினைநாவுறவழுத்தியென்றன்கைகள் கொய்மலர்தூயென்றுகொலோகூப்புநாளே ச.

ப-ரை — மாவினை— கேசியென்னும் அஸுரனுடைய, வாய— வாயை, பிளந்து— பிளந்து போகட்டு, உகந்த— ஆச்ரித விரோதிபோகப் பெற்றோமென்று உகந்த, மாலை— ஆச்ரிதவ்யாமுகனாய, வேலை வண்ணனை — கடலோடொத்த திருநிறத்தையுடையராய், என கண்ணனை— எனக்கு பவ்யனான க்ருஷ்ணனை, அன்று— இந்த்ரன் கல்மழை பெய்வித்த அக்காலத்திலே, வல— பலிஷ்டமாயிருப்பதொரு, குன்றம்— கோவர்த்தந மலையை, ஏந்தி- கையால தாங்கி, ஆவினை— பசுக்களை, உய்யக்கொண்ட- ரக்ஷித்தவராய்,

ஆயர் ஏற்றை - * தன் சேனாபதிகள் பிள்ளைகளின் சாட்டிலே மேனணித் திருக்குமவராய, அம ரர்தம் — நித்யஸூரிகளிற்காட்டில், தலைவனை — ப்ரதாநராணவராய், அம — அழகிய, தமிழ் — தமிழாலாகிய, இன்பா பாவினை — பாடடுப் போலே யினியராய, அ வடமொழியை — ஸ்ரீமந்நாராயணம் போலே இனியவராய, பற்று அற்றாகள — தன்னையே பற்றிப்புறப புள்ளவற்றை விட்ட அநந்யப்ரயோஜநர்கள், பயில் — நித்யவாஸம்பண்ணுகிற, அரங்கத் தரவணையிற் பள்ளிகொள்ளுமம — கோவினை — நாதனை, ஈற உற — ஈத்தழும்பேறும்படி, வழுத்தி — ஸ்தோத்ரங்களைப்பண்ணி, என்றன்கைகள — என்னுடைய கைகளானவை, கொய் — சாலத்தில் பறிக்கப்பட்ட, மலா — புஷ்பங்களை, தூய — பணிமாறி, கூப்பும் நாள — அஞ்சலிபண்ணும் காலம், என்றுகொல் — என்றோ

வயா நான்காம்பாட்டு மாலினை வாய்விளந்துகந்தமாலை. கேசியை அநாயாஸேநப் பிளந்து, "ஆசிரித விரோதி போகப்பெறறோம" என்று உகந்த ஆசரித வ்யாமுகதனை. வேலைவண்ணனை ஆச்ரித விரோதிகளை வளாத்தாலும விடவொணணாத வடிவழகையுடையவனை என் கணணனை. வெறும வடிவழகே யன்றியே எனக்கு பவ்யனானவனை. வன் குன்றமேந்தி யாவினையன்று்யக கொணடவாயரேறறை. இந்த்ரன வாஷிக்கிற கல்வாஷத்திலே வாஷிக்கிற கல்வாஷத்துக்குச் சலியாத மலையை யெனறுதல, சாமஹாமான குன்றமெனறுதல ஆவினையன்றுயயககோணட உபகார ஸ்ம்ருதியுமில்லாத பசுக்களை ரக்ஷித்த. ஆயரேறறை தன்பருவத்தில பிள்ளைகளைசசாட்டில தான மேனணிப்புடையவனை. அமராதர்தலைவனை தன்னோடு ஸாம்யாபத்தி பெற்றிருக்கிற நித்யஸூரிகளுக்கு சாட்டில தலைவனானவனை அந்தமிழின்பப்பாவினை * இருளிரியச் சுடாமணிசளிமைசகும நெற்றி போலே இனியவனை அவவடமொழியை ஸ்ரீமந்நாராயணம்போலே இனியவனை பற்றறறாகள பயிலரங்கத தரவணையில் பள்ளிகொள்ளுங்கோவினை தன்னையேபற்றிப புறமபுள்ளவற்றை விட்ட அநந்ய ப்ரயோஜநர் நித்யவாஸம பணணுகிற கோயிலிலே திருவநந்தாழ்வான் மேலே சணவளர்ந்தருளுகிற நாதனை. நாவுறவழுத்தி நாத்தழும்பேறும்படி ஸ்தோத்ரங்களைப்பண்ணி. என்றன் கைகள் கோய்மலா தூயென்று கோலோ கூப்புநாளே கைதழும்பேறும்படி புஷ்பாத்யுபகரணங்களைப் பணிமாறி அஞ்சலி பண்ணப் பெறுவதென்றோ ச.

மூ — இணையில்லாவின்னிசை யாழ்கெழுமி யின்பத்தும்புருவுநாரதனு மிறைஞ்சியேத்தத்
துணையிலலாத்தொன்மறை நூற்றோத்திரத்தாற் றொன்மலாக்கணயன் வணங்கியோவாதேத்த
மணிமாடமாளிகைகள் மல்குசேல்வமதி ளாங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும் [ நாளே
மணிவணண னம்மானைககணடுகோணடேன் மலாசசென்னியென்று கோலோவணங்கு

பண் - இன்பம் பாட்டாலவந்த ஆநந்தத்தையுடைய, தும்புருவும நாரதனும் — தும்புரு, நாரதனென்பவர்கள், இணை இல்லா — உபமாநாஹிதமான, இன் — இனிய, இசை — இசையையுடைய, யாழ — வீணையை, கெழுமி — விட்டு, இறைஞ்சி — திருவடிகளிலே விழுந்து, ஏத்த — ஸ்தோத்ரம்பண்ண, துணை இலலா — ஒப்பில்லாததாய், தொல் — பழையதான, மறைநூல — வேதசாஸ்த்ரமாகிற, தோத்திரத்தால் — ஸ்தோத்ரத்தாலே, தொல — அநாதிஸித்தமான, மலர்ககண — திருநாபீ கமலத்தினிடத்திலிருக்கிற, அயன — ப்ரஹ்மாவானவன், வணங்கி — திருவடிகளிலே ப்ரணாமம்பண்ணி, ஓவாது — இடைவிடாதே, ஏத்த — ஸ்தோத்ரம்பண்ணும்படி, மணி — ரத்நமயமான, மாட மாளிகைகள் —

மாடமாளிகைகளையும், மல்கு செல்வம்— மிக்க ஐச்வர்யத்தையுமுடைத்தாய், மதிளரங்கத் தரவணையிற் பள்ளிகொள்ளும்— மணி— அழகிய, வண்ணன்— வடிவையுடையனன, அம்மானை— ஸர்வேச்வரனை, கண்டுகொண்டு— இடைவிடாமல் ஸேவித்து, என்— என்னுடைய, மலர்— பூமுடிசூடின, சென்னி— தலை, வணங்கும் நாள்— அவன் திருவடிகளிலே வணங்குங்காலம், என்றுகொலோ—

வயா க்யானம் இணையில்லா வின்னிசை யாழ்கெழுமி — ஒப்பற்றதான இனிய இசையையுடைய யாழை நெருங்கி. இன்பத்தும்புருவும் நாரதனு மிறைஞ்சியேத்த பாட்டால் வந்த ஆனந்தத்தையுடைய தும்புருவும் நாரதனும் திருவடிகளிலே விழுந்து ஸ்தோத்ரங்களைப் பண்ண துணையிலலாத தொன்மறைநூல் தோத்திரத்தால் ஒப்பில்லாத பழைய வேதசாஸ்த்ரமாகிற ஸ்தோத்ரத்தாலே. தொன்மலர்க்கண்ணயனை வணங்கி யோவாதேத்த. திருநாபீகமலத்தி னிடத்திலேயிருக்கிற ப்ரஹ்மா, திருவடிகளிலே ப்ரணாமம்பண்ணி இடைவிடாதே ஸ்தோத்ரம்பண்ணி மணிமாடமாளிகைகள் மல்குசெல்வம் மணிமயமான மாடங்களையும் மிக்க ஐச்வர்யத்தையுமுடைய மதிளரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும். மிக்க அரணான பெரிய மதிளையுடைய பெரியகோயிலிலே திருவனந்தாழ்வான் மேலே பள்ளிகொண்டருளும். மணிவண்ணனம்மானைக் கண்டுகொண்டு அழகிய வடிவையுடைய ஸர்வேச்வரனைக் கண்டு கொண்டு. என் மலர்ச்சென்னி யென்றுகொலோ வணங்குநாளே நான் பூமுடி சூடின தலை என்றோ அவன் திருவடிகளிலே வணங்குவது . ௫

௬ — அளிமலர்மேலயனர னிந்திரனோடேனை யமரர்கடங்குழுவு மரம்பையருமற்றும்
தெளிமதிசேர்முனிவர்கடங்குழுவு முந்தித்திசைதிசையின் மலர்தூவிச்சென்றுசேரும்
களிமலர்சேர்பொழிலரங்கத் துரகமேறிக்கண்வளருங் கடல்வண்ணர் கமலக்கண்ணும்
ஒளிமதிசேர்திருமுகமுங் கண்டுகொண்டென் னுள்ளமிகவென்றுகொலோவுருகுநாளே

ப-ரை — அளி— வண்டுகள் படிந்திருந்துள்ள, மலர்மேல— திருநாபீகமலத்திலிருக்கிற, அயனோடு— ப்ரஹ்மாவும், அரனோடு— ருத்ரனும், இந்திரனோடு— இந்த்ரனும், ஏனை— மற்ற, அமரர்கள் தம் குழுவும்—தேவஸமூஹங்களும், அரம்பையரும்— ரம்பைமுதலான அப்ஸரஸ்ஸுக்களும், மற்றும்— இன்னுமுள்ள, தெளி மதி சேர்— (நாராயணனே ஸர்வஸ்மாத்பரனென்று) தெளிந்தஜ்ஞானத்தை யுடையரான, முனிவர்கள் தம் குழுவும்— ஸநகாதிபரமரிஷிகளின் ஸமூஹமும், உந்தி— ஒருவர்க்கொருவர் நெருக்கித் தள்ளி, திசை திசையில்— பார்த்தபார்த்த விடமெல்லாம், மலர் தூவி— புஷ்பவர்ஷத்தைப் பண்ணிக்கொண்டு, சென்று சேரும்— சென்று கிட்டுகிற, களி— தேனமாறாத, மலர்சேர்— மலர்களையுடைத்தான, பொழில்— பொழிலையுடைய, அரங்கத்து— கோயிலிலே, உரகம் ஏறி— திருவனந்தாழ்வான் மேலேயேறி, கண்வளரும்— பள்ளிகொண்டருளுகிற, கடல்வண்ணர்— நீர்வண்ணருடைய, கமலம் கண்ணும்— தாமரைமலர்போன்ற கண்களையும், ஒளி— புகரையுடைத்தான, மதி சேர்— சந்த்ரனைப்போன்ற, திருமுகமும்— திருமுகத்தையும், கண்டுகொண்டு—, என் உள்ளம்— என் மநஸ்ஸானது, மிக உருகும் நாள்—மிகவும் உருகிப்போகுங்காலம், என்றுகொலோ—

வயா க்யானம் அளிமலர்மேலயனர னிந்திரனோடு வண்டுகள்படிந்த அரவிந்தத்தின் மேலேயிருக்கிற ப்ரஹ்மாவும், அவன் மகனான ருத்ரனும், அவர்களோடே

வைறபடிக்கப்பட்ட இந்தாலும இவர்களுடனே ஏனையமார்கள்தங் குழவும் அவர்கள மூவ ளைபுமொழிந்த தேவர்கள் திரளும். அரம்பையரும் ரம்பைமுதலான அப்ஸரஸ்ஸுகளுமம் மற்றுந் தேளிமதிசேர் முனிவாகள தங்குழவும் பாம்ஹ பாலகையாய்ச செல்லும் ஸநகாதிகள திரளும உந்தி ஒருவர்க்கொருவர் நெருக்கித்தளளி திசைதிசையில் மலர் தூவிச் சேனறுசேரும் பார்த்தபார்த்தவிடமெல்லாம புஷ்ப வர்ஷமயைய பண்ணிககொணடு சென்றுகிடடும களிமலா சேர்பொழி லாங்கததுாகமேழி மதுமலரைபுடைததான பொழிலே புடைய அரஙகததிலே திருவனந்தாழ்வான் மேலேயேறி கணவளருங் கடலவண்ணா கமலக்கணணும் பள்ளிகொள்ளுகிற நீர்வணணா கமலக்கணணும ஒளிமதிசோதிருமுகமுங் கணடுசோண்டு குளிர்த்தியிக்குப்புகளையுடைய சந்த்ரனை ஒப்புசொல்லலான அழகிய திருமுகத்தையுங் கண்டுகொண்டு என்னுளள மிகவெனறுகொலோ வுருகுநாளே. என் நெஞ்சு குளிர்ந்து உருகுவதென்றோ .. ... . ... க

மூ ---மறநதிகழுமனமொழிததுவஞ்சமாறறி ¶ யைம்புலனகளடக்கியிடாப்பாரத்துனபம்
துறந்திருமுப்பொழுதேத்தி யெல்லையிலலாத் தொனனெறிக்க ணிலைநின்றதொண்டரான
அறந்திகழுமனத்தவர்தங்கதியைப் பொன்னியணி யரங்கததரவணையிற பளளிகொள்ளும்
பிறந்திசழுமாயோனைக்கண்டேன் கண்கள்ரீர்மல்கவென்றுகொலோ நிறகுநாளே எ

ப-ரை---. மறம- கொலை முதலியவற்றால, திகழும--- விளஙகாநினறுள்ள, மனம்- மாஸ்ஸை, ஒழித்து- வாஸனைபோடேபோக்கி, வஞ்சம்- பொய்யை, மாறறி- போக்கி, ¶ஐம்புலன்களை- பஞ்சேந்த்ரியங்களையும அடக்கி- படடிபுகாமே கட்டி, இடா- துககத்தை விளைப்பதான, பாரம் துனபம- ¬ பாரமான பழவினையை, துறந்து- பறறறுதது, இரு முப்பொழுது- பஞ்சகாலங்களிலும, ஏத்தி--- ஸ்தோத்ரமபண்ணி, எலலை இல்லா தொல நெறிக்கண்- மிசப் பழையமர்யாதையிலே, நிலைநின்ற--, தொண்டரான- தாஸபூதராய், அறம் திகழும- தர்மததாலே விளங்குகின்ற, மனத்தவா தம-மாஸ்ஸையுடையரான ஸ்ரீவை ஷ்ணவர்களுக்கு, கதியை- பரமப்ராப்பனானவனைய, பொனனி- காவேரியால சூழபபட்டு, அணி- லீலாவிபூதிக்காபரணமான, அரங்கத்து- கோயிலிலே, அரவு அணையில்-திருவனந் தாழ்வானுகிற படுக்கையிலே, பள்ளிகொள்ளும்- கண்வளர்ந்தருளுமவனைப், பிறமதிகழும்- அழகுவிளங்கா நின்றுள்ள, மாயோனை--- ஆச்சர்ய பூதனானவனுடைய வடிவழகை, என கண்கள---, கணடு- கண்டுகளித்து. நீர் மலக- ஆநந்தாச்ரு பாவஹிககுமபடி, நிற்குமநாள- நிறகுமகாலம, என்றுகொலோ- [ ¶ " வன்புலன்கள " என்றிருந்தால் மோனைககுசசேரும். ]

வயா ஏழாமபாட்டு மறநதிகழு மனமொழித்து மறம-கொலையும், சினமும, கொடுமையும இவறறால விளங்காநின்ற மாஸ்ஸை வாஸனையோடே போக்கி. வஞ்சமாறறி பொயயைப்போக்கி ஐம்புலன்களடக்கி * வன்புலச சேக்களைப படடிபுகாமேகட்டி. இடாப்பாரத் துன்பந்துறந்து மிக்க துக்கத்தை விளைப்பதான *பாரமாய பழவினையைப் பற றறுத்து இருமுப்பொழுதேத்தி பஞ்சகாலமெனனுதல்; பெரியமுப்பொழு தெனனுதல்; இக்காலஙகளிலேயேத்தி எல்லையில்லாத் தொன்னெறிககண் நிலைநின்ற தொண்டரான அள விறநத பழையமர்யாதையிலே சிலவரால கலக்கவொண்ணாதபடி நிலைநினற வைஷ்ணவர்களான. அறநதிகழும் மனத்தவாதங்கதியை. ஆர்சமலைய பாதாநராயிருக்கு மவாகளுக்கு பரமபராபயனானவனை பொன்னி யணியரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும். * பொன்னி சூழரங்கத்திலே திருவனந்தாழ்வானுகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளும அணி அரங்கம்.

கள் கூறுமபடி காத்துக்கொண்டிருப்பது போல. சேலார்ந்த நெடுங்கழனிசோலைசூழ்ந்த திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும் மாலோனை — சேல்களாலே நிரம்பின கழனிகளும் சோலைகளும் சூழ்ந்த கோயிலிலே திருவனந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனை. கண்டின்பக் கலவியெய்தி. கண்டு நிரதிசயாநந்தயுக்தனாய்க் கொண்டு அனுபவித்து. வல்வினையேன் என்றுகொலோ வாழுநாளே — லோகாந்தரத்திலே போய்க்காண வேண்டுமவன் இங்கே ஸந்நிஹிதமாயிருக்கச்செய்தே அனுபவிக்கப்பெறாதபடி மஹாபாபத்தைப் பண்ணின நான் அனுபவித்து வாழப்பெறுவது என்றோ? பகவதனுபவத்துக்கு விரோதியான புண்ணியமும் பாபமாயிருக்கிறது. அ

— தூராதமனக்காதற்றொண்டர் தங்கள்குழாங் குழுமித்திருப்புகழ்கள் பலவும்பாடி
ஆராதமனக்களிப்போடழுதகண்ணர் மழைசோர நினைந்துருகியேத்தி நாளும்
சீரார்ந்தமுழவோசைபரவைகாட்டுந் திருவரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும்
போராழியம்மானைக் கண்டுதுள்ளிப் பூதலத்திலென்றுகொலோ புரளுநாளே ௯

பதவுரை — தூராத — ஒருநாளும் தீராதிருக்கிற காதல் — ஆசையையுடைய தொண்டர் — அடியாருடையாய், தங்கள் குழாம் — திரளாயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியிலே, குழுமி — கலந்து, திருப்புகழ்கள் பலவும்பாடி — அவனுடைய குணங்களுக்கு வாசகமான திருநாமங்கள் பலவற்றையும்பாடி, (அத்தாலே,) ஆராத — ஆராதிருக்கிற, மனக்களிப்போடு — மனக்களிப்பாலே, அழுதகண் — அழுதகண்களிணையுடையார், ஆநந்தாச்ருக்கள், மழை — மழைபோலே, சோர — ப்ரவஹிக்க, நினைந்து — அவனை நினைத்து, உருகி — அத்தாலேயுருகி, ஏத்தி — ஸ்தோத்ரங்களைப்பண்ணி, நாளும் — காலமெல்லாம் சீர் ஆர்ந்த — ஐச்வர்யப்ரகாசகமான, முழவு ஓசை — வாத்யகோஷங்கள், பரவை — ஸமுத்ர கோஷத்தை, காட்டும் — காட்டாநிற்கிற, திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும் —, போர் — யுத்தோந்முகமான, ஆழி — திருவாழியைக் கையிலேயுடைய, அம்மானை கண்டு — ஸர்வேச்வரனைக் கண்டு, துள்ளி — ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணி, பூதலத்தில் — பூமியிலே, புரளும் நாள் — புரளுங்காலம் என்றுகொலோ —

வ்யா. ஒருபடிப்பட்ட தூராதமனக்காதல் தொண்டர்தங்கள்குழாங்குழுமி ''[illegible] த்ருப்திர்ஜாயதே ச்ருண்வதாம் '' என்று ஸம்ஸாரிகள் சப்தாதி விஷயங்களிலே பண்ணும் அனுபவித்தாலும் இந்த்ரியங்களைத் த்ருப்தமாக்கப் போகாதாப்போலே, பகவத்விஷயம் ஒருக்காலும் ஆராதிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் கோஷ்டியிலே பெய்வகைப்படும்கலசி. திருப்புகழ்கள் பலவும்பாடி அவனுடைய கல்யாண குணங்களுக்கு வாசகமான திருநாமங்கள் பலவற்றையும்பாடி. ஆராதமனக்களிப்போடழுதகண்ணர் மழைசோர திருநாமங்களைச் சொன்னபடியாலே மநஸ்ஸுக்கு ஆராமையாலே ஹர்ஷரூப அத்தாலே ஆநந்தாச்ரு ப்ரவஹிக்க நினைந்துருகியேத்தி இவர்கள் திரளிலேகூடி திருநாமத்தைச் சொன்னபடியாலே திருநாம நவாரவிஷயத்தை நினைத்து அத்தாலேயுருகி, ''உருகிவழிந்து புறப்பட்டசொல'' என லுமபடி ஸ்தோத்ராதிகளைப் பண்ணி நாளும்சீரார்ந்தவித்யாதி ஐச்வர்யப்ரகாசகமான வாத்யகோஷங்கள் ஸமுத்ரகோஷத்தைக் காட்டாநிற்கிற கோயிலிலே திருவனந்தாழ்வான மேலே நித்யவாஸம்பண்ணுகிற யுத்தோந்முகமான திருவாழியைக் கையிலேயுடைய ஸர் வேச்வரனை கண்டு ஸேவித்து துள்ளி ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணி பூதலத்திலென்று காலோ புரளுநாளே விஹ்வலதத்திலே இறுமாந்திருக்கு மிருப்பொழிந்து ஹர்ஷத்தாலே பூமியிலே புரளப்பெறுவது என்றோ. .. ... ... ... ௯

௰ வன்பெருவானகமுய்ய அமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யத்
துன்பமிகுதுயரகல அயர்வொன்றில்லாச் சுகம்வளர அகமகிழும் தொண்டர்வாழ
அன்பொடு தென்திசைநோக்கிப் பள்ளிகொள்ளுமணியரங்கன் திருமுற்றத்தடியார்தங்கள்
இன்பமிகுபெருங்குழுவு கண்டியானுமிசைந்துடனே யென்றுகொலோ விருக்குநாளே.

பதவுரை.— வன் — நைமித்திகப்ரளயத்திலழியாததாய, பெரு — பெருமைதங்கிய, வானகம் — ஸ்வர்க்கம் முதலிய லோகங்கள், உய்ய — உஜ்ஜீவிக்கும்படியாகவும், அமரர் — தேவர்கள், உய்ய — உஜ்ஜீவிக்கும்படியாகவும், மண் — பூலோகம், உய்ய — உய்யவும், மண் உலகில் — பூலோகத்திலுண்டான மனிசர் — மநுஷ்யர், உய்ய — உஜ்ஜீவிக்கவும், மிகு துன்பம் — மிக்க துக்கத்தைவிளைப்பதான, துயர் — பாபங்கள், அகல — நீங்கவும், அயர்வு ஒன்று இல்லா — துக்கம் கலவாத, சுகம் — நிரதிசயமான ஸுகமானது, வளர — வளரவும், அகம் மகிழும் — நிரதிசயாநந்தயுக்தரான, தொண்டர் — ஸ்ரீவைஷ்ணவர்கள், வாழ — வாழவும், அன்பொடு — ஸ்ரீவிபீஷணாழ்வான் பக்கலுண்டான அன்பாலே, தென்திசை நோக்கி — ("தெனதிசையிலங்கை நோக்கி" என்கிறபடியே—)லங்கையைப் பார்த்தவண்ணமாக பள்ளிகொள்ளும் — கண்வளர்ந்தருளுகிற, அணி அரங்கன் — பெரியபெருமாளுடைய திருமுற்றத்து — உள்ளில் திருமுற்றத்திலே மிகு இன்பம் — நிரதிசயாநந்தயுக்தராயிருக்கிற, அடியார் தங்கள் பெரு குழுவு கண்டு — ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பெரியதிரளைக்கண்டு, யானும் — நானும், இசைந்து — அவர்களிலே ஒருவனாய்ச் சேர்ந்து, இருக்கும் நாள் — இருக்குங்காலம், என்றுகொலோ—

வ்யா பத்தாம்பாட்டு. வன்பெருவானகமுய்யஅமரருய்ய — நைமித்திகப்ரளயாபத்துக்கு இளையாத ப்ரஹ்மலோகம் முதலாக மேலுண்டான லோகங்களுய்ய, அங்குண்டான ப்ரஹ்மாதிகளுஜ்ஜீவிக்க வாய்த்து ப்ரஹ்மலோகத்தில் கோயிலாழ்வார் எழுந்தருளியிருந்தபடி. மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்ய — ஸ்ரீவிபீஷணாழ்வானுக்காக அங்கு நின்றும் இங்கே யெழுந்தருளுகையாலே பூமியும் பூமியிலுண்டான சேதநரு முஜ்ஜீவிக்க. துன்பமிகுதுயரகல — நித்யதுக்கத்தை விளைப்பிப்பதான பாபங்கள் அகல. அயர்வொன்றில்லாச சுகம்வளர — துக்கமிச்ரமாத நிரவதிகஸுகம்வளர. அகமகிழுந தொண்டர்வாழ — பகவதநுபவத்தாலே நிரதிசயாநந்தயுக்தரான ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழ. அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும் அணியரங்கன் திருமுற்றத்து — ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு ராஜ்யத்தைக் கொடுத்து அத்தேசத்தைப் பார்த்துக் கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுடைய உள்ளில் திருமுற்றத்திலே அடியார தங்கள இன்பமிகு பெருங்குழுவுகணடு — நிரதிசயாநந்தயுக்தராயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளைக்கண்டு யானுமிசைந்து "அபிஷிக்தக்ஷத்ரியன்" என்று என்னை நினையாதே அவர்களிலே யொருவனாய் விசைந்து. உடனே என்றுகொலோ இருக்குநாளே. என்னைச் சிலர் சேவிக்க நான் நியாமகனாயிருக்கு மிருப்பையொழிந்து ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலே சேவித்திருப்பதென்றோ. .. ... .. ௰.

அ திருநாமப்பாட்டு (க) "ஸம்வாஹஸஹ க்ருஹஸஞ்ஜாம ஸமஸ்தாநாம் நிவாஸஸ்தே ரூபஸமேவதாநாம் । ஸ்ரீவைஷ்ணவாநாம் [illegible] ஸ்ரீ [illegible] ॥"

---

(க) "ப்ரேமோத்துங்கை ப்ரபுஜாம்ப்ரஸாதனம் இமோருபதயை சமோயஸேதேவ தாநாம । ஏரியைராஜ்ஞாம் சோளவம்சோத்பவாநாம ஸ்ரீரங்கம [illegible]ஜாமாஜகாம."

மு — திடர்விளங்குகரைப் பொன்னிநடுவுபாட்டுத் திருவரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும்
கடல்விளங்குகருமேனி யம்மான்றன்னைக் கண்ணாரக்கண்டுகக்குங்காதல்தன்னால்
குடைவிளங்கு விறற்றானைக்கொற்றவொள்வாள் கூடலர்கோன் கொடைக்குலசேகரன்சொற்செய்த
நடைவிளங்குதமிழ்மாலைபத்தும்வல்லார் நலந்திகழ்நாரண னடிக்கீழ்நண்ணுவாரே ௧௧

ப-ரை — விளங்கு— விளங்காநின்ற, திடர்— மேடான, கரை— திருக்கரையை யுடைத்தான, பொன்னி— காவேரிசூழ்ந்த, நடுவுபாட்டு— மத்ய ப்ரதேசத்திலே, திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்—, கடல்— கடல்போலே, விளங்கு— ப்ரகாசிக்குமதாய, கரு— ச்யாமளமான, மேனி— திருமேனியையுடைய அம்மான்தன்னை— ஸர்வேச்வரனை, கண் ஆர— கண்கள் நிறையும்படி, கண்டு உகக்கும் காதல் தன்னால்— கண்டு களிக்கவேணுமென்னுமாசையாலே, விளங்கு— விளங்குகிற, குடை— வெண்கொற்றக்குடையையும், விறல்— வெற்றியையுடைய, தானை— ஸேனையையும், கொற்றம்— ஜயப்ரதமான, ஒள— ஒளிபொருந்திய, வாள— வாளையுமுடையராய், கூடலர்— மதுரையிலுள்ளார்க்கு, கோன— நிர்வாஹகருமாய, கொடை— கொடையையுமுடையரான, குலசேகரன— ஸ்ரீகுலசேகரப்பெருமாள், சொல செய்த— அருளிச்செய்ததாய், நடை விளங்கு— நடைபால் விளங்குகிற, தமிழ்மாலைபத்தும் வல்லார்— தமிழ்த்தொடையான இப்பத்துப்பாட்டையும் சொல்லவல்லவர்கள், நலம் திகழ—சீலாதிகுண பூர்ணரான, நாரணன— பெரியபெருமாளுடைய, அடி கீழ்— திருவடிகளின்கீழே, நண்ணுவார— கிட்டப்பெறுவார்கள் [அறுசீர்க்கழி நெடி லாசிரிய விருத்தம்]

வ்யா திடர்விளங்குகரை யித்யாதி விளங்காநின்ற திருக்கரையை யுடைத்தாய்க் காவேரிசூழ்ந்த திருவரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும் கடல்விளங்கு கருமேனியம்மான்றன்னை கோயிலிலே திருவனந்தாழ்வான் மேலே சாய்ந்தருளுகிற கடல்போலே ச்ரமஹரமான திருமேனியையுடைய ஸர்வேச்வரனை கண்ணாரக்கண்டு உகக்குங்காதல் தன்னால் கண்ணாலே கண்டநுபவிக்க வேணுமென்னும் ஆசைப்பாட்டாலே. குடைவிளங்கு விறல்தானைக் கொற்றவொள்வாள் கூடலர்கோன் விளங்குகிற வெண்கொற்றக் குடையையும் வெற்றியையுடைய ஸேனையையும், ஐச்வர்யப்ரகாசகமான ஆனையையுமுடையராய மதுரைக்கு நிர்வாஹகருமான. கொடைக்குலசேகரன் சொற்செய்த. கொடையாலே சேர்க்கும் பெருமாள் அருளிச்செய்த. நடைவிளங்கு தமிழ்மாலை பத்தும்வல்லார் உள்ளில் அர்த்தத்திலிழிய வேண்டாதே, பதங்களை சேர்ந்த சேர்த்திகளை பார்க்கவேண்டாதே, இது தானே ஆகர்ஷகமாயிருக்கிற தமிழ்த்தொடை பத்தும்வல்லார் நலந்திகழ நாரணனடிக்கீழ் நண்ணுவாரே சீலாதிகுணபூர்ணராய், ஸர்வஸ்வாமியாய், வத்ஸலராயிருக்கும் பெரிய பெருமாள் திருவடிகளின்கீழே அநுபவிக்க ஆசைப்பட்டாப்போலே கிட்டப்பெறுவார்கள்

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அடிவரவு — இருள வாய எம்மா மாவினை இணை அளி மறம்
கோல் தூரா வன திடர் தேட்டு
ஆ. திருமொழி- ௧-க்கு பாட்டு, ௧௧.

—(*)—

## இரண்டாந்திருமொழி, தேட்டரும்- ப்ரவேசம்

அ பகவத்விஷயத்திலே கைங்கர்யத்துக்கு வேண்டுவன சில ஸ்வபாவங்களுண்டு; (க) [“ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்”] ஆநுகூல்யமும் - ப்ராதிகூல்யவர்ஜநமும். பாகவதவிஷயத்திலும் பண்ணுமவை பகவத்விஷயம் பூர்ணமாகையாலே இவனுக்கு ஆநுகூல்யம் பண்ணுகைக்குத் தகையில்லையிறே இப்படி தகையில்லையென்று இவன் கைங்கர்யங்களைக் கிறே இவனுக்குத்தன்னுடைய திருமேனிபாகமும் இவன் திருமஞ்சனம் பண்ணினபோது திருமஞ்சனம் பண்ணியும், அமுது செய்யப்பண்ணினபோது அமுதுசெய்தும் அல்லாதபோது பட்டினியுமாம்படியிறே அவர்களுக்குத் தன்னை யமைத்துவைப்பது, இப்படி பார்த்த இல்லை பாகில பரிபூர்ணவிஷயத்தில இவனுக்கு கிஞ்சித்கரிக்கைக்குத் தகையில்லையிறே (உ) “ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்” என்றும், (ங) “மமப்ராணா ஹி பாண்டவா:” என்றும், “பரகாலி” என்றும் இருக்குமவனாகையாலே, ததீயவிஷயத்திலே பண்ணும் ஆநுகூல்யமும் பகவத்விஷயத்திலே பணிவிக்குமிறே. ஆகையாலே இவரும் தமக்கு இவையிரண்டும் பிறந்தபடியைச் சொல்லுகிறார் பகவத்விஷயத்தில் பிறந்த ஆநுகூல்யம் சொன்னார்- கீழில் திருமொழியில்; ததீயவிஷயத்தில் ஆநுகூல்யம் பிறந்தபடி சொல்லுகிறார் இத்திருமொழியில

*

வியா முதப்பாட்டு. தேட்டருந்திறல் முடிய பாகவதவிஷய முத்தேசயமாயிருக்கும் பகவத்விஷயத்திலே அவகாஹித்தாரென்னுமதிறே “இன்னான் ஆத்தமுடையவன், க்ஷேத்ரமுடையவன்” என்று ஆச்ரயிப்பாரைப்போலே, பகவத்ப்ரத்யாஸத்தி யுடையாரென்றிறே இவர்களைப்பற்றுகிறது பகவத்விஷயத்திலே ஸ்தோத்ரம்பண்ண இழிந்தவர் ஆசார்ய விஷயத்தை ஸ்தோத்ரம்பண்ணப்புக்கு அவர்க்கு நிறமாகச்சொல்லிற்று பகவத் விஷயத்தில் [illegible]யிறே, (ச) “ஜ்ஞாநவைராக்யராசயே”

தேட்டருந்திறற்றேனினைத் தென்னரங்கனைத்திருமாதுவாழ்
வாட்டமில்வனமாலைமார்வனை வாழ்த்திமால்கொள்சிந்தையராய்
ஆட்டமேவியலர்ந்தழைத்தயர் வெய்துமெய்யடியார்கள்தம்
ஈட்டங்கண்டிடக்கூடுமேலது காணுங்கண்பயனாவதே. க.

ப-ரை — தேட்ட— ஸ்வயத்நத்தால தேடுமவர்க்கு, அரு — அரிதாய், திறல்— தன்னை அநுபவிக்கைக்குத் தக்க பலத்தைக் கொடுக்கும், தேனினை— தேன்போலே பரம போக்யனாய், தென— ஸ்ப்ருஹணீயமான, அரங்கனை— திருவரங்கத்திலே நித்யவாஸம் பண்ணுமவனாய், திருமாது— பெரியபிராட்டியார், வாழ்— நித்யவாஸம் பண்ணுமதாய், வாட்டம் இல்— ஒருநாளும் வாடாமல, வனம்— அழகு பெற்றிருக்கிற, மாலை— திருமாலை சாத்தியருளின, மார்வனை— திருமார்புடையவனை, வாழ்த்தி— அவனும் அவளுமான சேர்த்திக்கு மங்களாசாஸநம் பண்ணி, மால்கொள் சிந்தையராய்— பித்தேறின மநஸ்ஸையுடையராய், (அந்தாலே) ஆட்டம் மேவி— ஆடுகையிலே ஒருப்பட்டு, அலர்ந்து— ஊடலின் மிகுதியாலலருந்தி, அழைத்து— வாயபடைத்த ப்ரயோஜநம் பெறக்கூப்பிட்டு,

(க) “ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்” (உ) “ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்” (ங) “மமப்ராணா ஹி பாண்டவா:” (ச) “ஜ்ஞாநவைராக்யராசயே.”

அபர்வு ஆயதும்— மெய் மறந்து நிற்கிற, மெய— அநந்ய ப்ரயோஜநரான, அடியார்கள் தம் கூட்டம்— அடியார்கள் குழாங்களை, கண்டு கூடுமேல— காணக்கூடுமாகில், கண் பயன ஆவது— கண்படைத்த ப்ரயோஜனமாகிறது, அதுகாணும்—அதுவேயாம

வ்யா. தேட்டரும் என்று தொடங்கி ஸ்வயத்நத்தால காணவொண்ணாதென்கை திறல்தேனினை (க) "யஸ்ஸர்வஜ்ஞ:" என்னுமாபபோலே தனனைப் புஙகொடுத்துத் தன்னை யநுபவிக்கைக்கீடான பலத்தையுங்கொடுக்கும் தேன. தேனினைத் தென்னரங்கனை ஸ்ப்ருஹணீயமான திருவரங்கத்திலே நித்யவாஸம் பண்ணுமவனாய், திருமேனியின் ஸ்பர்சத்தாலே ஒருககாலைககொருக்கால் செவவிபெறுமாயதது இட்ட திருமாலை. வாழ்த்தி "வடிவாய நினவலமார்பினில வாழுகின்ற மங்கையும பலலாண்டு" என்கிறபடியே அவளும் இவனும சேர்ந்த சேர்த்திககு மங்களாசாஸநம் பண்ணி மால்கொளசிந்தையராய். பித்தேறின மநஸ்ஸையுடையராய் ஆட்டமேவி ஆடவேணுமெனனும காயபுதயாவனறியிலே ப்ரேமம் ஒட்டாமையாலே ஆட்டமமேவி அலாந்தழைதது அவாநது காயபபாட்டறக கூபபிட்டு அயர்வெயதும் மெய்யடியார்களதம் காயப்ராபதி பொறுமையாலே அறிவுகுடிபோய பாவசராய அநந்யப்ரயோஜநராருடைய. ஈட்டம் இபபடியிருபபார் உமககுளததனைபோ வேணுமெனன; ந அடியார்கள் குழாங்களைக காணபபெறில் கூடுமேல் அதுகாணும் கணபயனாவதே இது கூடிற்றாகில் ப்ரயோஜநம கணணுக்குஇதலலதிலலை தாஃட்பரயோஜநமிது .. .. . ... ... ... க.

மூ —தோடுலாமலர்மங்கைதோளிணை தோய்ந்ததுஞ் சுடர்வாளியால்
நீடுமாமரஞ்செற்றது நிரைமேயததது மிவையேநினைந்
தாடிபபாடியரங்கவோ வென்றழைக்குந் தொண்டரடிப்பொடி
ஆடநாம்பெறிற்கஙகை நீாகுடைந்தாடும் வேட்கையென்னுவதே. உ.

ப-ரை — தோடு உலாம— இதழ்மிசகிருநதுள்ள, மலா— தாமரைப்பூவை வாஸஸ்தாநமாகவுடைய, மங்கை— பெரிய பிராட்டியாருடைய, தோள இணை— திருததோள்களோடு, தோய்ந்ததும— அணைநதருளினதும, சுடா— புசரையுடைய, வாளியால— அம்பாலே, நீடு- உயர்ந்த, மாமரம்- மாமரஙகளேழையும, செற்றதும- (ஒருக்காலே துளைபாமபடி) எய்ததும், நிரை மேய்த்ததும— பசு நிரையை மேய்த்ததும, (ஆகிய,) இவையே நினைந்து- இந்த சிலா திருகுணஙகளையே நினைதது, ஆடி— ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே இருநதவிடத்திலிருக்கமாட்டாதேயாடி, பாடி— அதுசகுப போக்குவிட்டுப்பாடி, ஓ அரஙக என்று அழைக்கும- ஓ அரங்கனே என்று கூபபிடுகிற, தொண்டர்- தாஸபூதரான ஸ்ரீவைஷ்ணவாகளுடைய, அடி பொடி— பாதரேணுக்களிலே, நாம்—, ஆட பெறில— அவகாஹிசகுமபடி பான பாகபததைபபெறுல, கஙகைநீா- கஙகாஜலததிலே, குடைநது- அவகாஹிதது, ஆடும- நீராடுதலில உணடாகும, வேட்கை- ஆசையானது, என ஆவது- எனன ப்ரயோஜநததை யுடையது

வ்யா. இரண்டாமபாட்டு தோடுலாமலாமங்கை தோளிணைதோய்ந்ததும். இதழமிக்கிருநத தாமரைபபூவை வாஸஸ்தாநமாகவுடைய பெரியபிராட்டியார திருத்தோளகளிரண்

(க) "யஸ்ஸர்வஜ்ஞ:"

டையும் தோய்ந்தது கனிபன பெருவெள்ளத்திலே யிழிந்து அநுபவிக்கத் தேடினாப் போலே தோய்த்ததும் சுடர்வாளியால் புகரையுடைய அம்பாலே, நீடுமாமரமசெற்றதும் ஓக்கத்தையுடைத்தான மராமரங்களேழையும், பண்டேதுலையானவற்றிலே ஒட்டினாப் போலேயாய்த்தது, அநந்தமாய பலவத்தரமான ஸப்தஸாலத்தை நிரஸித்ததும் ஆச்ரிதரை விச்வஸிப்பிக்கும் செயலிறே நிரைமேய்த்ததும் உபயவிபூதி நாயகனாயிருந்து வைத்து கையிலே ஒருகோலையுங்கொண்டு பசு மேய்த்ததும். இவையே நினைந்து இந்த சீலகுணங்களையே நினைந்து. இவற்றை நினைக்குமதொழிய வேறொரு ப்ரயோஜநத்தையும் சணிசியாதே ஆடிப்பாடி. பரிதிபாகாஷத்தாலே யிருக்கமாட்டாதே ஆடிப்பாடி அரங்கவோ என்றழைக்கும் பெருமாள் திருநாமத்தைச் சொல்லி ஆற்றமாட்டாதே கூப்பிடும். தொண்டரடிப்பொடியாட நாம்பெறில் பரவசகுணவித்தரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுக்களிலே அவகாஹிக்கப்பெறில் எப்போதுமொக்க பகவத்ஸம்பந்தமுடையராகையாலே தீர்த்தபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுக்களிலே அவகாஹிக்கப்பெறில் கங்கை நீர்குடைந்தாடும் வேட்கையென்னவதே காதாசித்கஸம்பந்தமேயாய் பகவச்சுத்தலைகளிலே புகரு உபகரிப்பட்ட கங்கைபாடிறல் என்ன ப்ரயோஜநமுண்டு [ ''நலந்திகழ் சடையான'' இத்யாதி ] பொதுவானவிறே அது

மூ — ஏறடர்த்ததுமேனமாய நிலங்கீண்டது முன்னிராமனாய<br>
மாறடர்த்தது மண்ணளந்ததுஞ் சொல்லிப்பாடி வண்பொன்னிப்பேர்<br>
ஆறுபோல்வருங் கண்ணநீர்கொண்டரங்கன் கோயிற்றிருமுற்றம்<br>
சேறுசெயதொண்டர் சேவடிச்செழுஞ் சேறென் சென்னிக் கணிவனே ங

ப-ரை — ஏறு- ரிஷபங்களேழையும், அடர்த்ததும்- ( நப்பின்னைப் பிராட்டிக்காக ) ஒருகாலேகொன்றதும், ஏனம்ஆய்- மஹாவராஹமாய், நிலம்- அண்டபித்தியிலே சேர்ந்த பூமியை, கீண்டதும்— (ஸ்ரீபூமிப்பிராட்டிக்காக) ஒட்டுவிடுவித்தெடுத்ததும், முன்— இராவணன பிராட்டியைப் பிரித்தவன்று, இராமன்ஆய — சக்ரவர்த்தித்திருமகனாகத் திருவவதரித்தருளி, மாறு- எதிரியான ராவணனை, அடர்த்ததும் கொன்றதும், ( ஆச்ரிதனான இந்த்ரனுக்காக, ) மண்- மஹாபலி கைக்கொண்டபூமியை, அளந்ததும் சொல்லி- அளந்து அவனுக்குக் கொடுத்ததும் ஆகிய சரிதங்களைச்சொல்லி பாடி- ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பாடி, வண்— பெருவெள்ளத்தையுடைய, பெரு- பெரிய, பொன்னி ஆறு- காவேரிபோலே, வரும்— வருகிற, கண் நீர் கொண்டு- கண்ணீராலே, அரங்கன்- அழகியமணவாளனுடைய, கோயில- கோயிலின், ( அலங்கரிக்கப்பட்டிருக்கிற, ) திருமுற்றம்- உள்ளில் திருமுற்றத்தை, சேறுசெய— சேறாக்கிவிடும் தொண்டர்— தாஸபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, சே அடி — திருவடிகளால் துகையுண்ட, செழு சேறு— அழகிய சேற்றை, என் சென்னிக்கு அணிவன- என் சிரஸ்ஸிலே தரிப்பேன்.

வ்யா முன்றும்பாட்டு ஏறடர்த்ததும் நப்பின்னைப் பிராட்டியோட்டை ஸம்ச்லேஷத்துக்கு இடைச்சுவரான ரிஷபங்களேழையு மடர்த்ததும். ஏனமாயநிலங்கீண்டதும் ஸ்ரீபூமிப்பிராட்டியோட்டை ஸம்ச்லேஷத்துக்கு இடைச்சுவரான விரோதியாய் அவர்களுக்கு பாகாரமான பூமியைப்ரளயங்கொள்ள உதவித்தலெனனும் அறியாதபடி மஹாவராஹமாய் அண்டபித்தியிலே புக்கு ஒட்டினபூமியை ஒட்டுவிடுவித்து. முன்னிராமனாய்மாறடர்த்ததும். பிராட்டியைப் பிரித்த வையல் எதிரியைக் கொன்றதும் மண்ணளந்ததும்

பிராட்டி போட்டடை ஸமசஷ்டை விரோதியைப் போக்கினாப்போலே இந்தாரேனுடு விரோதித்த மஹாபலி கைக்கொண்ட பூமியையிட்டு எல்லைநடந்து கொடுத்தனுர் சொலலிபபாடி இவ படாநங்களைச்சொல்லி ப்ரீதி ப்ரகர்ஷத்தாலேயாம். வண்பொன்னிப பேராறுபோல வருக கண்ணீர்கொண்டு காவேரி, பெருவெள்ளமாய் மலைபண்டங்கொண்டு வருமாபபோலே அமைக்கவில்லாதே கடல்குப்பாக வெள்ளமிடுகிற கண்ணீரைக்கொண்டு அரங்கனகோயில திருமுற்றம் சேறுசெயதொண்டர் அங்குப்பாங்காசக் திருவலகு திருப்பணிசெய்து வைத தால் இவர்கள அதனைக சணனியாலே சேறாக்குவர்களாய்த்து சேவடிச்செழுஞ்சேற்றெஞ் சென்னிக்கணிவனே அமங்கலமான புழுதியைப் பாலே அலங்கரித்துள்ள க்ஷேத்ர மகளார் தமான ஸ்ரீவைஷ்ணவர்களின் திருவடிகளில் அழகியசேற்றை யணிவன . கூ

மூ — தோயத்தத்தண்டயிர் வெண்ணெய பாலுடனுண்டவ முடனுய்ச்சிகண
டார்த்ததோளுடையெம்பிரா னென்னரங்கனுக கடியர்களாய
நாத்தழும்பெழ நாரணுவென்றழைத்து மெய்த்தழும்பத்தொழு
தேத்தியின்புறுந்தொண்டர் சேவடியேத்திவாழ்த்து மென்னெஞ்சமே ௩

ப-ரை — தோய்த்த- உறைக்கப்பட்டிருப்பதாய, தண- குளிர்ந்த, தயிர்- தயிரையும், வெண்ணெய்- உறியில் சேமித்துவைத்த வெண்ணெயையும, பால்- குடங்களில் நிறைத்துவைத்த பாலையும, உடன்- ஒரே காலத்திலே, உண்டலும்- அமுது செய்தவாறே, ஆய்ச்சி- தாயாரான யசோதைப்பிராட்ட, கண்டு- பார்த்து, உடன்று- கோபித்து, ஆர்த்த — பிடித்துக்கட்டின, தோள் உடை— தோளையுடையனாய, எம பிரான் என்னை அடிமைகொண்டவனாய், என் அரங்கனுக்கு- எனக்கு சேஷியான அழகிய மணவாளனுக்கு, அடியார்கள் ஆய்- சேஷபூதராய், நா தழும்பு எழ- நாவானது தழும்பேறும்படி, நாரணு என்று அழைத்து- அவன் திருநாமத்தை அடைவுகெடச் சொல்லி, மெய் தழும்ப- மெய் தழும்பேறும்படி, தொழுது- பாணிமம்பண்ணி, ஏத்தி- ஸ்தோத்ரம்பண்ணி, இன்புறும்- ஆநந்தயுக்தராயிருக்கிற, தொண்டர்- ஸ்ரீவைஷ்ண வர்களுடைய, சேர் அடி- ஸ்ரீபாதங்களை, என்மனம்- என்னுடைய மனஸ்ஸானது, ஏத்தி- ஸ்தோ த்ரம்பண்ணி, வாழ்த்தும்- மங்களாசாஸநம்பண்ணும்.

வ்யா — தானைமம்பாட்டு. தோயத்த தண்தயிர் வெண்ணெய பால். சடைந்துபிரித்த வெண்ணெய், அதுக்குமுபபாகத் தோய்த்த தயிர், அதுக்கடியான பால் உடனுண்டலும் இவையடங்கலும் நிச்சேஷமாக ஒருக்காலே அமுது செய்தவாறே. உடன்று உடைகளொ ஞவிட்டவாறே கோபித்தாள். [தீசா வெகுளியளாய்] ஸ்நேஹததுக்கு அவதியுண்டாகிலி றே கோபத்துககு அவதியுண்டாவது ஆய்ச்சிகணடு வாயதுகையதுவாகக் கொணடி போடே கணடுபிடித்தாளாய்த்து ஆர்த்ததோளுடை யெம்பிரான் கண்டவாறே பிடித்துக கொண்டு கட்டினுள் எம்பிரான. ஆஸ்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யததாலல்லது செல்லாமை காட்டி என்னை அநந்யார்ஹனுக்கினவன் என்னரங்கனுககடியார்களாய அவதாரகாலத்தில் இழந்தாரிழவுதீரவநது ஸுலபரான பெரிய பெருமாளுடைய செயலாலே யெழுதிக்கொடு தவர்களாய்த்து நாத்தழும்பெழ நாவானது தழும்பேறும்படி. நாரணுவென்றழைத்து. "அம்மே" என்பாரைபபோலே திருநாமத்தை அடைவுகெடச்சொல்லி. மெய்த்தழும்பத் தொழுது பாணிமம பணணினபடி தோற்ற உடம்பெல்லாம் தழும்பாகச் சிறியாத்தானேப

போலே யேத்தி இப்படிப்பட்ட செயல்களைச் சொல்லியேத்தி, இன்புறுந்தொண்டர்சேவடி மால்யிலே வைத்தேத்துகையாலே விஷயத்தைக் கிட்டினால் பிறக்கும் நிரதிசயானந்த யுக்தராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீபாதங்களை தொண்டர் சேவடியேத்தி வாழ்த்து மென்னெஞ்சமே அவர்கள் தாங்கள் அகப்பட்ட ஸௌந்தர்யத்தில் போகாது என்னெஞ்சு அதிலே யகப்பட்டவர்கள் தங்களை ஏத்திவாழ்த்து மித்தனை. ஏத்திவாழ்த்தும் இச்செயலுக்கு இவர்கள் நிலவராவதே! என்று ஸ்தோத்ரத்தைப்பண்ணி, இது நித்யமாக வேணுமென்று மங்களாசாஸநம் பண்ணும் என்னெஞ்சு. . . . . ச

> ரு—பொய்சிலைக்குரலேற் றெருத்தமிறுத்துப் போரவாவத்தகோன்
> செய்சிலைச்சுடர் சூழொளித்திண்ண மாமதிள் தென்னரங்கனாம்
> மெய்சிலைக்கருமேகமொன்று தன்னெஞ்சுணின்று திகழப்போய்
> மெய்சிலிர்ப்பவர் தம்மையே நினைந்தென்மனம் மெய்சிலிர்க்குமே ௫

ப—ரை —பொய—க்த்ரிமமாய, சிலை— ரோஷத்தையுமுடைத்தான, குரல் — த்வநியையுடைய, ஏறு— ரிஷபங்களினுடைய, எருத்தம்— கழுத்துக்களை, இறுத்த— முறித்தவனும், போர— யுத்தோந்முகமான, அரவு— காளியனாகிற ஸர்ப்பத்தை, சுர்த்தநிரஸித்த, கோன— நாதனானவனும், சிலை— கல்லினாலே, செய்— செய்யப்பட்டு, சுடர் ஒளி— மிக்கஜ்யோதிஸ்ஸை யுடைத்தாய், திண்— திண்மையையுடைய, மா— உயர்த்தியையுமுடைய, மதிள்— மதிள்களாலே, சூழ்— சூழப்பட்டு, தென்— ஸ்லாக்யமான, அரங்கன் ஆம— ஸ்ரீரங்கத்தில் நித்யவாஸம் பண்ணும் அழகிய மணவாளனாகிய; மெய் — சரீரத்தில், சிலை— இந்த்ரதநுஸ்ஸோடு கூடின, கரு— கறுத்த, மேகம ஒன்று— ஒருமேகமானது, தன நெஞ்சுள் — தன மநஸ்ஸில், நின்று— நிலை பெற்று, போய்திகழ— மிகவும்விளக்கும்படி, மெய் சிலிர்ப்பவர் தம்மையே நினைத்து புளகிதகாத்ரராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களையே நினைத்து, என் மனம்— என் மனஸ்ஸானது, மெய— மெய்யே, சிலிர்க்கும்— புளகியா நின்றது

வ்யா க்யாநம்பாட்டு பொய்சிலைக் குரலேற்றெருத்தமிறுத்து. பொய்- க்த்ரிமம், சிலை-கோபம அஸுராவேசத்தாலே க்த்ரிமமாய்கோபத்தையுமுடைத்தாயிருந்துள்ள வடிவுபெருத்து நப்பின்னைப் பிராட்டியோடை ஸம்ஸ்லேஷத்துக்கு விரோதியானவையுமாய்ப் பொருகிறவையுமாய்ச் சிலைபோலே கோபமான த்வநியை யுடைத்தாயிருந்துள்ள ரிஷபங்களைக் கழுத்தை முறித்து போரரவுரர்த்தகோன. திருவாய்ப்பாடியில் பசுக்களும இடையரும தண்ணீர் குடிக்கவொண்ணாதபடி ஜலத்தை தூஷித்துக்கொண்டுகிடந்த காளியன், யுத்தோந்முகனாய்ப புறப்படும்படி கலக்கிப் பொய்கையில்நின்றும் போகவிட்டு, அத்தாலே திருவாய்ப்பாடியிலுள்ளார்க்கு நாதனானவன் செய்சிலைச்சுடர் சூழொளித்திண்ணமா மதிள தென்னரங்கனும் கல்லாலே செய்யப்பட்டுப் பிறரால் அபிபவிக்கவொண்ணாதபடியான மதிளை யுடைத்தான நிலையாலும ஒக்கத்தாலும் விஞ்சின திருமதிள்கள் பலவுஞ் சூழ்ந்திருக்கிற கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற. மெய்சிலைக் கருமேகம் உடம்பிலே வில்லையுடைய மேகமென்னுதல் மெய்யே வில்லோடே கூடின மேகந்தானென்னுதல ஒன்று தன் னெஞ்சுள நின்றுதிகழப்போய (க) “ பொரமையநு ஷ்ணகாரணாத்” என்னுமாப்போலே

(க) “ சோபயர் தண்டகாரண்யம் ”

மாணிக்கக்குப்பியில் உள்ளு நின்றதிலே புறம்பே தெரியுமாப்போலே பெரியபெருமாளைத் தங்கள் நெஞ்சிலே எழுதக்கருதுகின்ற வைக்கையாலே நிழலிட்டுத் தோற்றுகிறது. மெய்சிலிர்ப்பவர். உள்ளே எழுந்தருளியிருக்கிறபடியை ஆதரித்த பாகவதர்களாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் தம்மை நினைத்து. என்மனமே மெய்சிலிர்க்குமே. பெரியபெருமாளை அநுபவித்து அவர்களுடைய படிப்பாட்டை, அவர்களை அநுபவித்து எம்பெருமானார் பட்டதெல்லாம் படாநின்றது அவர்க்கு ப்ரக்ருதம். தி.

மூ — ஆதியந்தமனந்தமற்புதமான வானவர்தம்பிரான்
பாதமாமலர்சூடும் பத்தியிலாதபாவிகளுய்ந்திட
நீதிநன்னெறிகாட்டி யெங்குந்திரிந்தரங்கனெம்மானுக்கே
காதல்செய்தொண்டர்க் கெப்பிறப்பிலுங் காதல்செய்யுமென்னெஞ்சமே. க

ப-உரை — ஆதி — ஜகத்காரணபூதனாய், அந்தம் — ப்ரளயகாலத்திலும் அழிவையின்றி யிருக்குமவனாய், அநந்தம் — கார்யகாரணங்களிலெல்லாம் வ்யாபித்து நிற்குமவனாய், அற்புதம் — ஆச்சர்யபூதனாய், ஆன — எப்போதும்பொருந்த உளனாயிருக்கிற, வானவர்தம்பிரான் — நித்யஸூரிகளுக்கு நாதனான ஸர்வேச்வரனுடைய, பாதம் — திருவடிகளிலே, மா — ச்லாக்யமான, மலர் — தாமரைமலர்களை, சூடும் — சிரஸாலே தரிக்கைக்கீடான, பத்தி இலாத — பக்தி இல்லாத, பாவிகள் — பாபிகளானவர்கள், உய்ந்திட — உஜ்ஜீவிக்கும்படி, எங்கும் — தேசமெங்கும் புக்கு, திரிந்து — ஸஞ்சரித்து, நீதி இல் — குற்றமில்லாத, நல் நெறி — நல்வழிபோம்படி, காட்டி — தாங்கள் அநுஷ்டித்துக் காட்டி, எம்மான் — என்னை அநந்யார்ஹனாக்கின, அரங்கனுக்கு — பெரியபெருமாள் திருவடிகளிலே, காதல்செய — பக்தியையுடையராயிருக்கிற, தொண்டர்க்கு — ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, என் நெஞ்சம் — என மனஸ்ஸானது, எப்பிறப்பிலும — அநேக ஜந்மங்களிலே, (அவர்களுக்கு அடிமைசெய்யவேணு மென்று,) காதல்செய்யும் — ஆசைப்படாநின்றது.

வ்யா — ஆதியம்பாட்டு ஆதி ஜகத்காரணபூதன் அந்தம் ப்ரளயகாலத்திலும் அழிவற்று நிற்குமவன் அநந்தம். காரணாவஸ்தையிலும் கார்யாவஸ்தையிலும் பொருந்த வ்யாபித்து நிற்குமவன் அற்புதம் காரணாவஸ்தைபோலே ஸதவஸ்தனாய் நிற்குமத்தோடு வாசியற நிற்குமவிலக்ஷணன் வேறொரிடத்தில் காணவொண்ணாதென்னும்படியிருக்கும் ஆச்சர்யபூதன். ஆனவானவர்தம்பிரான ஆனபோதும் அடர்ந்தபோதும் எப்போதும்பொருந்த உளனாயிருக்கும் நித்யஸூரிகளுக்கு நாதன உபயவிபூதிநாதனென்றபடி. பாதமாமலர்சூடும் பத்தியிலாத. அவன் திருவடிகளாகிற செவ்வித்தாமரையைச் சூடும் பக்தியையுடையராயிருக்கையாய்த்து கர்த்தவ்யம், அதில்லாத பாவிகளுய்ந்திட. பக்தியில்லாத மஹாபாபகளைப் பண்ணி, (க) "ஸவஜேவ" என்னும்படியிருக்கிற தேசமெங்கும் புக்கு ஸஞ்சரித்து அவர்களை பக்தியுண்டாக்கி உஜ்ஜீவிப்பிக்கைக்காக, நீதிநன்னெறிகாட்டி. தீமையோடேகூடின நெறியன்றிக்கே, சேதநர் நல்வழிபோம்படி தாங்கள் ஆசரித்துக் காட்டி. எங்குந்திரிந்து புகக்கடவதல்லாத தேசமெங்கும் புக்கு ஸஞ்சரித்து. அரங்கனெம்மானுக்கே காதல்செய தொண்டர்க்கு. என்னை அநந்யார்ஹனாக்கின பெரியபெருமாள் திருவடிகளிலே பக்தி

(க) "அஸந்நேவ"

யுண்டாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு. எப்பிறப்பிலும் காதல்செய்யுமென்னெஞ்சமே அநேக ஜந்மங்கள் பிறந்து அவர்களுக்கு அடிமை செய்கையிலும் ஆசைப்படாநின்றது என்னெஞ்சு. ... . ௬.

மூ — காரினம்புரை மேனிநற்கதிர் முத்தவெண்ணகைச் செய்யவாய
ஆரமார்வன ரங்கனென்னு மரும்பெருஞ்சுட ரொன்றினைச்
சேருநெஞ்சின ராகிச்சேர்ந்து கசிந்திழிந்தகண்ணீர்களால்
வாரிநிற்பவர்தாளிணைக்கொரு வாரமாகுமென்னெஞ்சமே ௭.

ப-ரை.— கார் இனம் புரை— மேகக்கூட்டத்தைப்போன்ற மேனி— திருமேனியையும், நல்— நல்ல கதிர்— ஒளியையுமுடைய, முத்தம்— முத்துக்களைப்போன்ற, வெள்— வெளுத்த நகை— திருமுத்துக்களையும், செய்ய— சிவந்த, வாய்— திருப்பவளத்தையும், ஆரம்— முத்துஹாரம்பூண்ட, மார்பன்— திருமார்பையுமுடையரான, அரங்கன் என்னும்— பெரியபெருமாளென்னும் திருநாமத்தையுடையரான, அரும்பெருஞ்சுடர்— நிரவதிகதேஜோரூபரான, ஒன்றினை— அத்விதீயரானவரை, சேரும்— கிட்டவேணுமென்கிற, நெஞ்சினர் ஆகி— மனஸ்ஸையுடையராய்க்கொண்டு, சேர்ந்து— அவரைக் கிட்டி, கசிந்து இழிந்த— ப்ரேமத்தாலே பெருகின, கண்ணீர்கள் வாரி நிற்பவர்— கண்ணீர் ப்ரவாஹத்துக்குப்படி நிற்பவர்களுடைய, தாள்இணைக்கு— திருவடிகளுக்கு என் நெஞ்சம்— என்னுடையதான நெஞ்சு ஒரு வாரம் ஆகும்— ஒப்பற்ற பக்தியுடையதாகின்றது.

வயா க்யாநம்:— காரினம்புரைமேனி "தொக்கமேகபல குழாங்கள்" "கார்த்திரளனையமேனி" என்கிறபடியே அழகிய திருமேனியையுமுடையராய் நல்கதிர்முத்தவெண்ணகைச் செய்யவாய், கண்டாரைப் போகாமல் துவக்கவல்ல வெண்மையையுடைய முத்துநிரைபோலே இருக்கும் தந்தபங்க்தியையும், இதுக்குப் பர்யாப்தமான திருவதரத்தில் பழுப்பையுமுடையராய். ஆரமார்பன் "பெரிய வரைமார்பில் பேராரம் பூண்டு" என்று ஐச்வர்ய ப்ரகாசகமாம்படி இட்டுப் பூணவேண்டும்படியுள்ள ஹாரத்தையும் திருமார்பிலேயுடையரா யிருக்கிற அரங்கனென்னும் அரும் பெருஞ்சுட ரொன்றினை பெரியபெருமாளென்று உபயவிபூதியிலும் ப்ரஸித்தராய் நிரவதிகதேஜோரூபராய் அத்விதீயரானவரை. சேருமனெஞ்சினராகி. அவரைவந்து கிட்டும்போது விலக்காமை யடியாகப் பிறந்த பக்தியையுடையராய். சேர்ந்துகசிந்திழிந்த கண்ணீர்களால வாரநிற்பவர் தாளிணைக்கு அவனைக்கிட்டி நிரதிசய பக்தியுக்தராய்க் கண்ணுங் கண்ணீருமாய் நிற்குமவர்களுக்கு பக்தி பாரவச்யதாலேயிறே என்று அங்குத்தைக்கும் இவர்களுக்குமாய் நில்லாதே இவர்களுடைய திருவடிகளுக்கு ஒருவாரமாகுமென்னெஞ்சமே அநந்யப்ரயோஜநமாய் நில்லாநின்றது என்னெஞ்சு . ... .. .. ... .. ௭

மூ — மாலையுற்ற கடற்கிடந்தவன் வண்டுகிண்டு நறுந்துழாய
மாலையுற்றவரைப் பெருந்திருமார்பனை மலர்க்கண்ணனை
மாலையுற்றெழுந் தாடிப்பாடித்திரிந் தரங்கனெம்மானுக்கே
மாலையுற்றிடுந் தொண்டர்வாழ்வுக்கு மாலையுற்ற தென்னெஞ்சமே. ௮.

ப-ரை — மாலை உற்ற— அலையெறிகிற, கடல்— திருப்பாற்கடலிலே, கிடந்தவன்— கண்வளர்ந்தருளுமவனாய், வண்டு— வண்டுகள், கிண்டு— குடையா நின்றுள்ள,

அ. எழுபத்திரண்டாம்பாட்டு. ருத்ரன் லோகத்திலே மோக்ஷப்ரதனென்று ஆச்ரயிப்பாரும் ஆகமாதிகளிலே பரத்வத்தை ப்ரதிபாதித்துமன்றோ போருகிறதென்னில்; நிர்தோஷச்ருதியில் அவனை க்ஷேத்ரஜ்ஞனாகச் சொல்லுகையாலே லோகப்ரஸித்தி வடயக்ஷப்ரஸித்திபோலே அயதார்த்தம், ஆகமாதிகள் விப்ரலம்பகவாக்யவத் அயதார்த்தமென்கிறார்.

மூ.—போதின்மங்கைபூதலக் கிழத்திதேவியன்றியும்
போதுதங்குநான்முகன் மகனவன்மகன்சொலில்
மாதுதங்குகூறனேற மூர்தியேன்றுவேதநூல்
ஓதுகின்றதுண்மையல்ல தில்லைமற்றுரைக்கிலே. எஉ.

ப-ரை.— போதில் மங்கை–தாமரைமலரில் திருவவதரித்த பெரியபிராட்டியாரும், பூதலம் கிழத்தி—ஸ்ரீபூமிப்பிராட்டியும், தேவி—மஹிஷிகள்; அன்றியும்–அதுக்குமேலே, போது தங்கு நான்முகன்—கமலாஸநனனப்ரஹ்மா, மகன்—புத்ரன்; அவன்—அந்தப்ரஹ்மாவினுடைய, மகன் சொலில்—மகன்பேரைச்சொல்லப்புகில், மாது—பார்வதியை, தங்கு கூறன்–இடது பக்கத்திலேயுடையருத்ரன்; ஏறு அது—ரிஷபமானது, ஊர்தி–அவனுக்கு வாஹநம்; என்று—ஸ்ரீபூமீஸஹிதன் ப்ரஹ்மாவுக்கு உத்பாதகன் ப்ரம்ஹோத்பந்நன் ருத்ரனென்று, வேதம் நூல்—வேதமாகிற சாஸ்த்ரம், ஓதுகின்றது—சொல்லுகிற அர்த்தமே, உண்மை—ஸத்யம்; மற்று—அதுக்குப் புறம்பாக, உரைக்கில்—ஓரர்த்தம் சொல்லில், அல்லது இல்லை—அது அஸத்யமல்லதுவேறன்று.

வ்யா. போதில்மங்கைபூதலக்கிழத்திதேவி. தாமரையிலேபிறப்பையுடைய பிராட்டியும், ஸ்ரீபூமிப்பிராட்டியும் மஹிஷிகள். (க) "ஹ்ரீச்சதேலக்ஷ்மீச்சபத்ந்யௌ" என்றும் (உ) "பத்மேஸ்திதாம் பத்மவர்ணாம்" என்றும் சொல்லக்கடவதிறே. அன்றியும். ஸ்ரியப்பதித்வமேபோரும் ஸர்வாதிகன் ஸர்வ ஸமாச்ரயணிய னென்கைக்கு, ஸ்ரியப்பதித்வத்துக்கு மேலில்லையிறே. அன்றியும்–அதுக்குமேலே. போதுதங்கு நான்முகன்மகன். திருநாபிகமலத்திலே பிறக்கையாலே கமலாஸநனன சதுர்முகன் புத்ரன். (ங) "அஜஸ்யநாபாவத்யேகமர்ப்பிதம் யஸ்மிந்நிதம் விச்வம்புவநமதிச்ரிதம் ஸப்ரஜாபதிரேகஃ புஷ்கரபர்ணேஸமபவத்" என்னக்கடவதிறே. அவன்மகன் சொலில் மாதுதங்குகூறனேறதூர்தி. (ச) "ஏகஏவருத்ரஃ ஸர்வோஹ்யேஷருத்ரஃ" என்கிற பரசம்ஸாவாக்யங்களையும் ஆகமாதிதந்த்ரங்களையுமொழிய அவன் ஸ்வரூபத்தையுள்ளபடியே (ரு) "ப்ரஹ்மணேபுத்ராய ஜ்யேஷ்டாய" இத்யாதி நிர்த்தோஷ ச்ருதிப்ரக்ரியையாலே சொல்லப்பார்க்கில், அவன் ப்ரஹ்மபுத்ரன். "மாதுதங்குகூறன்" என்கிறது - ப்ரஹ்மாவினுடைய மாநஸஸ்ர்ஷ்டியொழிய யோஷித்புருஷ ஸம்யோகத்தாலே பிறக்கும் ஸ்ர்ஷ்டிக்கு ப்ரதமகன்யனென்று இவனுடைய க்ஷேத்ரஜ்ஞத்வம் தோற்றுகைக்காக. (சா) "ப்ருகுடீகுடிலாதஸ்யலலாடாத்க்ரோததீபிதாத் ஸமுத்பந்நஸ்ததாருத்ரோ மத்யாஹ்நார்க்கஸமப்ரபஃ அர்த்தநாரீநரவபுஃ ப்ரசண்டோதிசரீரவாந்" என்று ப்ரஹ்மாவினுடைய ஸ்ர்ஷ்டிப்ரகரணத்திலே சொல்லக்கட

(க) "ஹ்ரீச்சதேலக்ஷ்மீச்சபத்ந்யௌ" (உ) "பத்மேஸ்திதாம் பத்மவர்ணாம்" (ங) "அஜஸ்யநாபாவத்யேகமர்ப்பிதம் யஸ்மிந்நிதம் விச்வம்புவநமதிச்ரிதம் ஸப்ரஜாபதிரேகஃ புஷ்கரபர்ணேஸமபவத்" (ச) "ஏகஏவருத்ரஃ ஸர்வோஹ்யேஷருத்ரஃ" (ரு) "ப்ரஹ்மணேபுத்ராய ஜ்யேஷ்டாய" (சா) "ப்ருகுடீகுடிலாதஸ்யலலாடாத்க்ரோததீபிதாத் ஸமுத்பந்நஸ்ததாருத்ரோ மத்யாஹ்நார்க்கஸமப்ரபஃ அர்த்தநாரீநரவபுஃ ப்ரசண்டோதிசரீரவாந்"

வதிறே. “ஏறதூர்தி” என்று - வேதமயனான பெரியதிருவடிக் கெதிராக ரிஷபத்தை வாஹநமாகக்கொண்டிருக்கிற துர்மாநம் தோற்றுகைக்காக. என்று வேதநூலோதுகின்ற துண்மை. ஸ்ரீ பூமிஸஹிதன் ப்ரஹ்மாவுக்கு உத்பாதகன், ப்ரஹ்மோத்பந்நன் ருத்ரனென்று வேதாக்யசாஸ்த்ரமோதுகிற அர்த்தமே ஸத்யம். அல்லதில்லை மற்றுரைக்கிலே. அதுக்குப் புறம்பாக ஓரர்த்தம்சொல்லில் அது அஸத்யம். ஸௌபர்ணவைகுண்டஸம்வாதே- (க) “ [illegible] ” இத்யாதி. ... எஉ.

அ. எழுபத்துமூன்றும்பாட்டு. ஸ்ரீயஃபதியே ஆச்ரயணீயன், ப்ரஹ்மருத்ரர்கள் க்ஷேத்ரஜ்ஞராகையாலே அநாச்ரயணீயரென்றதாய் நின்றது - கீழ்; இதில் அந்த ஸ்ரீயஃபதி தான் தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காக மநுஷ்ய ஸஜாதீயனாய்த் தன்னைத்தாழவிட்டுக் கொண்டு நின்றநிலையிலே ப்ரஹ்மருத்ரர்களுடைய அதிகாரத்திலே நின்றார்க்கு மோக்ஷப்ரத னென்றுகொண்டு தேவதாந்தரங்களுக்கும் ஸர்வேச்வரனுக்குமுண்டான நெடுவாசியை அருளிச்செய்கிறார்.

மூ.—மரம்போதச்சரந்துரந்து வாலிவீழமுன்னோர்நாள்
உரம்போதச்சரந்துரந்த வும்பராளியெம்பிரான்
வரங்குறிப்பில்வைத்தவர்க் கலாதுவானமாளிலும்
நிரம்புநீடுபோகமெத் திறத்தும்யார்க்குமில்லையே. எஙா.

ப-ரை.— (மஹாராஜருக்கு நம்பிக்கையுண்டாக்குகைக்காக,) மரம் - மராமரங்கள், போத—மறுபாடுருவும்படி, சரம் துரந்து—திருச்சரங்களை யேவி, முன் ஓர் நாள்—முன் பொரு த்ரேதாயுகத்திலே, வாலி—வாலியானவன், வீழ—தரையிலே விழும்படி, உரம் — அவனுடைய மார்வு, போத - மறுபாடுருவும்படி. சரம் துரந்து - அம்புவிட்டருளினவனாய், உம்பராளி—நித்யஸூரிகளை அடிமைகொள்ளுமவனாய், எம்பிரான்—அச்செயலாலே என்னை யெழுதிக்கொண்டவன்; (இப்படிப்பட்ட தசரதாத்மஜனுடைய,) வரம் - ச்ரேஷ்டமான, குறிப்பில் வைத்தவர்க்கு அலாது — திருவுள்ளத்தாலே விஷயீகரிக்கப்பட்டவர்களுக்கல்லது, (ஜ்ஞாநாதிகனான சதுர்முகனாய்,) வானம் ஆளிலும் - ப்ரஹ்மலோகத்தை நிர்வஹிக்கப்பெற்றாலும், நிரம்பு—குறைவற்று, நீடு போகம்—நித்யமானமோக்ஷம், எத்திறத்தும்— கர்மாத்யுபாயங்களை அநுஷ்டித்தாலும், யார்க்கும் இல்லை - அநந்யப்ரயோஜநர்க்கும் ஸித்தியாது.

வ்யா. மரம்போதச்சரந்துரந்து. மஹாராஜருடைய விச்வாஸார்த்தமாக மராமரங்களை மறுபாடுருவத்திருச்சரத்தையேவி. இத்தால்—தன்னுடைய ரக்ஷணத்திலே அதிசங்கைபண்ணினார்க்கும் அவ்வதிசங்கையைத்தீர்த்துத் தன்பக்கலிலே விச்வாஸத்தைப்பிறப்பித்து ரக்ஷிக்கும் சீலவானென்கை. வாலிவீழ முன்னோர்நாள் உரம்போதச் சரந்துரந்த. ராவணனை வாலிலே கட்டிக்கொண்டுதிரியும் பெருமிடுக்கனான வாலியை, முன்போன சதுர்யுகங்களில் ஒரு த்ரேதாயுகத்திலே இவன் தரைப்படும்படியாக மராமரங்களிலும் திண்ணிய அவன்மார்வு

(உ) “யத்தத்பத்மமபூத்பூர்வம் யத்ரப்ரஹ்மாவ்யஜாயத | ப்ரஹ்மணச்சாபிஸம்பூதச் சிவ இத்யவதார்யதாம் | சிவாத்ஸ்கந்தஸ்ஸம்பபூவ ஏதத்ஸ்ருஷ்டி சதுஷ்டயம்”

மறுபாடுருவும்படி அம்பைவிட்டு. அதிகாரிகளுமாய் நிவர்த்தவிரோதருமா யிருக்குமவர்க ளுககு ஸ்வாநுபவரூபமான அபிமதத்தைக கொடுக்கையேயன்றிக்கே, தத்விரோதியான அவி த்யாதி ப்ரபல விரோதிகளேயும்போக்கி அதுக்கடியான அதிகாரத்தையும் கொடுக்கும் சீலவா னென்கைக்கு உதாஹரணமிதுவென்கை. "வரந்தரமிடுக்கிளைதேவர்" என்று அபிமத ப்ரதாநத்திலும் அசக்தரேனறதிறே ப்ரஹ்மாதிகளே. உம்பராளி. நித்யஸூரிகளே அடிமை கொள்ளுகிறவன்கிடீர் தாழ்ந்தார்க்கு இப்படி உபகரிக்கிறுனென்கை. ரக்ஷணத்திலே அதி சங்கை பண்ணினவனுடைய அதிசங்கையைத் தீர்த்து அவன் விரோதியைப்போக்கின அந்த சீலமறியவுரியார் நித்யஸூரிகளிறே. எம்பிரான். அச்செயலாலே என்னே யெழுதிக்கொ ண்டவன். அதவா, "உம்பராளியெம்பிரான்" என்று - அசசெயலாலே ப்ரயோஜநாந்தர பரரான தேவாகளேயும், அநகய ப்ரயோஜரான அஸ்மதாதிகளேயுமொக்க எழுதிக்கொண்ட வனென்றுமாம். "உரம்பெரதசசரக்துரநத - எம்பிரான்" என்று — முன்புமஹாராஜர் க்கு உதவினதும் தமக்கு உதவிற்றாக நினைதிருக்கிருர். வரங்குறிப்பில் வைத்தவர்க்கலாது. இப்படிபபட்ட தசரதாதமஜனுடைய ச்ரேஷ்டமான திருவுள்ளத்தாலே விஷயீகரிக்கப்பட் டவாகளுக் கல்லது. ச்ரேஷ்டமாகையாவது—பரஸமர்த்யேக ப்ரயோஜநமா யிருக்கை. வானமாளிலும். ஜ்ஞாநாதிகராய் சதுர்த்தசபுவநங்களுக்கும் நிர்வாஹகரான ப்ரஹ்மாதிகளா யிருந்தாலும். நிரம்பு நீடுபோகம். குறைவற்று நித்யமான போகம். அதாவது-பரமபக்தி க்ருதமாய் பரிபூர்ணமாய் விசததமமான நித்யாநுபவம். எத்திறத்தும் யார்க்கு மில்லையே. அநந்யப்ரயோஜநர்க்குமில்லை. கர்மாத்யுபாயங்களை அநுஷ்டிக்கவுமாம், ஸித்தோபாய பரிக் ரஹம் பணணவுமாம், அவன் ப்ரஸாதமொழிய மோக்ஷஸித்தியில்லை. ஜ்ஞாநாதிகராய் அந ந்ய ப்ரயோஜநராகவுமாம்; அகிஞ்சநராய் அநந்யப்ரயோஜநராகவுமாம் ; அவன் ப்ரஸாதமே மோக்ஷஸாதநமென்கை. விரோதிநிரஸந சீலனுன தசரதாத்மஜன் ப்ரஸந்நரானுர்க்கல்லது ப்ரஹ்மருத்ராதிகளுடைய அதிகாரத்திலே நின்ருர்க்கும் நித்யமானமோக்ஷத்தை ப்ராபிக்க விரகில்லையென்றதாய்த்து. ... ... ... ... ... எகூ.

அ. எழுபத்துநான்காம்பாட்டு. ஆச்ரயணீயனுடைய ப்ரஸாதமே மோக்ஷஸாதந மாகில், முமுக்ஷுவான இவ்வதிகாரிக்கு ப்ரஸாதகமான கர்த்தவ்யமேதென்னில்; ஸ்ரீவாமந னுடைய திருவடிகளிலே தலைசாய்த்தல, க்ஷீராபதிநாதனுடைய சீலத்துக்கு வாசகமான திருநாமத்தை வாயாலே சொல்லுதல் செய்யவே, புருஷார்த்த ஸித்தியுண்டென்கிறர்.

மூ.—அறிந்தறிந்துவாமன னடியிணைவணங்கினல்
செறிந்தெழுந்தஞானமோடு செல்வமுஞ்சிறந்திடும்
மறிந்தெழுந்ததெண்டிரையுண் மன்னுமாலைவாழ்த்தினல்
பறிந்தெழுந்துதீவினைகள் பற்றறுதல்பான்மையே. எசு.

ப-ரை — வாமனன்—வாமநாவதாரம் செய்தருளினவனுடைய, அடி இணை—திரு வடிகளை, (சாஸ்த்ர ச்ரவணத்தாலும் ஆசார்யோபதேசத்தாலும்,) அறிந்து அறிந்து— அவனேப்ராப்யமும் ப்ராபகமுமென்று அத்யவஸித்து, வணங்கினல்—ஆச்ரயித்தால், செறி ந்து எழுந்த ஞானமோடு— "ஸர்வேச்வரனுக்கே அநந்யார்ஹசேஷம் இவ்வாத்மா" என் கிற ஜ்ஞாநத்தோடே, செல்வமும்—கைங்கர்யோபகரணமான பக்தியும், சிறந்திடும்—குறை வறவுண்டாம்; மறிந்து—பரம்பி, எழுந்து—கிளர்ந்து, தெள்—தெளிந்த, திரையுள்—அலை களையுடைய க்ஷீராப்தியிலே, மன்னு—நித்யவாஸம் பண்ணுகிற, மாலை—ஆச்ரிதவத்ஸலனு

டைய வாத்ஸல்யவாசியான திருநாமத்தை, வாழ்த்தினால்—வாயாலே சொன்னால், தீ வினை கள்—பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்களான பாபங்கள், பறிந்து—இத்தைவிட்டுப் பறிந்து, எழுந்து—மேலேகிளர்ந்து, பற்று அறுதல்—வாஸநையோடே போம்படி பண்ணுகை, பான்மையே—ஸ்வபாவமேயாகு மென்கிறார்.

வ்யா. அறிந்தறிந்து வாமனனடியிணை வணங்கினால். தன்னுடைமையை லபிக்கைக்குத் தான் அர்த்தியாய்வந்தவன் திருவடிகளை, "ப்ராப்யமும் ப்ராபகமு மதுவே" என்று அத்யவஸித்து, அத்திருவடிகளிலே ந்யஸ்தபரனானால். "வாமனனடியிணை" என்று—வரையாதே யெல்லார் தலையிலும் திருவடிகளை வைக்கையாலே ஸர்வஸுலபனானவன் திருவடிகளென்றுமாம். "அறிந்தறிந்து" என்றது—சாஸ்த்ரச்ரவணத்தாலும், ஆசார்யோபதேசத்தாலு மென்றுமாம். இது "அன்று பாரளந்த பாதபோதையொன்றி" என்று கீழ்ச் சொன்னதினுடைய விவரணம். செறிந்தெழுந்தஞானமோடு செல்வமும் சிறந்திடும். ப்ரத்யக்ஷ ஸமானாகாரமாய் ஸாக்ஷாத்காரபர்யந்தமான ஸர்வேச்வரனுக்கே அநந்யார்ஹசேஷபூதன் இவ் வாத்மாவென்கிற ஜ்ஞாநமும், அதடியாக கைங்கர்யோபகரணமான பக்தியும் குறைவறவுண்டாம். சிறப்பு—மிகுதி. அதுகைங்கர்யத்துக்கும் விரோதிநிவர்த்திக்கு முபலக்ஷணம். நிர்த்தோஷனுக்கிறே கைங்கர்யோபகரணமான பக்தியுண்டாவது. ப்ரீதிகாரிதமிறே கைங்கர்யம். "தனமாயதானே கைகூடும்" என்று வைஷ்ணவனுக்கு ஐச்வர்யம் பக்தியாகையாலே, அந்த பக்தியை இங்கு "செல்வம்" என்கிறது. மறிந்தெழுந்து தெண்டிரையுள் மன்னுமாலைவாழ்த்தினால். பரம்பிக்கிளர்ந்து தெளிந்ததிரைகளையுடைய க்ஷீராப்தியிலே நித்யவாஸம்பண்ணுகிற ஆச்ரிதவத்ஸலனுடைய வாத்ஸல்யவாசியான திருநாமத்தைவாயாலே சொன்னால். மறிதல் - விரிதல். பறிந்தெழுந்து தீவினைகள் பற்றறுதல். பகவத்ப்ராப்தி பந்தகங்களாய் ஸ்வாச்ரயத்திலே வேர்விழுந்தவை அவற்றை விட்டுப்பறிந்துபோய் மறுவலிடாதபடி வாஸனையோடேபோம்படி பண்ணுகை. பான்மையே. அவன் ஒரேற்றம் செய்தானாகவன்றிக்கே ப்ரக்ருதியாயிருக்கை. இதுவும் (க) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்கிறபடியே கைங்கர்யத்துக்கும் உபலக்ஷணம். ... ... ... ... ... எ௪.

அ. எழுபத்தைந்தாம்பாட்டு. இப்படி அவனை ஆச்ரயித்து அவனுடைய கடாக்ஷத்தாலே ப்ரதிபந்தகநிரஸந பூர்வகமாக அவனைப் பெறுகையொழிய உபாயாந்தரங்களிலே யிழிந்து ஆச்ரயிப்பாருடைய அருமையை யருளிச்செய்கிறார் - மேலேழுபாட்டாலே; இதில் முதற்பாட்டில் - கர்மயோகமேதொடங்கி பரமபக்தி பர்யந்தமாக ஸாதிக்குமவர்களுடைய துஷ்கரதையை அருளிச்செய்கிறார்.

மூ.—ஒன்றிநின்றுநற்றவஞ்செய் தூழியூழிதோறெலாம்
நின்றுநின்றவன்குணங்க ளுள்ளியுள்ளந்தூயராய்ச்
சென்றுசென்றுதேவதேவ ரும்பரும்பருமபராய்
அன்றியெங்கள்செங்கண்மாலை யாவர்காணவல்லரே. எரு.

ப—ரை.— (விஷயாந்தரங்களினின்றும்மீட்டமநஸ்ஸோடேகூட,) ஒன்றிநின்று—பொருந்திநின்று, நல் தவம் செய்து—யஜ்ஞ தாந தபஸ் ஸு கர்மங்களாகிற நல்லதபஸ்ஸுகளைப் பண்ணி, ஊழி ஊழி தோறு எலாம்—ப்ரளயகாலங்களிலெல்லாம், நின்றுநின்றவன்—க்ரமத்

(க) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"

தாலே பரமபாவநனான ஸர்வேச்வரனுடைய, குணங்கள்—குணங்களை, உள்ளி—அநுஸந்தித்து, உள்ளம் தூயர் ஆய்-பரிசுத்தாந்தகரணராய், சென்று சென்று—அநவரதபாவனையளவும் சென்று, தேவதேவர்—நித்யஸூரிகளளவிலே செல்ல, உம்பர் உம்பர் உம்பர் ஆய் அன்றி—ஸோபாநக்ரமத்தாலே பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திரூபத்தாலே உத்கர்ஷடராய்ப் பெறுவதொழிய, எங்கள் செங்கண்மாலை—எங்களுடைய புண்டரீகாக்ஷனை, யாவர் காண வல்லர்—காணவல்லாரார்.

வ்யா. ஒன்றிநின்று. (க) "[illegible]" என்கிறபடியே விஷயாந்தரங்களிலே மண்டி அவற்றில் நின்றும் மீட்க அரிதான நெஞ்சை பகவத் விஷயத்தில் உத்தேச்ய புத்தியாலே மீட்ட, அம்மநஸ்ஸோடே பகவத்விஷயத்திலே ஒன்றிநின்று. நல்தவம் செய்து. தபஸ்ஸென்று - (உ) "[illegible]" என்றும், (ங) "[illegible]" என்றும்சொல்லுகிற கர்மங்களுக்கும் உபலக்ஷணம். "நற்றவம்" என்று - ஜீவபரயாதாத்ம்யஜ்ஞாந பூர்வகமாகவும் த்ரிவிதபரித்யாக பூர்வகமாகவு மநுஷ்டிக்கும் கர்மயோகத்தைச் சொல்லுகிறது. ஊழியூழிதோறெலாம். புதுப்புடைவையிலழுக்குக் கழற்றுமாப்போலே அந்தகர்மத்தாலே விரோதி பாபம் போமிடத்தில் (ச) "[illegible]" இத்யாதிப்படியே காலதைர்க்க்யத்தைச் சொல்லுகிறது. நின்றுநின்றவன் குணங்களுள்ளி. க்ரமத்தாலே பரமபாவநனாயிருந்துள்ளவனுடைய குணங்களையநுஸந்தித்து. இத்தால் - விவேகவிமோகாதி ஸாதநஸப்தகங்களி லப்யாஸத்தைச் சொல்லுகிறது. க்ரமத்தாலே அநவரத பாவனையும் சொல்லுகிறது. உள்ளம் தூயராய். உத்தமான கர்மயோகத்தாலும் பகவத்குணப்யாஸத்தாலும், (ரு) "[illegible]" (சு) "[illegible]" என்றும் சொல்லுகிறபடியே பரிசுத்தாந்தகரணராய். சென்று சென்று. (எ) "[illegible]" என்றும் (அ) "[illegible]" என்றும் சொல்லுகிறபடியே க்ரமத்தாலே அநவரதபாவனை யளவும் சென்று. தேவதேவரும்பரும்பரும்பராயன்றி. ஸூரிகளளவிலேசெல்ல ஸோபாநக்ரமத்தாலே பரபக்திபரஜ்ஞாந பரமபக்திரூபத்தாலே உத்கர்ஷடராய்ப் பெறுவதொழிய. எங்கள் செங்கண்மாலே. சரணாகதவத்ஸலனான புண்டரீகாக்ஷனை. "எங்கள்" என்று — மற்றுள்ள ஆழ்வார்களையுங் கூட்டிக்கொள்ளுகிறாரென்னுதல். தம்மையேபற்றிவர்த்திக்கும் சரணாகத ஸமூஹத்தைக்கூட்டிக் கொள்ளுகிறாரென்னுதல். "செங்கண்மால்" என்றது—(கூ) "[illegible]" என்கிறபடியே ருசியேதொடங்கி பரமபக்திபர்யந்தமாக அத்தலையில் விசேஷ கடாக்ஷத்தாலே ஸித்தியென்று தோற்றுகைக்காக. யாவர்காண வல்லரே. நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே எங்களுக்கு அவன்காட்ட நாங்கள் கண்டாப்போலே. யாவர்காணவல்லார். "உம்பரும்பரும்பராய் - மேலேமேலே போயல்லது, தேவதேவர் - எங்கள் செங்கண்மால்" என்று கூட்டுவது. ... ... ... எடு.

(க) "சஞ்சலம்ஹிமநக்ர்ஷ்ண" (உ) "யஜ்ஞேநதாநேநதபஸாऽநாசகேந" (ங) "யஜ்ஞோதாநம்தப꞉ கர்மநத்யாஜ்யம் கார்யமேவதத்" (ச) "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" (ரு) "மநஸாதுவிசுத்தேந" (சு) "மநஸாத்வாஹ்ய꞉" (எ) "த்ருவாநுஸ்ம்ருதி꞉" (அ) "நிதித்யாஸிதவ்ய꞉" (கூ) "ஜிதந்தே புண்டரீகாக்ஷ"

அ. எழுபத்தாறும்பாட்டு. த்ரவ்யார்ஜநாதிக்லேசமென்ன, பரஹிம்ஸாதி துரிதமென்ன, இவற்றையுடைத்தாய், இந்த்ரிய வ்யாபாரரூபமான கர்மயோகத்தில் காட்டில் இந்த்ரியோபரதி ரூபமான ஜ்ஞாநயோகத்திலே ப்ரதமத்திலே இழியுமவர்களுடைய துஷ்கரதையை அநுஸந்திக்கிறார்.

மூ.—புன்புலவழியடைத் தரக்கிலச்சினைசெய்து
நன்புலவழிதிறந்து ஞானநற்சடர்கொளீஇ
என்பிலேள்கிநெஞ்சுருகி யுள்கனிந்தெழுந்ததோர்
அன்பிலன்றியாழியானை யாவர்காணவல்லரே. எசு.

ப—ரை.— புல் - க்ஷுத்ரவிஷயங்களைப்பற்றிப்போருகிற, புலம் வழி - இந்த்ரிய மார்க்கத்தை, அடைத்து - நிரோதித்து, அரக்கு இலச்சினைசெய்து - அரக்கு முத்திரையிட்டு, நல் - விலக்ஷணவிஷயத்தில், புலம் வழி - இந்த்ரிய மார்க்கத்தை, திறந்து - ப்ரகாசிப்பித்து, நல் - நன்றான, ஞானம் சுடர் — ஜ்ஞாநப்ரபையை, கொளீஇ — மிகவுண்டாக்கி, என்பில எள்கி — எலும்பிலே கட்டுப்படி சரீரம் சிதிலமாய், நெஞ்சு உருகி — மநஸ்தத்வம் த்ரவீபூதமாய், உள் கனிந்து - உள்ளே பக்வமாய், எழுந்தது ஓர் - பக்திரூபேண ஆவிர்ப்பூதமானதொரு, அன்பில் அன்றி — ப்ரேமத்தாலல்லது, ஆழியானை — திருவாழியைத்திருக்கையிலே யுடையனான ஸர்வேச்வரனை, யாவர் காண வல்லர் — காணவல்லாரார்.

வ்யா. புன்புலவழியடைத்து. க்ஷுத்ரவிஷயங்களைப் பற்றிப் போருகிற இந்த்ரிய மார்க்கத்தை நிரோதித்து. விஷயங்களுக்குப் புல்லிமையாவது - அல்பமாய் அஸ்திரமாய் அபோக்யமாயிருக்கையும், வகுத்தவிஷயத்திலே வைமுக்யத்தைப் பண்ணுகையும். தத்விஷயமான இந்த்ரியபதத்தை நிரோதிக்கையாவது - விஷயங்களிலே சாபலத்தைப் பண்ணி சேதநனையும் தன்வழியிலே ஆகர்ஷிக்கும் இந்த்ரியங்களை ப்ரத்யாஹாரத்தாலே மீட்கை. அரக்கிலச்சினைசெய்து. சப்தாதிவிஷயங்களினுடைய க்ஷுத்ரதையை அநுஸந்தித்து வாஸனையும் அநுவர்த்தியாதபடி பண்ணி. (க) "ரஸவர்ஜம் ரஸோப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே" என்று ஜ்ஞாநாதிகர்களையும் வாஸனை நலியுமிறே; அதுவும்பிறவாதபடி பண்ணி. நன்புலவழிதிறந்து. விலக்ஷணவிஷயத்தில் இந்த்ரியமார்க்கத்தை ப்ரகாசிப்பித்து. இவ்வாத்மாவுக்கு பாபகமாய் (உ) "ஸர்வகந்த: ஸர்வரஸ:" என்கிறபடியே ஸாதநமேவதுவே தொடங்கி ரஸிக்கும் பகவத்விஷயமே இந்த்ரியங்களுக்கு விஷயமாக்கியென்கை. ஞானநற்சுடர்கொளீஇ. நன்றான ஜ்ஞாநப்ரபையை மிகவுமுண்டாக்கி ஈச்வரனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை ஜ்ஞாநத்துக்கு விஷயமாம்படி பண்ணி. என்பிலேள்கி. எலும்பிலே கட்ட சரீரம் சிதிலமாய். எள்கல் - இறங்கல். நெஞ்சுருகி. மநஸ்தத்வம் த்ரவீபூதமாய். கீழ்ச்சொன்ன ஜ்ஞாநம் பக்திபர்யவஸாயியாம்படி வாஸனைபண்ணி. உள்கனிந்தெழுந்ததோ ரன்பிலன்றி. உள்ளே பக்வமாய், பக்திரூபேண ஆவிர்ப்பூதமான ப்ரேமத்தாலேயல்லது பெறவிரகில்லை. ஆழியானையாவர் காணவல்லரே. "எங்கள்செங்கண்மால்" என்று - கீழ்ச்சொன்ன ஸ்தாநத்திலே "ஆழியானை" என்கிறார். "கைகழலாநேமியான் நம்மேல் வினைகடிவான்" என்னும்படியே விஷயாந்தரப்ராவண்ய ஹேதுவான பாபத்தையும் பகவத்வைமுக்ய ஹேதுவாயிருக்கிற பாபத்தையும் கையில் திருவாழியாலே இருதுண்டமாக வெட்டி, கையும் திரு

(க) "ரஸவர்ஜம் ரஸோப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே" (உ) "ஸர்வகந்த: ஸர்வரஸ:"

(க) "பலவாநிந்த்ரியக்ராமோ வித்வாம்ஸமபிகர்ஷதி" (உ) "ஸம்ஸாரகர்த்தும்"

வாழியும் சேர்ந்த சேர்த்தியைக்காட்டி ஸ்வவிஷயமான பக்தியை வர்த்திப்பித்தவனை நான் கண்டாப்போலே யாவர்காணவல்லார். இந்த்ரியங்களுக்கு விஷயாந்தர ப்ராவண்யத்தைத் தவிர்த்து, பகவத்விஷயமே விஷயமாக்கி, தத்விஷயஜ்ஞானம் பக்திரூபாபந்நஜ்ஞானமாய். அதுபரபக்த்யாதிகளாய்ப் பழுத்தாலல்லது ஸர்வேச்வரனை லபிக்கவிரகில்லையாய்த்து. எசு.

அ. எழுபத்தேழாம்பாட்டு. கர்மஜ்ஞானங்களை ஸஹகாரமாகக்கொண்டு ப்ரவ்ருத்த மான பக்தியாலே பகவல்லாபத்தைச்சொல்லிற்று—கீழ்; ஸர்வாந்தர்யாமியாய் ஜகத்காரண பூதனான ஸர்வேச்வரனை அஷ்டாங்க ப்ராணாயாமமுன்னாகத் திருமந்த்ரத்தைக்கொண்டு பஜிக்கு மவர்கள்ளிட்டவழக்கு பரமபதமென்கிறார். இப்பாட்டுமுதலாக இதிஹாஸபுராணப்ரக்ரியை யாலே பகவத்பஜநத்தை அருளிச்செய்கிறார்.

மூ.—எட்டுமெட்டுமெட்டுமா யோரேழுமேழுமேழுமாய்
எட்டுமூன்றுமொன்றுமாகி நின்றவாதிதேவனை
எட்டினாயபேதமோ டிறைஞ்சிநின்றவன்பெயர்
எட்டெழுத்துமோதுவார்கள் வல்லர்வானமாளவே. எஎ.

ப—ரை.— எட்டும் எட்டும் எட்டும் ஆய் - இருபத்துநாலு தத்வங்களுக்கும் அந்த ராத்மாவாய் நின்று ஸத்தையை நோக்குமவனாய், ஒரு—அத்விதீயமான, ஏழும்—ஸப்தத்வீபங் களுக்கும், ( அவற்றுக்காதாரமான, ) ஏழும்—ஸப்தகுலபர்வதங்களுக்கும், ( அந்த த்வீபங் களுக்கு அவச்சேதகங்களான, ) ஏழும ஆய்—ஸப்தஸமுத்ரங்களுமாய், எட்டும் மூன்றும் ஒன் றும் ஆகி நின்ற—த்வாதசாதித்யர்களுக்கும் அந்த ராத்மாவாய் நின்ற, ஆதிதேவனை—ஸர்வ ஸமாச்ரயணீயனானவனை, எட்டின் ஆய பேதமோடு இறைஞ்சி— அஷ்டாங்கப்ராணாயாமத்தைப் பண்ணி,நின்று—அவ்வழியாலே ஆச்ரயித்து நின்று, அவன் பெயர் எட்டு எழுத்தும்—அவன் திருநாமமான திருவஷ்டாக்ஷரத்தை, ஓதுவார்கள் — வாயாலே உச்சரிக்குமவர்கள், வானம் ஆள வல்லர்-பரமபதத்தைத் தாங்களிட்டவழக்காம்படி நிர்வஹிக்க ஸமர்த்தராவர்கள்.

வ்யா. எட்டுமெட்டுமெட்டுமாய். சதுர்விம்சதி தத்வங்களுக்கு மாத்மாவாய் நின்று ஸத்தையை நோக்குமவன். இந்த ஸாமாநாதிகரண்யம் சரீராத்ம பாவத்தாலே சொல்லுகி றது. இத்தால்—அண்டகாரணமான ப்ராக்ருதஸ்ருஷ்டியைச்சொல்லுகிறது. ஒரேழுமேழுமே ழுமாய். ஸப்தத்வீபங்களும், அவற்றுக்கு தாரகமானஸப்தகுலபர்வதங்களும், அந்தத்வீபங் களுக்கு அவச்சேதகங்களான ஸப்தஸமுத்ரங்களுமாய். அண்டாந்தர்வர்த்திகளான ஸகல லோகங்களுக்கு முபலக்ஷணம். ஸ்தலசராயும் ஜலசராயும் பார்வதேயருமான சேதநரை நினைக்கிறது. எட்டுமூன்று மொன்றுமாகிநின்ற. த்வாதசாதித்யர்களுக்கும் அந்தராத்மாவாய் நின்ற. இது-ஆராத்ய தேவதைகளுக்கு முபலக்ஷணம்.(க)"[Sanskrit quotation in Grantha script]." ஆதிதேவனை. ஸூக்ஷ்ம சிதசித்வஸ்துசரீரனாயும் ஸ்தூலசிதசித்வஸ்து சரீரனாயும் கார்ய காரண மிரண்டுமாய்க்கொண்டு ஸர்வஸமாச்ரயணீயனானவனை. எட்டினாயபேதமோடிறைஞ்சி நின்று. அஷ்டாங்க ப்ராணாயாமத்தைப்பண்ணி அம்முகத்தாலே ஆச்ரயித்து நின்று. ப்ராணாயாமத் துக்கு அஷ்டாங்கதையாவது - பக்நாபிமாநனாய் விழுகையும், மநோபுத்திகளுக்கு ஈச்வரனை

(க) " அக்நௌப்ராஸ்தாஹுதிஸம்யக்."

ஸிவ்யபாகையும், பதத்வயகரத்வயங்களும் கூர்மவத்பூமியிலே பொருந்துகையும். (க) "மேநா வ்ருத்யபிமானேந ஸஹ ந்யஸ்யாத்மனோ | கூர்மவச்சதுர: பாதான் சிரஸ்தத்ரைவ பஞ்சமம்" என்னக்கடவதிறே. அவன்பெய ரெட்டெழுத்து மோதுவார்கள். கீழ்ச்சொன்ன ஜ்ஞாநாத்மபாவத்துக்கு வாசகமான மந்த்ராந்தரங்களிறகாட்டில் திருவஷ்டாக்ஷரத்தை வாயாலே உச்சரிக்குமவர்கள். வல்லர்வானமாளவே. அர்த்தத்தை மநஸ்ஸாலே அநுஸந்தித்தும், வாயாலே சப்தத்தை உச்சரித்தும்,சாரீரமான ப்ரணாமத்தைப்பண்ணியும், இப்படி மனோவாக்காயங்களினாலே பஜிக்குமவர்கள் இட்டவழக்கு பரமபதமென்கை. (உ) "ஆபோநாரா இதிப்ரோக்தா:" என்றும், (ங) "நாராஜ்ஜாதாநிதத்வாநி" என்றும்–ஜகத்காரணவஸ்துவை நாராயணனென்னக்கடவதிறே. ... ... ... எ௭.

அ. எழுபத்தெட்டாம்பாட்டு. உபாஸநத்துக்கு சுபாச்ரயம் வேண்டாவோ வென்ன; கார்யரூபமான ஜகத்திலே ஆச்ரிதார்த்தமாக வந்து கண்வளர்ந்தருளுகிற க்ஷீராப்திநாதனை சுபாச்ரயமாகப்பற்றி மந்த்ர ரஹஸ்யத்தாலே முறையறிந்து ஆச்ரயித்து இடைவிடாத ப்ரேமயுக்தருடையராயிருக்குமவர்கள் பரமபதத்தையாளுகை நிச்சிதமென்கிறார்.

மூ.—சோர்விலாதகாதலால் தொடக்கறுமனத்தராய்
நீரராவணைக்கிடந்த நின்மலனலங்கழல்
ஆர்வமோடிறைஞ்சிநின் றவன்பெயரெட்டெழுத்தும்
வாரமாகவோதுவார்கள் வல்லர்வானமாளவே. எ௮.

ப-ரை.— சோர்வு இலாத–விஷயாந்தரங்களால் அபஹ்ருதமாகாத, காதலால்—ஆசையாலே, (பகவத் ஸம்ச்லேஷமாறுதே செல்லுகையாலே,) தொடக்கறு—விச்சேதமில்லாத, மனத்தர் ஆய்—மநஸ்ஸையுடையராய், நீர்—க்ஷீராப்தியிலே, அரவு அணை—திருவநந்தாழ்வான்மேலே, கிடந்த–கண்வளர்ந்தருளுமவனாய், நின்மலன்–ஹேயப்ரத்யநீகனுடைய, நலம் கழல்—ருசிஜநகமான திருவடிகளை, ஆர்வமோடு—ப்ரேமயுக்தனாய்க்கொண்டு, இறைஞ்சி நின்று—ஆச்ரயித்து நின்று, அவன் பெயர்—அவன் திருநாமமான, எட்டு எழுத்தும்—திருவஷ்டாக்ஷரத்தையும், வாரம் ஆக ஓதுவார்கள்–அன்பினாலே சொல்லுமவர்கள், வானம் ஆள வல்லர்—பரமபதத்துக்கு நிர்வாஹகராகைக்கு ஸமர்த்தராவரென்கிறார்.

வ்யா. சோர்விலாதகாதலால். ஸர்வகாலமும் விஷயாந்தரங்களால் அபஹ்ருதமாகாத ப்ரேமத்தை யுடையராகையாலே. அதாவது - ப்ரேமாதிசயத்தாலே தத்ஸம்ச்லேஷ விச்லேஷைகஸுக துக்கராகை. தொடக்கறுமனத்தராய். பகவத்ஸம்ச்லேஷ ஸந்ததிரூபேண செல்லாநின்றுள்ள விச்சேதமில்லாத நெஞ்சையுடையராய். (ச) "ஸத்வசுத்தௌ த்ருவாஸ்ம்ருதி:" (ரு), "ஸ்ம்ருதிலம்பே ஸர்வக்ரந்தீநாம் விப்ரமோக்ஷ:" என்கிறவளவைச் சொல்லுகிறது. நீரராவணைக்கிடந்த நின்மலனலங்கழல். இப்படி ப்ரேமத்தை விளைக்கும் விலக்ஷணவிஷயமான சுபாச்ரயத்தைச் சொல்லுகிறது. நீரராவணைக்கிடந்த. க்ஷீராப்தியிலே திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்

(க) "மநோபுத்த்யபிமாநேந ஸஹ ந்யஸ்ய தராதலே | கூர்மவச்சதுர: பாதான் சிரஸ்தத்ரைவ பஞ்சமம்" (உ) "ஆபோநாரா இதிப்ரோக்தா:" (ங) "நாராஜ்ஜாதாநிதத்வாநி" (ச) "ஸத்வசுத்தௌ த்ருவாஸ்ம்ருதி:" (ரு) "ஸ்ம்ருதிலம்பே ஸர்வக்ரந்தீநாம் விப்ரமோக்ஷ:"

தருளுகிற. இத்தால் – நீருபத்தாமைக்கு அதின்மேலே திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையனாகையாலே ஸௌகுமார்யமும், ஆச்ரித ஸம்ச்லேஷைக ஸ்வபாவதவமும், அர்த்தித்வநிரபேக்ஷமாக ஆச்ரிதாநுக்ரஹத்தாலே கண்வளர்ந்தருளுகையாலே ஸௌலப்யாதிகளையும் சொல்லுகிறது. நின்மலன் நலங்கழல். பஜநவிரோதிபாபங்களைப் போக்கும் ஹேயப்ரத்யநீகனுடைய ருசிஜநகமான திருவடிகளை. ஆர்வமோடிறைஞ்சிநின்று. ப்ரேமயுக்தராய்க்கொண்டு ஆச்ரயித்துநின்று. இத்தால்—(க) "நாஸ்த்யக்ருத:க்ருதேந" என்கிறபடியே ஸம்ஸாரம் அநித்யம், ஈச்வரன் நித்யன் என்று ஆச்ரயிக்குமளவன்றியே, நிரதிசயபோக்யனென்கிற ப்ரேமத்தாலே ஆச்ரயிக்கை. அவன்பெய ரெட்டெழுத்தும். க்ஷீராப்திநாதன் திருநாமமான திருவஷ்டாக்ஷரத்தையும். (உ) "ஏஷ நாராயணஸ்ஸ்ரீமாந்" என்றும், "நாராயணனே நமக்கே பறைதருவான்" என்றும், (ங) "பவாந் நாராயணோதேவ:" என்றும்-தர்மிபுக்கவிடமெங்கும் இத்திருநாமம் ப்ரதமாபிதாநமாயிருக்குமென்கை. வாரமாக ஓதுவார்கள் வல்லர் வானமாளவே. (ச) "நமோ நாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக:" என்கிறபடியே தந்நிஷ்டராய்க்கொண்டு சொல்லுமவர்கள், பரமபதத்துக்கு நிர்வாஹகராக வல்லரென்கிறார். "நாகணைக்கிடந்த நின்மலன் நலங்கழல் ஆர்வமோடிறைஞ்சிநின்று—சோர்விலாத காதலால் தொடக்கறுமனத்தராய் — அவன் பெயரெட்டெழுத்தும் வாரமாக ஓதுவார்கள் வல்லர்வானமாளவே" என்றந்வயம். ... ... ... எஅ.

அ. எழுபத்தொன்பதாம்பாட்டு. ச்வேதத்வீப வாஸிகளையொழிந்த ஸம்ஸாரிகளுக்கு அது நிலமோவென்ன; அவதாரகந்த(கூடு)மான க்ஷீராப்தியில்நின்றும் தன்மேன்மை பாராதே தசப்ராதுர்ப்பாவத்தைப் பண்ணி ஸுலபனானவன் திருவடிகளிலே அவதாரரஹஸ்யஜ்ஞாந மடியான பக்தியையுடையவர்களுக்கல்லது முக்தராக விரகுண்டோ வென்கிறார்.

மூ.—பத்திரேறுபெத்துமா யொரேழிரேறுடொரொன்பதாய்ப்
பத்திநான்றிசைக்கணின்ற நாடுபெற்றநன்மையாய்ப்
பத்திறயதோற்றமோ டோராற்றன்மிக்கவாதிபால்
பத்தராமவர்க்கலாது முத்திமுற்றலாகுமே. எகூ.

ப-ரை.— பத்திரேறு—பத்து திக்குக்களுக்கும், (அத்திக்குக்களிலே வஸிக்கிற,) பத்தும் ஆய்—தசாத்யக்ஷருக்கும் நிர்வாஹகனாய், ஒரு—அத்விதீயமான, ஏழிரேறு—ஸப்தஸ்வரத்துக்கும், ஒன்பது ஆய்—நாட்யரஸமொன்பதுக்கும் நிர்வாஹகனாய், பத்து நான்கு திசைக்கண் நின்றநாடு—பதினான்கு வகைப்பட்ட லோகங்களுக்கு, பெற்ற—ப்ரயோஜநமான, நன்மை—சப்தாதிவிஷயங்களெல்லாம், ஆய்—தான் ஆகைக்காக, பத்திறய தோற்றமோடு—தசாவதாரஞ்செய்தருளி, (ஸம்ஸாரிகள்பண்ணும்,) ஒரு—அத்விதீயமான, ஆற்றல்மிக்க—பரிபவத்தைப் பொறுத்து ரக்ஷிக்கும் மிக்கக்ஷமையை யுடையனாய், (ஸம்ஸாரிகள் ருசிபிறந்தவன்று ஆச்ரயிக்கைக்காக,) ஆதிபால்—முன்னமே அவதரித்து நிற்பவன் விஷயத்தில், (அவன்பண்ணின உபகாரத்தையறிந்து,)பத்தர் ஆமவர்க்கு அலாது-பக்தராமவர்களுக்கல்லது, முத்தி முற்றல் ஆகுமே—மோக்ஷபலம் பெறக்கூடுமோ.

(க) "நாஸ்த்யக்ருத:க்ருதேந" (உ) "ஏஷநாராயணச்ஸ்ரீமாந்" (ங) "பவாந் நாராயணோதேவ:" (ச) "நமோநாராயணாயேதிமந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக:"

வ்யா. பத்திேனுடுபத்துமாய். தசதிக்குக்களுக்கும், அத்திக்குக்களிலே வ்யவஸ்தித ரான தசாத்யக்ஷர்களுக்கும நிர்வாஹகராய். அவர்களாகிறார் - இந்த்ராதி திக்பாலகர்களெண் மரும், ஸர்வலோகங்களுக்கும் மேலெல்லையான ஸத்யலோகத்துக்கு நிர்வாஹகனான ப்ரஹ்மாவும், அதோலோகத்துக்குக் கீழெல்லையிலே தாரகனான அநந்தனும். ஒரேழி னோடோரொன்பதாய். அத்விதீயமான ஸப்தஸ்வரமும், நாட்யரஸமொன்பதும். அவையாவன — இசைகளேழும், (௧) "நிஷாதர்ஷபகாந்தாரஷட்ஜமத்யமதைவதா: | பஞ்சமச்சேத்யமீ ஸப்த தந்த்ரீகண்டோத்திதா: ஸ்வரா:" என்கிறபடியே; (௨) "ச்ருங்காரஹாஸ்யகருணவீரரௌத்ரபயாநகா: | பீபத்ஸாத்புதசாந்தாச்ச நவ நாட்யரஸா: ஸ்ம்ருதா:" என்கிறபடியே நாட்யரஸங் களும். இவை சப்தாதிவிஷயங்களுக்கு முபலக்ஷணம். இத்தால் - கீழ்ச்சொன்ன தசாத் யக்ஷரோடு அவர்களுக்கு நிர்வாஹகரான சேதநரோடு வாசியற எல்லார்க்கும் போக்யமான சப்தாதிகளுக்கும் நிர்வாஹகனென்கை. பத்தினுன் திசைக்கண்நின்ற நாடுபெற்ற நன்மையாய். பதினுவகைப்பட்டிருந்துள்ள லோகங்களுக்கு ப்ரயோஜநமான சப்தாதிவிஷயங்களெல் லாம் அவர்களுக்குத் தானேயாகைக்காக, (௩) "ஏஷா திக்" என்கிறபடியே, "திசை" என்று - ப்ரகாரவாசி. "பத்தினுன் திசைக் கணின்றநாடு" என்று - "பத்தினோடு பத் துமாய்" என்கிறவிடத்தை அநுபாஷிக்கிறார். "பெற்றநன்மை" என்று — "ஏழி னோடொரொன்பதாய்" என்றவிடத்தை அநுபாஷிக்கிறார். "ஆய்" என்று - ஆகைக் காக வென்றபடி. "உயிர்முதலா முற்றுமாய்" என்னக்கடவதிறே. (௪) "ஸர்வாஸ:" என்கிற தானே சேதநர்க்கு போக்யனாகைக்காக வென்கை. பத்தினுயதோற்றமோ டொராற் றல்மிக்க வாதிபால். தசப்ராதுர்ப்பாவத்தாலே ஆவிர்ப்பவித்து, ஸம்ஸாரிகள் பண்ணும் பரிபவத்தைப் பொறுத்து ரக்ஷிக்கும் பூர்வஜன்பக்கலிலே. தோற்றமாவது - அதீந்த்ரியனான தன்னை சக்ஷுர்விஷயமாக்குகை. ஆற்றல் - பொறை. பூர்வஜனாகையாவது - ஸம்ஸாரிக ளுக்கு ருசிபிறந்தவன்று ஆச்ரயணீயரானநாம் தூரஸ்தராகவொண்ணாதென்று முற்கவே அவ தரித்து நிற்கை. பத்தராமவர்க்கலாது. (௫) "ஜந்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்வத:" என்கிறபடியே அவன்பண்ணின உபகாரத்தை உள்ளபடி அறிந்து அதிலே ஸக்த ராயிருக்குமவர்களுக்கல்லது. முத்திமுற்றலாகுமே. மோக்ஷபலப்பக்வமாகைக்கு விரகில்லை. (௬) "த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி" என்கிறபடியே விரோதிநிவ்ருத் தி பூர்வகமான பகவல்லாபமுண்டாக விரகில்லையென்கிறார். ... ... ௭௬.

அ. எண்பதாம்பாட்டு. அவதார ரஹஸ்யஜ்ஞாநமடியான ப்ரேமம் மோக்ஷஸாதந மென்றது - கீழ்; இதில் - அவதாரவிசேஷமான க்ருஷ்ணனுடைய ஆச்ரிதவிரோதி நிரஸந சீலத்தை அநுவதித்து, அவன் திருவடிகளிலே ஆசையுடையார்க்கல்லது நித்யஸூரிக ளோடு ஒருகோவையாய் அநுபவிக்கைக்கு விரகில்லையென்கிறார்.

---

(௧) "நிஷாதர்ஷபகாந்தார ஷட்ஜமத்யமதைவதா: | பஞ்சமச்சேத்யமீ ஸப்த"

(௨) "ச்ருங்காரஹாஸ்யகருணவீரரௌத்ரபயாநகா: | பீபத்ஸாத்புதசாந்தாச்ச நவ நாட்யரஸா: ஸ்ம்ருதா:" (௩) "ஏஷா திக்" (௪) "ஸர்வாஸ:" (௫) "ஜந்மகர்மசமே திவ்யமேவம்யோவேத்தி தத்வத:" (௬) "த்யக்த்வாதேஹம்புநர்ஜந்மநைதிமாமேதி"

மூ.—வாசியாகிநேசமின்றி வந்தெதிர்ந்ததேனுகன்
நாசமாகிநாளுலப்ப நன்மைசேர்பனங்கனிக்கு
வீசிமேல்நிமிர்ந்ததோளி னில்லையாக்கினாய்கழற்
காசையாமவர்க்கலா லமரராகலாகுமே. அ0.

ப-ரை.— நன்மை சேர்—அழகிதான, பனை கனிக்கு-பனம் பழம் உதிருகைக்கிடாக, வாசி ஆகி—வர்ஜிவேஷத்தை யுடையனாய், நேசம் இன்றி—அபிமுகனாகையன்றிக்கே, வந்து எதிர்ந்த—வந்தெதிர்ந்த, தேனுகன்—தேநுகாஸுரனை, நாசம் ஆகி—மர்தப்ராயனாக்கி, நாள் உலப்ப—ஆயுஸ்ஸு முடிக்கைக்காக, வீசி—சுற்றியெறிந்து, (அத்தாலே,) மேல் நிமிர்ந்த—எதிரியைக்காட்டிலும் விஞ்சின, தோளின்—தோள்வலியாலே, இல்லை ஆக்கினாய் கழற்கு—அவனையழியச்செய்த உன் திருவடிகளிலே, ஆசை ஆமவர்க்கு அலால்—ப்ரேமமுடையார்க்கல்லது, அமரர் ஆகல் ஆகுமே—நித்யஸூரிகளோடு ஸதர்சராய் தேவரீரை அநுபவிக்கப்போமோ.

வ்யா. வாசியாகிநேசமின்றி வந்தெதிர்ந்த தேனுகன். காலயவநாதிகளைப்போலே ஸ்வரூபேணவந்து தோற்றாமே வாஜிவேஷத்திலேவந்து தோற்றினானாய்த்து - க்ர்ஷ்ணன் அவதாரம்பண்ணி மேல்விழுகைக்காக. நேசமின்றி வருகையாவது - “மருண்டுமான்கணங்கள் மேய்கைமறந்து மேய்ந்தபுல்லும் கடைவாய்வழிசோர” என்று — க்ர்ஷ்ணசேஷ்டிதங்களாலே திர்யக்குக்களும் ப்ரேமபரவசமாய்ச் செல்லாநிற்க, துஷ்ப்ரக்ர்தியாகையாலே அத்துறையில் விழியாதொழிகை. எதிர்ந்துவருகையாவது - ஆதரமில்லையானாலு முபேக்ஷகனாகலாமிறே; அதுவுமின்றிக்கே பாதகனாய்வருகை. நாசமாகிநாளுலப்ப. இப்படிப்பட்ட தேநுகனை மர்தப்ராயனாக்கி ஆயுஸ்ஸை முடிக்கைக்காக. நாசம் - துன்பம். நன்மைசேர்பனங்கனிக்கு வீசி. தர்சநீயமாய்ப் பழுத்துநின்ற பனம்பழமுதிரும்படி, பனைத்தலையிலே சுழற்றியெறிந்து. (க) “ஸ்ருஹீத்வா ஸ்ருஹீத்வா ... [illegible] ...” என்னக்கடவதிறே. மேல்நிமிர்ந்ததோளில்லையாக்கினாய்கழற்கு. எதிரியளவன்றிக்கே விஞ்சினதோள்வலியாலே அவனையழியச்செய்த உன் திருவடிகளுக்கு ஸங்கல்பத்தாலே யழித்தல், ஆயுதத்தாலேயழித்தலன்றிக்கே, கை தொட்டுத் தோள்வலியாலே அழியச்செய்தபடி. ஆசையாமவர்க்கலாலமரராகலாகுமே. உன்னுடைய விரோதிநிரஸநசீலதையை அநுஸந்தித்து உன்பக்கலிலே ப்ரேமமுடையார்க் கல்லது நித்யஸூரிகளோடு ஸதர்சராய் தேவரீரை அநுபவிக்கப போமோவென்கிறார். அ0.

அ. எண்பத்தோராம்பாட்டு. வ்யூஹவிபவங்கள் தேசகால விப்ரகர்ஷத்தாலே நிலமன்றென்னவேண்டாதபடி பிற்பாடரிழவாமைக்குத் திருமலையிலேவந்து நின்றருளினான், அவன் திருவடிகளையாச்ரயித்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோளென்று உபதேசத்தைத் தலைக்கட்டுகிறார்.

---

(க) “க்ர்ஹீத்வாப்ரமணேனைவ ஸோம்பரே கதஜீவிதம் । தஸ்மின்னேவ ஸமிக்ஷேப தே நுகம் த்ர்ணராஜநி । ததபலாந்யநேகாநி தாலாக்ராந்நிபதந்தர: । ப்ருதிவ்யாம் பாதயாமாஸ மஹாவாதோ கநாநிவ”

மூ.—கடைந்தபாற்கடற்கிடந்து காலநேமியைக்கடிந்
துடைந்தவாலிதந்தனுக் குதவவந்திராமனாய்
மிடைந்தவேழ்மரங்களு மடங்கவெய்துவேங்கடம்
அடைந்தமாலபாதமே யடைந்துநாளுமுய்ம்மினோ. அக.

ப-ரை.— பால் கடல்—க்ஷீராப்தியிலே, (ஆர்த்தரக்ஷணத்துக்காக,) கிடந்து—கண் வளர்ந்தருளியும், காலநேமியை—காலநேமியாகிற அஸுரனை, கடிந்து—வென்று, உடைந்த—(பகைமேற்பெறாத நாம என்னராஜ்யம்பண்ணுகிறோமென்று நெஞ்சழிந்த,) வாலிதந் தனுக்கு உதவ, வாலியின் தம்பியாகிய மஹாராஜருக்குண்டான ஆபத்தைத் தீர்க்கைக்காக, இராமன் ஆய் வந்து—சக்ரவர்த்தி திருமகனாய்த் திருவவதரித்து, மிடைந்த—இலக்குக்குறிக்க வொண்ணாதபடி நெருங்கிநிற்கிற, ஏழ் மரங்களும்—மராமரங்களேழையும், அடங்க—கிரியாதலங்களாயடங்க, எய்து—துளைத்து, வேங்கடம் அடைந்த—திருமலையை ஆச்ரயித்து நிற்கிற, மால பாதமே—வ்யாமுக்தனுடைய திருவடிகளையே, நாளும்— நாள்தோறும், அடைந்து—அநந்யப்ரயோஜநராய் ஆச்ரயித்து, உய்ம்மின்—உஜ்ஜீவிக்கப் பாருங்கோள்.

வ்யா. கடைந்தபாற்கடல்கிடந்து. துர்வாஸசாபத்தாலே இந்த்ராதிகளுக்குவந்த ஆபத்தை, கடலைக்கடைந்து பரிஹரித்தது, இன்னம் ஆபத்துக்களிலே ப்ரஹ்மாதிகள் வரக்கூ பேக்ஷிக்கலாம்படி அதிலே கண்வளர்ந்தருளி. காலநேமியைக்கடிந்து. அத்தேவதைகளை புஜபலத்தாலே நலிந்தகாலநேமியாகிற அஸுரனைவென்று. கடக்கல் - வெல்லுகை. உடைந்த வாலி தந்தனுக்குதவவந் திராமனாய். வலியாலேயுடைந்த தம்பி தனக்கு தன்தம்பி. ப்ரஹ்மாதிகளளவல்லாத திர்யக்குக்களுடைய ரக்ஷணத்துக்காக சக்ரவர்த்திதிருமகனாய் வந்தவதரித்து. தேவதாந்தர ஸ்பர்சத்தாலே ஸ்வரூபமழிந்தவாலிக்கு, (க) "ராமேண ஸுபதஹ ஸ்வர்க்கம் ..." என்கிறபடியே ஸ்வஹஸ்தவதத்தாலே மோக்ஷப்ரதானம் பண்ணுகைக்காக தசரதாத்மஜனாய்வந்து. உடைதல் - அழிதல். அதவா, தனக்கு துஷ்ப்ராபமான ரிச்யமூகத்திலே பகையான மஹாராஜரிருக்கையாலே, "பகைமேற்பெறாத நாம் என்னராஜ்யம் பண்ணுகிறோம்" என்று நெஞ்சழிந்தவாலியாலே மஹாராஜர்க்குப் பிறந்த ஆபத்தைத் தீர்க்கைக்காக வந்தென்றுமாம். உடைந்தவாலிதந்தனுக்கு. "தம்பி தனக்கு. மவ்வுக்கு 'ன' ஆதேசமாய், 'தம்பி' என்றதை 'தன்' என்று கடைக்குறைத்தாய்க் கிடக்கிறது" என்று ஒருதமிழன். மிடைந்தவேழ்மரங்களுமடங்கவெய்து ஆபத்திலே ரக்ஷிக்கவாக்கொண்ட ரக்ஷணத்திலே அதிசங்கைபண்ணின மஹாராஜர் விச்வஸிக்கைக்காக இலக்குக்குறிக்க வொண்ணாதபடி மிடைந்துநிற்கிற மராமரங்களேழையும். அநுகூலமான கிரியாதலங்களை யுமுடன்பட்டத்துளைத்து. வாலி, ஸ்வபலபரீக்ஷை பண்ணுவது ஒரு மராமரத்தளவிலேயாயிருக்க, மஹாராஜருடைய அதிசங்கையை ஸவாஸனமாகப் போக்குகைக்காக ஏழென்று ஸர்வபரத்தையும் எய்தாராய்த்து. வேங்கடமடைந்த மாலபாதமே யடைந்து. பரமயோஜ ராத்ரார்க்கு முகங்கொடுத்த நிலமும், அவதாரத்தில் தாழ்ந்தார்க்கு முகங்கொடுத்த நிலமும், பிற்பாடரானவர்க ளிழவாமைக்குத் திருமலையை யாச்ரயித்துநிற்கிற வ்யாமுக்தன் திருவடிகளை அநந்யப்ரயோஜநராய் ஆச்ரயித்து நாளுமுய்ம்மினோ. "நாளும - அடைந்துய்ம்மின்" என்றுமாம். கைங்கர்யமென்றும உஜ்ஜீவநமென்றும — பர்யாயம். "அடிமைதொழிற்கூ" என்னக்கடவதிறே. ஆச்ரிதர்க்குத் திருவேங்கடமுடையான் திருவடிகளை ஆச்ரயணீயஸ்தலம்; திருவேங்கடமுடையானுக்கு ஆச்ரயணீயஸ்தலம் திருமலை. ... அக

(க) "ராமபாணாஸநக்ஷிப்த மாவஹத் பரமாங்கதிம்"

அ. எண்பத்திரண்டாம்பாட்டு. இதுக்கு முன்பு பரோபதேசம் பண்ணினாராய், மேல் ஈச்வரனைக்குறித்து தேவரீர் திருவடிகளிலே பரமயுக்தர் நித்யஸுகிகளென்கிறார். இதுக்கடி - பிறர்க்கு ஸாதநமாகத் தாமுபதேசித்தபக்தி தமக்கு ஸ்வயம் ப்ரயோஜநமாகையாலே, தமக்கு பலித்தபடியைப் பேசுகிறார். இப்பரபக்திதான் ஸாதகனுக்கு உபாயத்தில் மேலெல்லையாய், பரபக்தனுக்கு ப்ராப்யத்திலே முதலடியாயிருக்குமிறே. இதில் முதற்பாட்டில் - மநுஷ்யத்வே பரத்வத்தையும் அவதாரகந்தமான க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளுகிற நீர்மையையும் அநுஸந்தித்து, தேவரீர் திருவடிகளிலே ப்ரவணரானார்க்கு ஸர்வதேசத்திலும் ஸுகமேயாமென்கிறார்.

மூ.—எத்திறத்துமொத்துநின் றுயர்ந்துயர்ந்தபெற்றியோய்
முத்திறத்துமூரிநீ ரராவணைத்துயின்றநின்
பத்துறுத்தசிந்தையோடு நின்றுபாசம்விட்டவர்க்
கெத்திறத்துமின்பமிங்கு மங்குமெங்குமாகுமே. அ௨.

ப-ரை.— எத்திறத்தும்— தேவமநுஷ்யதிர்யக் ஸ்தாவரங்களாகிற நான்குஜாதிகளிலும், ஒத்து நின்று—ஸஜாதியனுப் அவதரித்து, உயர்ந்து—அஜஹத்ஸ்வபாவனுகையால் வந்த உத்கர்ஷத்தையும, உயர்ந்த-குணதிக்யத்தால்வந்த உத்கர்ஷத்தையும், பெற்றியோய்—ஸ்வபாவமாகவுடையவனே, முத்திறத்து நீர்— மூன்றுவகைப்பட்ட நீரையுடையகடலே, மூரி-இடமாகக்கொண்டு, ( அந்நீர உறுத்தாமைக்காக, ) அரவு அணை-திருவனந்தாழ்வான் மேலே, துயின்ற—கண்வளர்ந்தருளின, நின்—தேவரீர திருவடிகளிலே, பத்து உறுத்த—பக்திமிகுந்த, சிந்தையோடு நின்று—மநோரதத்தோடே நின்று, பாசம் விட்டவர்க்கு—இதரவிஷயஸங்கம் விட்டவர்களுக்கு, இங்கும்—சரீரத்தோடே யிருக்குமிருப்பிலும், அங்கும்—பரமபதத்திலிருக்கு மிருப்பிலும், எங்கும்—உத்க்ரமணதசையிலும் அர்ச்சிராதி மார்க்கத்திலும், எத்திறத்தும்— ஆகிய இவ்வவஸ்தைகளிலெல்லாம், இன்பம் ஆகும்—ஸுகமேயாயிருக்கும்.

வ்யா. எத்திறத்துமொத்து நின்றுயர்ந்துயர்ந்த பெற்றியோய். தேவஜாதியிலும் மநுஷ்யஜாதியிலும் திர்யக்ஜாதியிலும் ஸ்தாவரஜாதியிலும் ஸஜாதியனுயவதரித்து, அஜ்ஜாதியிற் காட்டில் அஜஹத்ஸ்வபாவனுகையாலேவந்த உத்கர்ஷத்தையும், (க) " ஸஉ ஶ்ரேயாந் பவதி ஜாயமாந: " என்கிறபடியே குணதிக்யத்தால்வந்த வுத்கர்ஷத்தையும் ஸ்வபாவமாகவுடையவனே. பெற்றி - இயல்வு. திறம் - திரள். ப்ரஹ்மருத்ரமத்யா (உபேந்த்ர) வதாரத்தோடு மத்ஸ்யாவதாரத்தோடு வாசியற ஸஜாதீயபாவத்தில் புரையறுகையும், அதிமாநுஷ சேஷ்டிதங்களாலே ஸர்வாதிகத்வம் தோற்றுகையும், தாத்பஸாரத்யங்களாலே குணதிக்யம் தோற்றியிருக்கையும். முத்திறத்துமூரி நீரராவணைத் துயின்ற. அவதாரத்தில் சொன்னமேன்மைக்கும் நீர்மைக்கும் ஊற்றுய்,மூன்றுவகைப்பட்ட நீரையுடைத்தான கடலையிடமாகக்கொண்டு அந்நீருறுத்தாமைக்குத் திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளின. முத்திறத்துநீர் — ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலம் இவை. மூரி - இடம். நின்பத்துறுத்தசிந்தையோடு நின்று பாசம் விட்டவர்க்கு. உன்திருவடிகளிலே பக்திமிக்க மநோரதத்தோடே நின்று, இதரவிஷ

(க) " ஸ உச்ரேயாந்பவதிஜாயமாந: "

யத்தில் ஸங்கத்தைவிட்டவர்களுக்கு. “பத்து” என்று - பக்தி. உறுதல்—அழுந்தல். அதாவது-மிகுதி. ஆச்ரிதபரித்ராணார்த்தமாக அவதரித்த அவதாரத்தின் மேன்மையையும் நீர்மையையும் அதுக்கூற்றனைக்ஷீராப்தியில் கண்வளர்ந்தருளுகிற நீர்மையையும் அநுஸந்தித்து பரபக்தியுக்தராய், அப்பக்திபாரவச்யத்தாலே இதரவிஷயங்களிலே வைராக்யத்தையுடையராயிருக்கிறவர்களுக்கென்கை. எத்திறத்துமின்பமிங்கு மங்குமெங்குமாகுமே. சரீரத்தோடே யிருக்குமிருப்பிலும், பரமபதத்திலிருக்கு மிருப்பிலும், உத்க்ரமணதசையிலும், அர்ச்சிராதி மார்க்கமென்கிற அவஸ்தாவிசேஷங்களிலும் ஸுகமேயாயிருக்கும். எத்திறத்து மின்பமான ஸர்வேச்வரனை உன்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை யநுபவித்து, பரமாபேதங்களிலும் த்வதநுபவத்தால் வந்த ஸுகமேயல்லதில்லை. விஷயாந்தரபாரவச்யம் எங்ஙனுமாகிலும் துக்கமேயானவோபாதி பகவத்பாரவச்யம் எங்ஙனுமாகிலும் ஸுகமேயாயிருக்குமென்கை. ... ... ... ... ... ... ... ௮௨.

௮. எண்பத்துமூன்றாம்பாட்டு. (௧) “அநந்தக்லேசபாஜநம்” என்கிறபடியே துக்கப்ரசுரமான இஸ்ஸம்ஸாரத்திலே ஸுகமுண்டாகக் கூடுமோவென்னில்; ப்ராப்திதசையில் ஸுகமும், ஸம்ஸாரத்தே யிருந்தவைத்து தேவரீர் திருவடிகளில் விச்சேதமில்லாத ப்ரேமத்தாலே பிறக்கும் ஸுகத்துக்குப் போராதென்கிறார்.

மூ.—மட்டுலாவுதண்டுழா யலங்கலாய்புலன்கழல்
விட்டுவீள்விலாத போகம் விண்ணினண்ணி யேறினும்
எட்டினோடிரண்டெனுங் கயிற்றினான் மனந்தனைக்
கட்டிவீடிலாதுவைத்த காதலின்பமாகுமே. ௮௩.

ப-ரை.— மட்டு உலாவு—தேன்மாறாத, தண்—குளிர்ந்த, துழாய் அலங்கலாய்—திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனானவனே, புலன் கழல்—தர்சநீயமான தேவரீர் திருவடிகளை, விட்டு—, வீள்வு இலாத போகம்—அழிவில்லாத போகத்தை, விண்ணில் ஏறி நண்ணினும் பரமபதத்திலே யேறிக் கிட்டினாலும், எட்டினோடு—இரண்டு எனும் கயிற்றினால்—பக்தியென்கிற கயிற்றாலே, மனந்தனை—ஸர்வேந்த்ரியங்களுக்கும் ப்ரதாநமான மநஸ்ஸை, கட்டி—விஷயங்களில் போகாதபடி பந்தித்து, வீடு இலாது—விச்சேதமில்லாதபடி, வைத்த—தேவரீர் திருவடிகளிலே வைத்த, காதல்—ப்ரேமமானது, (ஸுகத்துக்கு ஸாதநமாயிருக்கையன்றிக்கே,) இன்பம் ஆகும்—அதுதானே ஸுகமாயிருக்கும்.

வ்யா. மட்டுலாவுதண்டுழாயலங்கலாய். தேன்மாறாத செவ்வித்திருத்துழாய் மாலையாலே யலங்க்ருதனானவனே. இதனால் - திருத்துழாயோட்டை ஸம்பந்தத்தாலே ஸர்வாதிகவஸ்து வென்னுமிடமும், உபயவிபூதி நிர்வஹணத்துக்கிட்ட தனிமாலை யென்னுமிடமும், ஒப்பனையழகும் சொல்லிற்றாய்த்து. புலன்கழல் விட்டுவீள்விலாத போகம். தர்சநீயமாய் நித்யஸூரிகளுக்கு ஸதாதர்சநீயமுமான தேவரீர் திருவடிகளைவிட்டு, வேறுபோக்கில்லாத போகத்தை. புலன்கழல் - புலப்படும் திருவடிகளை. விண்ணில்நண்ணியேறினும். பரமபதத்தேயேறிக்கிட்டினும். எட்டினோடிரண்டெனுங் கயிற்றினால். எட்டுமிரண்டுங்கூடி—பத்தாய், அத்தை பக்தியென்கிறது. பகவத்பக்தியில் தமக்குள்ள கௌரவாதிசயத்தாலே

(௧) “அநந்தக்லேசபாஜநம்”

மறைத்துச்சொல்லுகிறார். "கழிறு" என்று — பாதகமென்றபடி. மனந்தனைக்கட்டி. ஸர்வேந்த்ரியங்களுக்கும் பாதாகமான மநஸ்ஸை விஷயாந்தரங்களில் போகாதபடி பந்தித்து. வீடிலாதுவைத்தகாதலின்பமாகுமே. விச்சேதமில்லாதபடி தேவரீர் திருவடிகளிலே வைத்த ப்ரேமம், ஸாதகத்துக்கு ஸாதநமாயிருக்கை பன்றிக்கே தானே ஸாதகமாயிருக்கும். அ௩.

அ. எண்பத்துநான்காம்பாட்டு. "வீடிலாதுவைத்த காதலின்பமாகும்" என்று — ப்ரஸ்துதமானபக்தி தம்பக்கல் காணுமையாலும், தம்மை பரக்ருதியோடேயிருக்கக் காண்கையாலும், ஈச்வரன் ஸ்வதந்த்ரனாகையாலும், அவன்நினைவாலே பெறுகையாலும், என்திறத்தில என்னுதன், தன் திருவடிகளிலே பரமபக்தியுக்தனாம்படிபண்ண நினைத்திருக்கிறானோ, நித்யஸம்ஸாரியாய்ப்போக நினைத்திருக்கிறானோ, திருவுள்ளத்தில் நினைத்திருக்கிறதெனனோவென்கிறார்.

மூ.—பின்பிறக்கவைத்தனன்கோ லன்றிநின்றுதன் கழற்
கன்புறைக்கவைத்தநா ளறிந்தனன்கோலாழியான்
தன்திறத்தோரன்பிலா வறிவிலாதநாயினேன்
என்திறத்திலென்கொலெம்பி ரான்குறிப்பில்வைத்ததே. அ௪.

ப-ரை — (இந்தசரீராவஸாநத்துக்குமேலே,) பின் பிறக்க வைத்தனன் கொல்— இன்னமும சிலசரீரபரிக்ரஹம்பண்ணும்படியாக நினைத்திருக்கிறானோ; அன்றி-அன்றிக்கே, நின்று-இடைவீடில்லாமல், தன்கழற்கு-தன் திருவடிகளுக்கு, அன்பு-அன்பை, உறைக்க வைத்தநாள் அறிந்தனன்கொல்—உறைக்கவைத்து அநுபவிக்கும்நாள் எனக்குண்டாம்படி நினைத்திருக்கிறானோ; ஆழியான் தன் திறத்து—ஸர்வாதிகத்வஸூசகமான திருவாழியை யுடையனானவனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளிலே, ஓர் அன்பு இலா—ப்ரேமகந்தமில்லாதவனாய், ஓர் அறிவு இலாத—ஜ்ஞாநலேசமுமில்லாதவனாய், நாயினேன்—ஹேயனான, என் திறத்தில்—என் விஷயத்திலே, எம்பிரான்—எனக்கு உபகாரகனான ஸர்வேசவரன், குறிப்பில் வைத்தது என்கொல்—திருவுள்ளத்தில் கொண்டிருக்கிறது என்னோ.

வ்யா. பின் பிறக்கவைத்தனன்கோல். இந்த சரீராவஸாநத்துக்குமேலே இன்னமும் சில சரீரபரிக்ரஹம்பண்ணும்படியாக என்னை நினைத்திருக்கிறானோ. அன்றிக்கே, பின்பு இறக்கவைத்தனன்கோல். தன்பக்கலிலே ஜ்ஞாநம்பிறந்தபின்பும் தன்னை விஸ்மரித்து நசிக்க நினைத்திருக்கிறானோ. நித்யமான ஆத்மாவுக்கு பகவத் ஜ்ஞாநஸாபாவாபங்களன்றோ 'ஸத ஸத்பாவ'ஹேதுக்கள். (க) " [illegible] " என்னக்கடவதிறே. அன்றி. அன்றிக்கே. நின்று தன்கழற்கன்புறைக்கவைத்தநாளறிந்தனன் கோல். விச்சேதமில்லாதபடி தன் திருவடிகளுக்கு அன்பைபுறைக்கவைத்து அநுபவிக்கும்நாள் எனக்குண்டாம்படி நினைத்திருக்கிறானோ. அன்புறைக்கையாவது - பரமபக்தியுக்தனாகை. வைத்தநுபவிக்கும் நாளென்கிறது - ஒருதேசவிசேஷத்தி லநுபவத்தை. இத்தால் - இச்சேதநனுக்கு ஜந்மமும் விஸ்ம்ருதியும் விநாசமும் பக்தியில்லாமை; உஜ்ஜீவநம் பரமபக்தியுக்தனாகை யென்றதாய்த்து. ஜந்மமாகி

(க) "அஸந் ப்ரஹ்மேதிவேதசேத் - அஸந்நேவஸபவதி, அஸ்திப்ரஹ்மேதிசேத் வேத, ஸந்தமேநந்ததோவிதுரிதி"

நத்து—விஷயாந்தர ப்ராவண்யமேறாது. விஸ்மரிதியாகிறது—விஷயாந்தர ப்ராவண்யகார்யமா கையாலே ஆத்மாவுக்கு உபயமுமவிநாசமிறே. ஆழியான்றன்திறத்து. ஸர்வாதிகனான தன் னிடையாட்டத்து. ஓரன்பிலாவறிவிலாதநாயினேன். அவன் ஸ்வரூப ரூபகுணவிபூதிகளில் பரிபகந்நமின்றிக்கே, அதுக்கடியான ஜ்ஞானலேசமுமின்றிக்கே, நீஹானனாநான். ப்ரேம கந்தமின்றிக்கே, அதில்லையென்கிற அறிவுமில்லாதவென்றபடியாம். “நாயினேன்” என்கிறது. திறந்துகிடந்த வாசல்கள்தோறும்நுழைந்து திரிகையும், எல்லாராலும் பரிபூதனாகையும், உகந்து தொட்டார்க்கும் ஸ்நாநம்பண்ணவேண்டும்படி அமேத்யபதார்த்தமாகையும். என் திறத்தில். ஸம்ஸாரிகளைப்போலே விமுகனாதல், முமுக்ஷுவைப்போலே போகபரவானாதலன் றிக்கேயிருக்கிற என்னிடையாட்டத்தில. எம்பிரான குறிப்பில்வைத்தது என்கொல். என் னாதன் திருவுள்ளத்தில் கொண்டிருக்கிறதென்னோ “பிறந்தபினமறந்திலேன்” என்கிற ஜ்ஞானத்தையும், “நடந்தகால்கள்நொந்தவோ” என்கிற பரோபகத்தையும உபாயமென்றிருக் கிறிலர், ஈச்வரன் நினைவே தமக்கு உபாயமென்றிருக்கிறார் “வரந்தரும திருக்குறிப்பில வைத்ததாகில்” என்று—ஸாமாந்யேநவுபாயமாகச்சொல்லுவதுமதுவே, தமக்கு உபாயமாக விசேஷித்துச்சொல்லுவதுமதுவே. இப்பாட்டால—என்னுடைய பூர்வவ்ருத்தத்தைப் பார்த்து உபேக்ஷிக்க நினைத்திருக்கிறானோ, இத்தலையில் விநாசம் தன்னிழவாம்படியான குடற்று டக்கை நினைத்து உஜ்ஜீவிப்பிக்க நினைத்திருக்கிறானோ வென்றதாய்த்து. ... அ௯.

அ. எண்பத்தைந்தாம்பாட்டு. என்னை இப்ப்ரக்ருதியோடே வைத்தபோதே தேவரீர் நினைவு இன்னதென்றறிகிலேன், முன்புற முன்னம உனபாஸாதத்தாலே திருவடிகளில்பிறந்த ருசியைமாற்றி இதரவிஷய ப்ராவண்யத்தைக்காதொழியவேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

மூ.—நச்சராவணைக்கிடந்த நாதபாதபோதினில்
வைத்தசிந்தைவாங்குவித்து நீங்குவிக்கநீயினம்
மெய்த்தன்வல்லையாதலா லறிந்தனன்நின்மாயமே
உய்த்துநின்மயக்கினில் மயக்கலேன்னைமாயனே. அ௫.

ப-ரை.— (உகவாதார்க்குக் கிட்டவொண்ணாதபடி,) நச்சு—விஷத்தையுமிழுகிற, அரவு அணை—திருவனந்தாழ்வானாகிற திருப்பள்ளியிலே, கிடந்த—கண்வளர்ந்தருளுகிற, நாத—ஸர்வேச்வரனே, பாதம்—தேவரீருடைய திருவடிகளாகிற, போதினில்—புஷ்பத் திலே, வைத்த—வைக்கப்பட்ட, சிந்தை—மநஸ்ஸை, வாங்குவித்து—அவைகளினின்றும மீளும்படி பண்ணி, (நெடுங்காலம் அகன்றிருந்தது போராமே,) இன்னம் நீங்குவிக்க— இன்னும் அகலும்படி பண்ணுகைக்கு, நீ—ஸர்வசக்தியான நீ, மெய்த்தன் வல்லை—மெய்யே ஸமர்த்தன்; ஆதலால்—ஆகையாலே, அறிந்தனன்—உன்னை ஸ்வதந்த்ரனென்று அறிந்து கொண்டேன்; மாயனே—ஆச்சர்யமான சேஷ்டிதங்களையுடையவனே, நின் மாயம்—தேவ ரீரிட்டவழக்கான ப்ரக்ருதியோடே, உய்த்து—நித்யஸம்ச்லிஷ்டனாம்படி பண்ணி, நின்—உன க்கு பரிகரமான, மயக்கினில்—சப்தாதிவிஷயங்களிலே மூட்டி, என்னை—உன்னைபார்த்திரு க்கிறவென்னை, மயக்கல்—அறிவுகெடுக்கப்பாராதொழியவேணும்.

வ்யா. நச்சராவணைக்கிடந்தநாத. உகவாதார்க்குக் கிட்டவொண்ணாதபடி விஷத்தை உமிழுகிற திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனே. நீ உகந்தாரை நித்யகைங்கர்யம் கொள்ளும் ஸ்வதந்த்ரனென்றபடி. பாதபோதினில்வைத்தசிந்தை. உன் திருவடிகளாகிற செவ்விப்பூவிலே வ்யவஸ்திதமான மநஸ்ஸை. ப்ராப்தமுமாய் நிரதிசய

வ்யா. சாடுசாடுபாதனே. சகடாஸுரன் முடியும்படி திருவடிகளை நிமிர்த்தவனே. அநுகூலர்க்கு உத்தேச்யமான திருவடிகளேயாய்த்து ப்ரதிகூலர்க்கு நாசகரமாய்த்து. இதிறே வஸ்துஸ்வபாவம். “ விடமுமமுதமுமாய் ” என்னக்கடவதிறே. இத்தால் — விரோதிநிரஸநத்தில் உனக்கு வருத்தமுண்டாய்த் தானிழக்கிறேனோ வென்கை. சலங்கலந்த பொய்கைவாய். விஷமேபரசுராமாப் அத்தோடே யமுநாஜலமும் மிச்ரமாயிருந்துள்ள பொய்கையிலே. (க) “ தஸ்யாச்வாஸமஹாபீமம் விஷாக்நிஸ்ருதவாரிணம் । ஹ்ரதம்காளியநாகஸ்ய ததர்சாதி விபீஷணம் ” என்னக்கடவதிறே. ஆடரவின்வன்பிடர் நடம்பயின்ற. அப்பொய்கையிலே வர்த்திக்கிற காளியனுடைய திண்ணிய பிடரியிலே நின்று ஸஞ்சரிக்கிற ஸஞ்சாரம் வல்லாரடிறுப்போலே யிருக்கை. “ ஆடரவு ” என்று - க்ரோதத்தாலே யாடுகிற அரவென்றுமாம். “ ஆடல் ” என்று - நடையாட்டமும், கூத்தும். நாதனே. வகுத்த ஸ்வாமியானவனே. விரோதிநிரஸந முகபாகைக்கடியான ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. இத்தால் - என்விரோதியைப் போக்குகைக்கு உகப்பில்லாமே யிழக்கிறேனோ, ஸம்பந்தமில்லாமே யிழக்கிறேனோவென்கை. பகவத்ஸமாச்ரயணத்துக்கும் அநுபவத்துக்குமாக ஸ்ருஷ்டமான சரீரத்திலே அஹங்காரலேச முண்டானால் அதுநிரஸநீயமென்று தோற்றுகைக்காக, சகடாஸுரநிரஸநத்தை யருளிச்செய்தார். தனக்கு போக்யமான ஆத்மாவுக்கு, விஷயஸக்தர்க்கம்போலே நிரஸநீயம் தேஹஸம்பந்தமென்று தோற்றுகைக்காகக் காளியமர்த்தநத்தை யருளிச்செய்தார். அநுகூலமாகவைத்த தொன்றிறே சகடம், உபஜீவ்யமாயிருப்ப தொன்றிறே யமுநாஜலம். கோடீசைய ஸர்வகாலமும் திருக்கைக்கு நிரூபகமென்னும்படி அத்தைப்பிரியாத ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யுடையவனே. என்விரோதியைப் போக்குகைக்கு உன்கையில் பரிகரமில்லாமே யிழக்கிறேனோ,என்கையில் பரிகரமுண்டாயிழக்கிறேனோ வென்கை. செய்யபாதம் நாளுமுள்ளினல். உன்திருமேனிக்கு பரபாகமாய் ஆகர்ஷகமான திருவடிகளை ஸர்வகாலமும் அபாச்ரயமாக அநுஸந்தித்தால். இத்தால்—நான் அந்யபரனாய்த் தானிழக்கிறேனோ வென்கை. வீடுஞ்சுமெய்செயாத வண்ணமென்கொல் இப்படி சக்தனாயிருக்க, ப்ரக்ருதி ஸம்பந்தமற்றுத் திருவடிகளைப் பெறுமவனாக மெய்செய்யா தொழிகிற ப்ரகாரமென்னோ. மெய்செய்கையாவது - விஷயீகாரமாத்ரத்திலே, “ முடியாததென்னெனக்கேலினி ” என்னப்பண்ணுதல், ஜ்ஞாநலாபத்தாலே, “ யாவர்நிகரகல்வானத்தே ” என்னப்பண்ணுதல் செய்யுமிவ்வளவுகளாலேவந்த ஆச்வாஸமொழிய தேஹஸம்பந்தத்தை அறுக்கையும், நித்யஸூரிகள் பரிமாற்றத்தைப் பண்ணித் தருகையும். கண்ணனே. ஸம்ஸாரிகளுக்கு இச்சையே தொடங்கி பரபக்தி பர்யந்தமாக எல்லா அவஸ்தைகளையு முண்டாக்கி முக்தராக்குகையன்றோ அவதாரத்துக்குபலம்,அநுபாவ்யமாயிருப்பதொரு கர்மசேஷமுண்டாயோ அவதரித்தது; ஆக, நீர் நம்பக்கலிலே அதிசங்கை பண்ணுகைக்கு ஹேதுவென்னென்ன; நீ சக்தனாய்வைத்து என்னபிமதஞ் செய்யாமைக்கு ஹேதுவைச சொல்லலாகாதோ நான் அதிசங்கைபண்ணினதுக்கு ஹேதுசொல்லும்படி யென்கிறார். ... அசு.

அ. எண்பத்தேழாம்பாட்டு. “ செய்யபாதம் நாளுமுள்ளினல் ” என்று நீயே எனக்கு அபாச்ரயமென்கையாலே நம்மையொழியவுமக்கு வேறொரு பற்றில்லையோவென்ன, அபாச்ரயமாக ஸம்பாவனையுள்ள ப்ரஹ்ம ருத்ரர்கள் ஸ்வாதிகாரஸித்திக்கு தேவரீர் கைபார்த்

(க) “ தஸ்யாச்வாஸமஹாபீமம் விஷாக்நிஸ்ருதவாரிணம் । ஹ்ரதம்காளியநாகஸ்ய ததர்சேதி விபீஷணம் ”

திருக்கும்படியாய் இழிந்தபின்பு, ஸர்வாதிகாரான தேவரீரையொழிய வேறொரு பற்றையு டையேனல்லேனென்று தம்முடைய அதிகாரத்துக்கு அபேக்ஷிதமான அநந்யகதித்வ க்யா பநம பண்ணுகிறார் மேல்.

மூ.—நெற்றிபெற்றகண்ணன்விண்ணி ஞாதனோடுபோதின்மேல்
நற்றவத்தநாதனோடு மற்றுமுள்ளவானவர்
கற்றபெற்றியால்வணங்கு பாதநாதவேதநின்
பற்றலாலோர்பற்றுமற்ற துற்றிலேனுரைக்கிலே. ௮௭.

ப-ரை.— நெற்றி பெற்ற கண்ணன்—நெற்றியிலே கண்ணையுடையனான ருத்ரனும், விண்ணின் நாதனோடு— ஸ்வர்க்கத்துக்கு நிர்வாஹகனான இந்த்ரனும், போதின் மேல்— திருநாபீகமலத்தைப் பிறப்பிடமாகவுடையனாய், நல் தவத்த நாதனோடு—ஒருவராலும் செய்ய முடியாத தபஸ்ஸைப்பண்ணுகையாலே பதினான்கு உலகங்களுக்கும் ஸ்ரஷ்டாவாய் அவற் றுக்கு நாதனான சதுர்முகனும், மற்றும் உள்ள வானவர்—ஹவிர்ப்பாகபுக்குக்களான மற்ற தேவதைகளும், கற்ற பெற்றியால்—தந்தாம்கற்ற ப்ரகாரங்களாலே, வணங்கு—ஆச்ரயிக்கும், பாத- திருவடிகளையுடையனாய், நாத வேத—ஸர்வலோகநாதனாக வேதப்ரதிபாத்யனானவனே, உரைக்கில்—உண்மைசொல்லப்புகில், நின் பற்று அலால்—உன் திருவடிகளை அபாச்ரயமா யிருக்குமதொழிய, மற்று ஓர் பற்று அது—வேறோர் அபாச்ரயத்தை, உற்றிலேன்- உடையே னல்லேன்.

வ்யா. நெற்றிபெற்றகண்ணன். நெற்றியிலே கண்ணையுடைய ருத்ரன். தன்னுடைய சக்த்யதிசயத்துக்கு ப்ரகாசகமாகையாலே லலாட நேத்ரத்தைத் தனக்குப்பேறாக நினைத்தி ருக்கிறானாய்த்து. விண்ணின்நாதனோடு போதின்மேல் நற்றவத்தநாதனோடு மற்றுமுள்ளவானவர். ஸ்வர்க்கத்துக்கு நிர்வாஹகனான இந்த்ரனோடே, திருநாபீகமலத்தைப் பிறப்பாகவும் ஸ்தாந மாகவுமுடையனாய் துஷ்கரமான தபஸ்ஸாலே சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவுமாய் அதுக்கு நிர் வாஹகனுமான ப்ரஹ்மாவோடே, ஹவிர்ப்பாகபுக்குக்களான ஸகலதேவதைகள். ஸம்ப்ரதி பந்ந க்ஷேத்ரஜ்ஞரான தேவர்களோடும் இந்த்ரனோடுங்கூட ப்ரஹ்ம ருத்ரர்களைச் சொல்லிற் று- அவர்களை பாதி இவர்களும் க்ஷேத்ரஜ்ஞரென்று தோற்றுகைக்காக. கற்றபெற்றியால் வணங்குபாத. தாந்தாங்கற்ற ப்ரகாரங்களாலே ஆச்ரயிக்கும் திருவடிகளையுடையவனே. கற்றப்ரகாரங்களென்கையாலும், ஆச்ரயணத்தைச் சொல்லுகையாலும் - இவர்களுடைய சா ஸ்த்ரவச்யதையையும் ஜ்ஞாநசக்திகளுடைய வைஷம்யங்களையும் சொல்லுகிறது. நாதவேத. நாதனாக வேதப்ரதிபாத்யனானவனே. தேவர்களுடைய ஆச்ரயணத்துக்கடியான ஸம்பந்தத் தைச்சொல்லுகிறது. (௧) "தமீச்வராணாம்பரமம் மஹேச்வரம்" (௨) "பதிம்விச்வஸ்ய" என்னக்கடவதிறே. நின்பற்றலாலோர்பற்று மற்றதுற்றிலேன். உன் திருவடிகளே அபாச்ரய மாகவிருக்குமதொழிய எனக்கு வேறொரு அபாச்ரயஸ்பர்சமில்லை. உறுதல் - தீண்டுதல். உரைக்கிலே. தேவதாந்தர ஸ்பர்சமில்லையென்று சொல்லுகையும் எனக்கு அவத்யமென்கை.

அ. எண்பத்தெட்டாம்பாட்டு. ப்ரஹ்மருத்ராதிகளுடைய அதிகாரம் ஈச்வரனாலே யென்றார்—கீழ்; இதில் - அவர்கள் தங்களாபந்நிவ்ருத்திக்கு தேவரீர் கைபார்த்திருக்கும்படி பரமோதாரரான தேவரீரையொழிய வேறொருவரை தேவதையாக மதிப்பரோவென்கிறார்.

(௧) "தமீச்வராணாம்பரமம் மஹேச்வரம்" (௨) "பதிம்விச்வஸ்ய"

மூ.—வெள்ளைவேலைவெற்புநாட்டி வெள்ளெயிற்றராவளாய்
அள்ளலாய்க்கடைந்தவன் றருவரைக்கோராமையாய்
உள்ளநோய்கள்தீர்மருந்து வானவர்க்களித்தவெம்
வள்ளலாரையன்றிமற்றோர் தெய்வநானமதிப்பனே. அஅ.

ப-ரை.—வெள்ளை வேலை—வெளுத்தகடலான க்ஷீராப்தியிலே, வெற்பு நாட்டி—மந்தரபர்வதத்தைநாட்டி, வெள் - வெளுத்த, எயிறு - தந்தபங்க்தியைக்காட்டுகிற, அரவு—வாஸுகியாகிறபாம்பை, அளாய்—சுற்றி, அள்ளலால்—திரைகள் எதிரேவந்து செறியும்படி, கடைந்த அன்று-மதநம்பண்ணின அக்காலத்திலே, அரு வரைக்கு-அரிதான அம்மலை அமிழ்ந்தாதபடி முதுகிலேநின்று சுழலுகைக்கு, ஓர்—அத்விதீயமான, ஆமை ஆய்—ஆமையாய் தரித்து, வானவர்க்கு உள்ள நோய்கள—இந்த்ராதி தேவர்களுக்குண்டான துரிதங்களை, தீர்-தீர்க்கத்தக்க, மருந்து—அம்ருதத்தை, அளித்த—அவர்களுக்குக்கொடுத்தருளுகையாலே, எம் வள்ளலாரை அன்றி - எனக்கு ஔதார்யத்தை ப்ரகாசிப்பித்தவனையொழிய, நான்—அநந்ய ப்ரயோஜநனுப் அநந்யசரணனுன நான், மற்று ஓர்தெய்வம் - வேறொருதைவத்தை, மதிப்பனே—ஆச்ரயணீயமாகமதிப்பேனே.

வ்யா. வெள்ளைவேலைவெற்புநாட்டி. வெளுத்தகடலிலே மந்த்ரபர்வதத்தைநாட்டி. காளமேக நிபச்யாமனுனதான் க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளும்போதை அந்த பரபாக ரஸம் அநந்யப்ரயோஜநர்க்கு அநுபாவ்யமாயிருக்க, அத்தைக்குலைத்து ப்ரயோஜநாந்தர பரர்க்காக அக்கடலிலே கொடுபுக்கு மந்தரத்தைநாட்டி. வெள்ளெயிற்றராவளாய். வெளுத்த தந்தபங்க்தியைக்காட்டுகிற வாஸுகியை அதிலேசுற்றி. தனனை மந்தரபர்வதத்திலே சுற்றி வலிக்கப்புக்கவளவிலே தன் பலஹாநிதோற்றப் பல்காட்டுகிற வாஸுகிக்கு பலாதாநத்தைப் பண்ணி அந்த மந்தரத்திலேசுற்றி. (க) "தேஜஸா நாகராஜாநம் ததாப்யாயித வாந்ப்ரபு:" என்னக்கடவதிறே. எயிறு - பல்லு. அரவு - பாம்பு. அளாய் - அளாவி — சுற்றி. அள்ளலாய்க்கடைந்தவன்று. (உ) "அப்ரமேயோ மஹோததி:" என்கிறபடியே அம்மஹார்ணவத்தை, "கடல்மாறுசுழன்றழைக்கின்றவொலி" என்னும்படி திரைகள் எதிரே வந்து செறியும்படி கடைந்தவன்று. அளளல்—செறிவு. "அன்று" என்கிறது—ஈச்வராபிமாநிகளான ஸகலதேவதைகளும் தங்களாபந்நிவ்ருத்திக்கு அவன் கைபார்த்திருந்தவன்றென்கை. அருவரைக்கோராமையாய். அம்மந்தரம் ஆழங்கால்படாமே தன்முதுகிலேநின்று சுழலும்படி அத்விதீயமான ஆமையாய்தரித்து. அஜ்ஞாதியிலே அந்யதமனுமென்றுமாம். (௩) "க்ஷீரோதமத்யே பகவாந் கூர்மரூபீ ஸ்வயம் ஹரி: । மந்தராத்ரேரதிஷ்டாநம் பூதோ பூந்மஹாமுநே" என்னக்கடவதிறே. உள்ளநோய்கள். "ஈச்வரோஹம்" என்றிருக்கிறவர்களுக்கு ஒருப்ராஹ்மணசாப மாத்ரத்தாலே தன்னையும் தன்விபூதியையும் அஸ்ரீ ப்ரவேசிக்கையும், அத்தாலே ஸத்வம் குடிபோகையும், அத்தாலே ஜ்ஞாநஹாநியும் பலஹாநியும், அந்த பலஹாநியாலே வந்த அஸுரபரிபவமும், இவற்றால்வந்த து:கபரம்பரைகளும் நோய்களிறே. தீர்மருந்துவானவாக்களித்த. இவர்கள் துரிதங்கள்போக அம்ருதத்தை

(க) "தேஜஸா நாகராஜாநம் ததாப்யாயிதவாந்ப்ரபு:" (உ) "அப்ரமேயோ மஹோததி:"
(௩) "க்ஷீரோதமத்யே பகவாந் கூர்மரூபீஸ்வயம்ஹரி: । மந்தராத்ரேரதிஷ்டாநம் பாமதோ பூந்மஹாமுநே"

யும் பிராட்டியுடைய விசேஷகடாக்ஷத்தையும் கொடுத்த. அம்ர்தப்ரதாநத்தாலே பலத்தை யும், பிராட்டியுடைய விசேஷகடாக்ஷத்தாலே ஐச்வர்யத்தையும் கொடுத்தானென்கை. (க) "ஸ்ரீமத்பர்த்தேச பலிபிர்த்தேவைர்த்தைத்ய சமூஸ்ததா । வத்யமாநாத மோதேவா ஹரிவக்ஷஸ்ஸ்தலஸ்தயா । லக்ஷ்ம்யா மைத்ரேயஸஹஸா பராங்நிர்வ்ருதிமாகதா:" என்னக்கடவ திறே. எம்வள்ளலாரையன்றி மற்றோர்தெய்வம் நானமதிப்பனே. (உ) "உதாராஸ்ஸர்வ ஏவைதே" என்கிற ஔதார்யத்தை எனக்கு ப்ரகாசிப்பித்தவனையொழிய அநந்யப்ரயோஜ நனாய் அநந்யசரணனாயிருந்துள்ள நான் வேறொருதைவத்தை ஆச்ரயணீயமாக நினைப்பனோ.

அ. எண்பத்தொன்பதாம்பாட்டு. ப்ரஹ்மாதிகளையும் மேன்மைகுலையாதபடி நின்று ரக்ஷித்தவளவன்றிக்கே, (ங) "க்ர்ஷ்ணாச்ரயா: க்ர்ஷ்ணபலா: க்ர்ஷ்ணநாதாச்சபாண்டவா:" என்கிறபடியே பாண்டவர்களுக்கு தூத்யஸாரத்யங்களைப் பண்ணித்தாழநின்று ஸத்யஸங் கல்ப னாய்க்கொண்டு அவர்கள் விரோதிவர்க்கத்தை அழியச்செய்து ராஜ்யத்தைக் கொடுத்த உன்னையொழிய வேறொருதைவமுண்டென்று நான் நினைத்திருப்பனோ வென்கிறார்.

மூ.—பார்மிகுத்தபாரமுன் னொழிச்சுவானருச்சுனன்
தேர்மிகுத்துமாயமாக்கி நின்றுகொன்றுவென்றிசேர்
மாரதர்க்குவான்கொடுத்து வையமைவர்பாலதாம்
சீர்மிகுத்தநின்னலாலோர் தெய்வநான்மதிப்பனே. அகூ.

ப—ரை.— பார்—எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ளும்பூமி, (என்னால் ஸஹிக்க வொண்ணாதென்று சொன்ன,) மிகுத்த பாரம்—மிக்கபாரத்தை, முன்—தான் முற்பாட னாய்நின்று, $ ஒழிச்சுவான்-அத்தைத்தவிர்ப்பிக்கைக்காக, அருச்சுனன்-அர்ஜுநனுடைய, தேர்—தேரை, மிகுத்து—பார்த்தபார்த்த இடமெல்லாம்நடத்தி, மாயம் ஆக்கி—பகலையிர வாக்குவதுமுதலிய ஆச்சர்யங்களையுண்டாக்கி, நின்று-முகம் தோற்றாமே நின்று, கொன்று-எதிரிகளைக்கொன்று, வென்றி சேர்-தங்களுக்கு வெற்றியுண்டாவதாக நினைத்திருந்த, மார தர்க்கு—மஹாரதரான துர்யோதநாதிகளுக்கு, வான் கொடுத்து—வீரஸ்வர்க்கத்தைக்கொ டுத்து, வையம்-பூமியை, ஐவர் பாலது ஆம-பாண்டவர்கள் பக்கலிலேயாம்படி, சீர் மிகுத்த-புகழ்மிகுந்த, நின் அலால்—உன்னையொழிய, நான்—நீ ஆச்ரிதபக்ஷபாதியென்றறிந்தநான், ஓர் தெய்வம்—வேறொருதைவத்தை, மதிப்பனே—ஆச்ரயணீயமாக நினைப்பேனோ வென்கி றார். [$ 'ஒழிச்சுவான்' என்றது—'ஒழித்துவான்' என்பதற்குப் போலியாம்.]

வ்யா. பார்மிகுத்தபாரம். ஸர்வம்ஸஹையான பூமி தன்னால் பொறுக்கவொண்ணா தென்று சொன்ன மிக்கபாரத்தை. (ச) "காலநேமிஹதோயோஸௌ" என்று தொட ங்கி, (ரு) "ததாந்யேச மஹாவீர்யா: ந்ருபாணாம்பவநேஷு தே । ஸமுத்பந்நா துராத்மாநஸ் தாந்ஸங்க்யாதும் உத்ஸஹே." முன்னொழிச்சுவா னருச்சுனன் தேர்மிகுத்து.

(க) "ஸ்ரீமத்பர்த்தேச பலிபிர்த்தேவைர்த்தைத்ய சமூஸ்ததா ॥ வத்யமாநாதமோதேவ: ஹரிவக்ஷஸ்ஸ்தலஸ்தயா | லக்ஷ்ம்யாமைத்ரேயஸஹஸா பராங்நிர்வ்ருதிமாகதா:" (உ) "உதா ராஸ்ஸர்வ ஏவைதே" (ங) "க்ர்ஷ்ணாச்ரயா: க்ர்ஷ்ணபலா: க்ர்ஷ்ணநாதாச்சபாண்டவா:" (ச) "காலநேமிஹதோயோஸௌ" (ரு) "ததாந்யேசமஹாவீர்யா ந்ர்பாணாம்பவநே ஷுதே- ஸமுத்பந்நா துராத்மாநஸ்தாந்ஸங்க்யாதுமுத்ஸஹே"

என்பதுபாடறுப் அதனைத் தவிர்ப்பிக்கைக்காக அர்ஜுநனுடைய தேரைப் பார்த்தபார்த்து இடமெல்லாம் நடத்தி. அர்ஜுநனுக்குத் தான் முற்பாடனாகையாவது - (க) “ விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம் ” என்று இருக்க அர்ஜுநனை (உ) “ கரிஷ்யே வசநம் தவ ” என்னப்பண்ணுகையும், யுத்தமத்யத்தில் விஜயபரிகரங்களில் உத்க்ருஷ்டபரிகரமான தேரொன்று மெதிர்கள் மதிக்குமபடி தேரைநடத்துகையும். ஆயுதமெடுக்கக் கடவதன்றென்ற ப்ரதிஜ்ஞையுடன் இருக்கையாலே ஸாரத்யமென்னுக்கிலே அதிகரித்துத் தேரைக்கொண்டே விஜயவ்யாபாரங்களையெல்லாம் பண்ணிநடத்தி. மாயமாக்கி. ஆசசாயங்களை யுண்டாக்கி. அதாவது - பகலை இரவாக்குகையும், “ ஆயுதமெடேன் ” என்று ஆயுதமெடுக்கையும்; ஆச்ரிதார்த்தமாகக் காலவ்யவஸ்தையையும் தன்ஸ்வபாவ வ்யவஸ்தையையும் அழித்தானென்கை. நின்றுகொன்று. அர்ஜுநன் செய்தானென்னுமபடி முகந்தோற்றமே நின்று எதிரிகளைக்கொன்று. வென்றி சேர் மாரதர்க்கு வான்கொடுத்து நாம் யுத்தோத்முகரானவன்று விஜயமும் நம்மது, அத்தாலே பும்பும ஏபயதாகக் கடவதென்றிருந்த மஹாரதரான துர்யோதநாதிகளென்ன, அவர்களுக்குத் துணையாய்வந்த த்ரோணாதிகளென்ன, இவர்களுக்கு வீரஸ்வர்க்கத்தைக் கொடுத்து. வையமைவர்பாலதாம் சீர்மிகுத்த நின்னலால். அவர்களுக்கு “ ஒருபதந்யாஸமுங்கொடோம், எங்களுக்கே எங்களதாக வேணும்” என்றிருந்த பூமியைப் பாண்டவர்கள் பக்கலிலே பாம்படி புகழ்மிகுத்த வுன்னையொழிய. சீர் - புகழ். பாண்டவர்கள் விஜயிகளாய்ப் பூமியை ஸகல போகமும் ஸம்பாதித்தாரென்னுமபடி புகழ்மிகுத்த வென்னுதல்; “ ஆச்ரிதபக்ஷபாதி ” என்னும் தன்புகழை மிகுத்தானென்னுதல். ஓர்தெய்வம் நான் மதிப்பனே. ஆச்ரிதபக்ஷபாதி யென்றறிந்த நான் வேறொரு தைவத்தை ஆச்ரயணீயமாக நினைப்பேனோ. ... ... அகூ.

அ. தோன்றுமாம்பாட்டு. உன்னையொழிந்தாரொருவரை ஆச்ரயணீயரென்றிரே னென்று தம்முடைய அநந்யகதித்வம் சொன்னார் - கீழ்; இப்பாட்டில் - ஆச்ரயணீயர் தேவரேயானாலும் தேவரீரை லபிக்கைக்கு தேவரீர் திருவடிகளையொழிய என்பக்கல் உபாயமென்று சொல்லலாவ தில்லையென்று தம்முடைய ஆகிஞ்சந்யத்தை யருளிச்செய்கிறார்.

மூ.—குலங்களாயவீரிரண்டி லொன்றிலும்பிறந்திலேன்
நலங்களாயநற்கலைகள் $ நாலிலும்நவின்றிலேன்
புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேன்புனிதநின்
இலங்குபாதமன்றிமற்றோர் பற்றிலேனெம்மீசனே. கூ0.

ப—ரை.— பொறியிலேன்—கண்டகண்ட விஷயங்களிலே விழுந்தும் சப்தாதிவிஷயங்களுக்கு வசப்பட்டு நடக்குமவனாய், புலன்கள் ஐந்தும் வென்றிலேன்—பஞ்சேந்த்ரியங்களையும் நானிட்டவழக்காய் நடத்த சக்தியற்றவனாய், நலங்களாய—மோக்ஷத்துக்கு அநுகூலமாக நல்வழி போகைக்குடலாய், நல் கலைகள் நாலிலும்—மோக்ஷஸாதநங்களைச் சொல்லும் நான்கு வேதங்களிலும், நவின்றிலேன்—அப்யஸிக்கப் பெற்றிலேனாய், குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும்—நான்குவர்ணங்களில் ஒருவர்ணத்திலும், பிறந்திலேன்—பிறவாதவனாயிராநின்றேன்; புனித—ஸ்வஸ்பர்சத்தாலே யாவரையும் சுத்தராக்கவல்ல சுத்தியோக முடையவனாய், எம் ஈசனே—அநந்யகதிகளான எங்களுக்கு நிர்வாஹகனானவனே, நின்—தேவரீருடைய, இலங்கு—விளங்காநின்றுள்ள, பாதம் அன்றி—திருவடிகளையொழிய, மற்று ஓர் பற்று இலேன்—வேறொரு ஜீவநோபாயத்தை யுடையேனல்லே னென்கிறார்.

(க) “ விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம் ” (உ) “ கரிஷ்யே வசநம் தவ ” $ (பா) “ நாலினும்.”

வ்யா. குலங்களாயவித்யாதி. இப்பாட்டு "போற்றிலேன்" என்கிற பதந்தொடங்கிக் கீழ்நோக்கிக் காரணபரம்பரையாலேயும், பாடக்ரமத்தாலே கார்யபரம்பரையாலேயும் இரண்டுமுகமாக நிர்வஹித்துப்போரும். நம்மை லபிக்கைக்கு உம்முடைய பக்கலுள்ளதென்னென்ன; ஸம்ஸாரபீஜமான சப்தாதிவிஷயங்களிலே அகப்பட்டு நின்றேன், இதிறே என்பக்கலுள்ளது. "பொறி" என்று - சப்தாதிவிஷயங்களைச் சொல்லுகிறது, வஹ்ந்யாதிரூபத்தைக் காட்டி அகப்படுத்திக்கொள்ளுமதாகையாலும், அகப்பட்டால் பின்பு புறப்படவிரகற்றிருக்கையாலும், விநாசத்தோடே தலைக்கட்டுகையாலும். சப்தாதிவிஷயங்களை புருஷார்த்தமென்று ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகிற ஸம்ஸாரத்திலே இது அகப்படத் தகாதென்றறிந்து நீர் அவ்விஷயங்களிலே இந்த்ரியங்கள் போகாமே நோக்கமாட்டிற்றிலீரோவென்ன; புலன்களைந்தும் வென்றிலேன். இந்த்ரியங்கள் ஸ்வவசத்திலே யென்னைக்கொடுபோக அவைவிட்ட புழக்கடைத்திரிந்தே னித்தனைபோக்கி அவற்றிலே ஓரிந்த்ரியத்தை நியமிக்க க்ஷமனாய்த்திலேன். (௧) "இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:" என்னக்கடவதிறே. (௨) "யஸ்ய ..... வாவசே ..... தி" என்றும், (௩) "ஸாங்கோபாங்க உபாய:" என்று மித்யாதிகளாலே வேதங்கள் இந்த்ரியஜயத்துக்கு வழிசொல்லாநின்றன, அவ்வேதங்களிலே யிழியப்பாட்டிற்றிலீரோ வென்ன; நலங்களாய நற்கலைகள் நாலிலும் நவின்றிலேன். நலங்களாயகலைகளாவது—(௪) "த்ரைகுண்யவிஷயா வேதா:" என்கிறபடியே சேதநருடைய குணாநுகூலமாக நின்றநின்ற நிலைகளிலே நல்வழிபோக்கும்படி மாதாபித்ருசதங்களிற் காட்டிலும் வத்ஸலதரங்களாகை. நற்கலைகளாவது-மோக்ஷைக ஸாதநங்களிலே நோக்கையுடைத்தாகை. இப்படிப்பட்ட நாலுவேதங்களிலும் இசிவிகைப் பெற்றிலேன். நவிலுதல் - பயிலுதல். கலை - வேதம். ப்ரதமத்திலே அத்யயநம் பண்ணினார்க்கிறே தத்பலமான அநுஷ்டாநம், அதிறே இந்த்ரியஜயத்துக்கு ஸாதநம். ஆக இப்படி இந்த்ரியஜயத்தில் நான் தூரஸ்தனென்கை. இந்த இந்த்ரியஜயத்துக்கு ப்ரதமஸாதநமான அத்யயநாதிகளில் இழியாதொழிவானென்னென்னில்; குலங்களாயவீரிரண்டி லொன்றிலும் பிறந்திலேன். உபேக்ஷையாலே இழியாதொழிந்தேனல்லேன், அயோக்யனாகையாலே யிழியப்பெற்றிலேன். அத்யயநம் த்ரைவர்ணிகாதிகாரமிறே. சதுர்த்தவர்ணத்திலே ஜநித்தவனுக்கும் பாகயஜ்ஞாத்யதிகாரமுண்டு, த்ரைவர்ணிக சுச்ரூஷையாத்திலே அதிகாரமுண்டு, அத்தாலே விரோதிபாபம்போகையாலே இந்த்ரியஜயத்துக்கு ஸாதநமாகலாம், அந்நாலுவர்ணத்திலும் பிறக்கப்பெற்றிலேன். இவ்வுத்க்ருஷ்ட வர்ணத்திலே ரிஷிபுத்ரராய்த்திருவவதரித்த விவர் நாலுவர்ணத்திலே பிறந்திலேனென்பானென்னென்னில்; யதுகுலத்திலே அவதரித்தக்ருஷ்ணன் வளர்ந்தருளின கோபகுலத்தையே தனக்குக் குலமாக நினைத்திருந்தாப்போலே, இவரும் வளர்ந்தருளினபடியை நினைத்தருளிச் செய்கிறார். (௫) "கோபாலோ யாதவம் வம்சம் ..... ஷ்யதி" என்று அவதரித்த குலம் கோபகுலம், ரக்ஷ்யகுலம் யதுகுலமாகச் சொல்லாநின்றதிறே. (௬) "ஸபிதா யஸ்து போஷக:" என்னக்கடவதிறே. அதவா, நாலுவர்ணத்திலும் எனக் கந்வயமில்லாதபடியாலே த்ரைவர்ணிகர்க்கே விஹிதமான அத்யயநத்துக்கு அயோக்யனானேன், அத்யயநம் பண்ணப்பெறாமையாலே வேதார்த்தஜ்ஞாநமில்லையாய், அதின்பலமான வேதார்த்தாநுஷ்டாந மில்லாமை

(௧) "இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:" (௨) "தர்மேண பாபமபநுததி" (௩) "சாங்கோபாங்க உபாய:" (௪) "த்ரைகுண்யவிஷயா வேதா:" (௫) "கோபாலோ யாதவம் வம்சமக்ரமப்யுத்தரிஷ்யதி" (௬) "ஸபிதா யஸ்து போஷக:"

யாலே இந்த்ரியஜயம் பண்ணப்பெற்றிலேன். அஜிதேந்த்ரியனாகையாலே விஷயங்களின் கையிலே அகப்பட்டுநின்றேனென்கிறுசென்னவுமாம். ஸம்ஸாரபீஜமான விஷயாந்தர ப்ராவண்யமொழிய உம்முடைய பக்கலொருமுதலில்லையாகில், உமக்கு உஜ்ஜீவந ஹேதுவாக நீர் நினைத்திருந்ததென்னென்ன; புனித. விஷயாந்தரப்ராவண்யத்தாலே அசுத்தராய்த் தந்தாம் பக்கல்சுத்திஹேதுவின்றிக்கேயிருக்கும் குறைவாளரையும் ஸ்வஸ்பர்சத்தாலே சுத்தராக்க வல்ல சுத்தியையுடையவனல்லேயோ. அதாவது - உத்க்ருஷ்ட ஜந்மமென்ன, வேதஸ்பர்சமென்ன, வேதார்த்தாநுஷ்டாநமென்ன, இவற்றினுடைய ஸ்தாநத்திலே பகவதநுக்ரஹம் நின்று விஷயாந்தர ப்ராவண்யத்தைத் தவிர்த்ததுதருகை. நின்னிலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலேன். இருட்டு மிக்கதனையும் விளக்கொளி வீறுபெறுமாப்போலே, குறைவாளர்க்கு முகங்கொடுக்கையாலே விளங்காநின்றுள்ள திருவடிகளையொழிய வேறு ஜீவநோபாயத்தை யுடையேனல்லேன். எம்மீசனே. வேறுமுதலின்றிக்கே அகதிகளான எங்களுக்கு நிர்வாஹகனானவனே. ... ... ... ... ... ... ௧௦.

அ. தொண்ணூற்றோராம்பாட்டு. (க) "ஶாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி" என்று பேறு உம்மதானால் உம்முடைய விரோதிநிவர்த்திக்கு நீரேகடவீராகவேண்டாவோ, "நின்னிலங்கு பாதமன்றி மற்றோர்பற்றிலேன்" என்கிறதெத்தாலேயென்ன; ப்ராப்ய்யாயத்தாலே. அதென்னென்னில்; அசோகவநிகையிலேயிருந்த பிராட்டி தேவரீசைலபிக்கைக்கு ராக்ஷஸவதத்திலே அவள்யத்நம் பண்ணுமன்றன்றோ நான் என்னுடைய விரோதியைப்போக்குகைக்குயத்நம்பண்ணுவது, ஆனபின்பு அநந்யகதியாய் அகிஞ்சநனான என்னை ஸ்வரக்ஷணத்திலேமூட்டி அகற்றுதொழியவேணுமென்கிறார்.

மூ.—பண்ணுலாவுமென்மொழிப் படைத்தடங்கணாள்பொருட்
டெண்ணிலாவரக்கரை நெருப்பினால்நெருக்கினாய்
கண்ணலாலோர்கண்ணிலேன் கலந்தசுற்றம்மற்றிலேன்
எண்ணிலாதமாயநின்னை யென்னுள்நீக்கலென்றுமே. ௯௧.

ப-ரை.— பண் உலாவு—பண்ணோடே சேர்ந்து, மெல்—ம்ருதுவான, மொழி—பேச்சையுடையளாய், படை—வாள்போலே ஒளியையும், தடம்—வைசால்யத்தையு முடைத்தான, கண்ணாள் பொருட்டு—திருக்கண்களை யுடையளான ஸ்ரீஜநகராஜன்திருமகள் நிமித்தமாக, எண் இலா—அஸங்க்யாதரான, அரக்கரை—ராக்ஷஸர்களை, நெருப்பினால்—சராக்நியாலே, நெருக்கினாய்—அழியச்செய்தநீயே, கண் அலால்—எனக்கு நிர்வாஹகனுமல்லது, ஓர் கண் இலேன்—வேறொரு நிர்வாஹகரையுடைத்தாகாதவனாய், கலந்த—நெஞ்சுக்குப் பொருந்தின, சுற்றம்—பந்துவர்க்கத்தை, மற்று இலேன்—வேறேயுடைத்தாகாதவனாயிரா நின்றேன்; எண் இலாத மாய—அஸங்க்யேயமான ஆச்சர்யசக்தியை யுடையவனே, நின்னை—ஸர்வசக்தியா யிருந்துள்ளவுன்னை, என்னுள்—அகிஞ்சநனான என்பக்கல் நின்றும், என்றும்—நான் கலங்கினவன்றும், நீக்கல்—அகற்றுதொழியவேணும்.

வ்யா. பண்ணுலாவுமென்மொழி. பண்ணோடேசேர்ந்த ம்ருதுவான பேச்சையுடையவள். (உ) "மதுரா மதுராலாபா கிமாஹ மம பாமிநீ" என்று சக்ரவர்த்தி திருமகன் வாய்புலத்தும்படியான வார்த்தைப்பாடுடையவளிறே. "பண்ணைவென்றவின்சொல் மங்

(க) "சாஸ்த்ரபலம்ப்ரயோக்தரி" (உ) "மதுராமதுராலாபா கிமாஹமமபாமிநீ"

னை" என்றவளிறே. படைத்தடங்கணாள் பொருட்டு. வாள்போலே ஒளியையும் இடமுடைமையையு முடைத்தான திருக்கண்களையுடைய ஸ்ரீஜநகராஜன் திருமகள் பொருட்டு. (௧) "நஜீவேயம் க்ஷணமபிவிநா தாமஸிதேக்ஷணாம்" என்று அவர் வ்யதிரேகத்தில் தரிக்கமாட்டாத கண்களிறே. ஆக, எதிர்த்தலையை "அகலகில்லேன்" என்னப்பண்ணும் பேச்சழகையும் கண்ணழகையு முடையவளென்கை. தம்முடைய வெறுமைசொல்ல இழிந்தவர் பிராட்டியுடைய ஏற்றங்களைச் சொல்லுகிறது, நிஷ்க்ருஷ்டமான இவ்வாத்மஸ்வரூபம் பிராட்டியோபாதியும் ஸ்ரீகௌஸ்துபத்தோபாதியும் விலக்ஷணமென்கைக்காக. ஜ்ஞாநம் பிறந்தபின்பு பிராட்டி அசோகவநிகையிலே யிருந்தாப்போலே, அஸஹ்யமிறே சேதநனுக்கு சரீரவாஸமும். எண்ணிலாவரக்கரை. அவளைப்போலே விரோதிகள் அஸங்க்யாதராகவேணுமோ, அஞ்சானுலாகாதோ. நெருப்பினால் நெருக்கினாய் கண். சாக்நியாலே அழியச்செய்தநீ எனக்கு நிர்வாஹகனென்னுதல். (௨) "யதாராகவநிர்முக்தச்சர:" என்கிறபடியே சரஸ்தாநீயனான திருவடியையிட்டு லங்கையைதஹித்து, ராக்ஷஸரைக் கண்கலங்கும்படி பண்ணினநீ எனக்கு நிர்வாஹகனென்னுதல். இதநால் - என்னுடைய விரோதிவர்க்கத்தையும் பஸ்மமாகப் பண்ணவேணுமென்கை. அலாலோர்கண்ணிலேன். (௩) "லோகாநாம்த்வம்பரோதர்ம:" என்கிற தேவரீரையொழிய வேறொரு நிர்வாஹகரையுடையேனல்லேன், "தயரதற்குமகன்றன்னை யன்றிமற்றிலேன்றஞ்சம்" என்கிறார். (௪) "நத்வாகுர்மி தசக்ரீவபஸ்ம" என்று - பிராட்டிக்கு சக்தியுண்டாயிருக்க ப்ராப்தியில்லாதே தவிர்ந்தாள், எனக்கு சக்தியுமில்லை யென்கிறார். கலந்தசுற்றம்மற்றிலேன். நெஞ்சுக்குப்பொருந்தின பந்துவர்க்கத்தை வேறு உடையேனல்லேன். உத்பாதகரான மாதாபிதாக்கள் தைவம் ரக்ஷிக்கிறதென்று காட்டிலேவிட்டுப் போனார்கள், வளர்த்தவர்களை (௫) "பிதரம்மாதரம்தாராந்" என்கிறபடியே நான்விட்டேன். (௬) "ப்ராதா பர்த்தாச பந்துச்ச பிதாச மமராகவ:" என்கிறபடியே ஸர்வவிதபந்துவும் தேவரீரே யென்கிறார். பிராட்டிக்குத் தனியிருப்பிலே திருவடிவந்து முகங்காட்டினார், அப்படியேயிருப்பதொரு குளிர்ந்தவிழியும் தேவரீரை யொழிய எனக்கில்லை யென்கிறார். ஜநககுலத்தில் பிறந்த ஆபிஜாத்யமுண்டு அவளுக்கு. "குலங்களாயவீரிரண்டி லொன்றிலும் பிறந்திலேன்" என்றிரே நீரென்ன; எண்ணிலாதமாய. அஸங்க்யேயமான ஆச்சர்யசக்தியையுடையவனல்லையோ. இத்தால் - நிஹீநஜந்மாவாய் சாஸ்த்ராதிகாரியுமன்றிக்கே யிருந்துள்ள பக்ஷிக்கு மோக்ஷங்கொடுத்த சக்தியன்றோ தேவரீருடைய சக்தியென்கை. ராவணன் குறிபழியாதே யிருக்க இக்கரையிலே அவன்தம்பியை லங்காராஜ்யத்துக்கு அபிஷேகம் பண்ணிற்று அவன் ஜந்மம்பார்த்தோ. (௭) "அபிஜ்ஞோராஜதர்மாணாம்" என்கிறபடியே அவன் ஜ்ஞாநாதிகனன்றோவென்ன; * அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றிற்று ஜ்ஞாநாஜ்ஞாநங்களில் உள்மானம் புறமானம் பார்த்தோ. நின்னையென்னுள் நீக்கல். ஸாவசக்தியாயிருந்துள்ள வுன்னை, அகிஞ்சநனாயிருந்துள்ள என்பக்கல்நின்றும், க்ஷுத்ரமான உபாயாந்தரங்களைக் காட்டியகற்றுதொழியவேணும். என்றுமே. நான்கலங்கினவன்றும் என்னை விடாதொழியவேணும். ... ... ... ... ... ... ௯௧.

---

(௧) "நஜீவேயம் க்ஷணமபிவிநா தாமஸிதேக்ஷணாம்" (௨) "யதாராகவநிர்முக்தச்சர:" (௩) "லோகாநாம்த்வம்பரோதர்ம:" (௪) "நத்வாகுர்மி தசக்ரீவபஸ்ம" (௫) "பிதரம்மாதரம்தாராந்" (௬) "ப்ராதா பர்த்தாச பந்துச்ச பிதாச மமராகவ:" (௭) "அபிஜ்ஞோராஜதர்மாணாம்"

அ. தொண்ணூற்றிரண்டாம்பாட்டு. "நின்னையென்னுள் நீக்கல்" என்றீர், நாம் உம்மையகலாதொழிகைக்கு நம்மளவிலே நீர்செய்ததென், நாம உமக்குசசெய்யவேண்டுவ தென்னென்ன ; நிருபாதிகசரண்யரான தேவரீர்திருவடிகளிலே ப்ரவணனான என்னை "உன்னுடையகார்யமெனக்கு பரம், நீ பயப்படவேண்டா" என்று என் பயந்தீர(க)"மாசுச:" என்னவேணுமென்கிறார்.

மூ.—விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேற்கண்மாதரார்
கடிக்கலந்ததோள்புணர்ந்த காலியாய்! வேலைநீர்
படைத்தடைத்ததிற்கிடந்து முனகடைந்தநின்றனக்
கடைக்கலம்புகுந்தவென்னை யஞ்சலென்னவேண்டுமே. கூஉ.

ப—ரை.— முன்-முதல் முதலில், வேலைநீர் படைத்து-ஏகார்ணவத்தை ஸ்ருஷ்டித்து, அதில கிடந்து—க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளி, (அடைக்கலம்புகுந்த இந்த்ராதி தேவர்களுக்காக,) கடைந்து—அதனைக்கடைந்து (அமுதத்தைக்கொடுத்து,) (ராவணாதிகளால குடியிருப்பிழந்த தேவர்கள நிலைநிற்கைக்காக,) அடைத்து-ஸேதுபந்தம்பண்ணி, குலம் - நாநாவர்ணமான, விடை ஏழ் அடர்த்து - ரிஷபங்களேழையும ஊட்டியாக நெரித்து, (ஸர்வரையும் கண்களாலே தோற்பிக்கும தேவரீரையும,) வென்றி - வென்றிகொள்ளத்தக்கதாய், வேல்—வேல்போன்ற, கண—நோக்கையுடையவரான, மாதரார்—நப்பின்னைப்பிராட்டியுடைய, கடி கலந்த-பரிமளிதமான, தோள் புணர்ந்த-தோளைபுநுபவித்தவனாய், (அவளுக்குப்ரியமாக,) காலி - பசுக்களை மேய்க்குமவனான, ஆய - இடையனே, நின்றனக்கு - தேவரீர் திருவடிகளை, அடைக்கலம் புகுந்த என்னை—சரணமாகப்பற்றினவென்னை, அஞ்சல் என்னவேண்டும—பயப்படாதே கொள்ளென்று ஒருவார்த்தை யருளிச்செய்யவேணும.

வ்யா. விடைக்குலமித்யாதி. "முன் - வேலைநீர்படைத்து அதிற்கிடந்து - கடைந்து - அடைத்து - விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேல்கண் மாதரார் கடிக்கலந்ததோள் புணர்ந்த காலியாய - நின்றனக்கடைக்கலம் புகுந்தவென்னை அஞ்சலென்னவேண்டும்" என்றந்வயம். முன்வேலைநீர்படைத்து. (உ) "அபஏவஸஸர்ஜாதௌ" என்கிறபடியே ஏகார்ணவ ஸ்ருஷ்டியைப்பண்ணி. "வேலைநீர்" என்று - எல்லையான கடலென்னுதல்; திரைக்கிளர்த்தியை யுடைத்தான கடலென்னுதல். "வேலை" என்று - எல்லையும், திரையும். "நீர்" என்று - கடல். அதில்கிடந்து. அதிலேகிடந்து. ஸ்ருஷ்டமான ஜகத்திலே சேதநர்க்கு ஆசரயணருசிபிறந்தவன்று சரண்யரானநாம் தூரஸ்தராகவொண்ணாதென்று க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளி. கடைந்து. அக்கிடை பலித்து தேவர்கள் ஐசவர்யத்தை யிழந்து, (ந) "ஶரணம்த்வாமநுப்ராப்தாஸ்ஸர்வே தேவதாகண:" எனகிறபடியே சரணம்புகுர; அவர்கள் இழந்தவற்றை, கடலைக்கடைந்து அகக்கடலிலே யுண்டாக்கிக்கொடுத்தவ னென்கை. அடைத்து. அந்த தேவதைகளைக் குடியிருப்பழியும்படி அதிக்ரமத்திலே நடந்த ராவணாதி கண்டக நிரஸநார்த்தமாக, தசரதாத்மஜனாய் வந்தவதரித்து லவணார்ணவத்தை யடைத்து. விடைக்குலமித்யாதி. ப்ரஹ்மாதிகளுக்கு சரண்யனாய் அவர்களாபத்திலே உதவினவளவன்

(க) "மாசுச:" (உ) "அபஏவஸஸர்ஜாதௌ" (ந) சரணம்த்வாமநுப்ராப்தாஸ்ஸர்வே தேவதாகண:"

றிக்கே, தாழ்ந்தார்க்கு முகம்கொடுக்கைக்காக கோபஸஜாதீயனாய்வந்தவதரித்து ரக்ஷித்தபடி சொல்லுகிறது மேல்; விடைக்குலங்களேழடர்த்து. விடையேழடர்த்தென்னுதல், விடைக் குலமடர்த்தென்னுதல் செய்யாதே இப்படி சொல்லுகிறது - (க) "சாதுர்வர்ண்யம்மயாஸ்ர்ஷ்டம்" என்கிறபடியே கோஜாதியிலும் வர்ணபேதமுண்டாகையாலே. நாநாவர்ணமான ரிஷபங்களேழையுமடர்த்து. நப்பின்னைப்பிராட்டியோட்டை போகத்துக்கு இடைச்சுவரா கையாலே நாநாஸ்வபாவங்களான விடையேழையு மூட்டியாக நெரித்து. குலம்-வர்ணம். "குலங்களாய வீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்" என்றாரிறே. வென்றிவேல்கண் மாத ரார் கடிக்கலந்ததோள்புணர்ந்த காலியாய. (உ) "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" என்றும், "தூதுசெய்கண்கள்" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வரையும் கண்களாலே தோற்பிக்கும் தேவரீரையும் தோற்பிக்கவல்ல நோக்கையுடைய நப்பின்னைப்பிராட்டியுடைய பரிமளிதமான தோளையநுபவித்தது, அவளுக்குப்ரியமாக ரக்ஷகாபேக்ஷையுடைய பசுக்களுடைய ரக்ஷணமே ப்ரயோஜநமாயிருக்குமவனே. (ங) "ஸர்வகந்த:" என்கிற அவன் திருமேனியையும் பரி மளிதமாக்கும் தோளென்கை. (ச) "யுவதிச்ச குமாரிணீ" என்கிறபடியே ஸ்வஸத்ர் சமான பருவத்தை யுடையவளாகையாலே செவ்வியையுடைய தோளென்னவுமாம். வென்றி வேல்கண். வென்றியை விளைக்கும் வேல்போலே நோக்கையுடைய கண். "கடி" என்று செவ்வியும், நாற்றமும். நின்றனக்கடைக்கலம் புகுந்தவென்னை. (ரு) "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" (சு) "முமுக்ஷுர்வை சரணமஹம்ப்ரபத்யே" என்று - ஜகத்காரண வஸ்து சரண்யமென்னுமிடம் ச்ருதிஸித்தம். (எ) "சரணம்த்வாமநுப்ராப்தா:" என்றும், (அ) "லோகாநாம்த்வம் பரோதர்ம:" என்றும் - வ்யூஹவிபவங்களில் சரண்யதை ஆப்த வாக்யஸித்தம். அங்ஙனன்றிக்கே, (கூ) "மாமேகம்சரணம்வ்ரஜ" என்று தேவரீர் திருவடிகளிலே ப்ரவணனான என்னை. என்னை. அநந்யசரணனான என்னை. அடைக்கலம்பு குருகையாவது - என்கார்யம் தேவரீர்க்கே பரமென்று பற்றுகை. (ய) "தவைவாஸ்மிஹிபர:" என்னக்கடவதிறே. அஞ்சலென்னவேண்டுமே. தேவரீர் பூர்த்தியையும் என் சிறுமையையும் இடைச்சுவரான விரோதியின் கநத்தையும் பார்த்து நானஞ்சாதபடி. (கக) "மாசுச:" என்று ஒருவார்த்தை அருளிச்செய்யவேணும். (கஉ) "மாமேகம்சரணம்வ்ரஜ" என்றதேவரீர்க்கு, (கங) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என் கை அரிதோ. ... ... ... ... ... ... கூஉ.

அ. தொண்ணூற்றுமூன்றும்பாட்டு. "அடைக்கலம் புகுந்தவென்னை யஞ்சலென்ன வேண்டும்" என்று - பயங்கெட (கக) "மாசுச:" என்னவேணுமென்றீர் — கீழ், இவ்வளவே அமையுமேயென்ன; உபாயாந்தரங்களைக் காட்டி என்னை அகற்றுதொழிகைக்

---

(க) "சாதுர்வர்ண்யம்மயாஸ்ர்ஷ்டம்" (உ) "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" (ங) "ஸர்வகந்த:" (ச) "யுவதிச்ச குமாரிணீ" (ரு) "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" (சு) "முமுக்ஷுர்வை சரணமஹம்ப்ரபத்யே" (எ) "சரணம்த்வாமநுப்ராப்தா:" (அ) "லோகாநாம்த்வம் பரோதர்ம:" (கூ) "மாமேகம்சரணம்வ்ரஜ" (ய) "தவைவாஸ்மிஹிபர:" (கக) "மாசுச:" (கஉ) "மாமேகம்சரணம்வ்ரஜ" (கங) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"

தாகச்சொன்ன வார்த்தையன்றேவது, தேவரீருடைய நிரதிசய போக்யதையைக்கண்டு அநுபவிக்க ஆசைப்படுகிறவெனக்கு விஷயாந்தர நிவ்ருத்திபூர்வகமாக தேவரீரையே நான் அநுபவிக்கும்படி என்பக்கலிலே இரங்கியருளவேணுமென்று பெரியபெருமாள் திருவடிகளிலநுபவத்தை யபேக்ஷிக்கிறார்.

மூ.—சுரும்பரங்குதண்டுழாய் துதைந்தலர்ந்தபாதமே
விரும்பிநின்றிறைஞ்சவேற் கிரங்கரங்கவாணனே
கரும்பிருந்தகட்டியே கடற்கிடந்தகண்ணனே
இரும்பரங்கவெஞ்சரந் துரந்தவில்லிராமனே. ௯௩.

ப-ரை.— கரும்புஇருந்த கட்டியே—ஸ்வாபாவிகமான ரஸத்தையுடைய கன்னல்போலே நிரதிசயபோக்யனானவனாய், கடல் கிடந்த கண்ணனே—திருப்பாற்கடலிலே அபேக்ஷா நிரபேக்ஷனாகக் கண்வளர்ந்தருளுமவனாய், இரும்பு அரங்க—இரும்புபோன்ற எதிரிகள் சரீரத்திலே யழுந்தும்படி, வெம் சரம்—க்ரூரமான அம்புகளை, துரந்த—விட்ட, வில் இராமனே—வில்லையுடைய தசரதாத்மஜனாய், அரங்கம் வாணனே—கோயிலுக்கு நிர்வாஹகனாய்க் கொண்டு கண்வளர்ந்தருளுமவனாய், சுரும்பு—வண்டுகளானவை, அரங்கு—படிந்த, தண்—குளிர்ந்த, துழாய்—திருத்துழாய்த்தாரானது, துதைந்து—நெருங்கி, அலர்ந்த—விகஸியாநின்றுள்ள, பாதமே-திருவடிகளிலே, விரும்பிநின்று—அநுபவருசிபிறந்து, இறைஞ்சவேற்கு—அநுபவிக்கையிலே யிழிந்தவென் விஷயத்திலே, இரங்கு—க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

வ்யா. சுரும்பரங்குதண்டுழாய் துதைந்தலர்ந்தபாதமே. வண்டுபடிந்து சரமஹராமான திருத்துழாய்த் தாரானது அலர்ந்துவருகிற திருவடிகளையே. இதநால்-திருத்துழாயோட்டை ஸம்பந்தத்தாலே ஸர்வாதிக வஸ்துவென்னுமிடத்தையும், திருவடிகளோட்டைச் சேர்த்தியாலே திருத்துழாய்க்குச செவ்வியும் விகாஸமுமுண்டாகையாலே, திருவடிகளோடே சேர்ந்தார்க்கு செவ்வியும் விகாஸமுமுண்டாமென்னுமிடத்தையும், திருத்துழாயாலே அலங்க்ருதமாயிருக்கையாலே நிரதிசயபோக்யமென்னுமிடத்தையும் சொல்லிற்று. விரும்பிநின்றிறைஞ்சுவேற்கிரங்கு. அநுபவருசிபிறந்து அநுபவிக்கையிலே யிழிந்தவெனக்கு இரங்கு. இவன் ராஜஸாமான விஷயாந்தரத்தில்நின்றும் மீளுவான், நிரதிசயபோக்யமான நம்மை யநுபவிப்பானென்று க்ருபைபண்ணியருளவேணும். தேவரீர்க்கு ஒருஇரக்கமாத்ரம், அது இவ்வாத்மாவுக்கு உஜ்ஜீவநம்; ஆனபின்பு இத்தனையும் செய்தருளவேணும். அரங்கவாணனே. கோயிலுக்கு நிர்வாஹகனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிறவனே. தந்தாம்பக்கல் முதலின்றிக்கேயிருக்க அநுபவத்திலே யிழிந்தவர்களுக்கு, தேவரீரழகாலே விஷயாந்தரப்ராவண்யத்தைத் தவிர்த்து, 'தேவரீர்பக்கல் ஆதரத்தைப்பிறப்பித்து அநுபவிப்பிக்கைக்காகவன்றோ கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. "போதரே யென்று சொல்லிப்புந்தியில்புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்த வழகன்" என்னக்கடவதிறே. கரும்பிருந்தகட்டியே. இவர்க்குருசிபிறப்பித்த வுபாத்யாயனைச் சொல்லுகிறது. கோதுண்டாதல் கழிக்கும்அம்சமுண்டாதலின்றிக்கே ஸர்வதோமுகமாய் ஸாரஸ்யத்தையுடைத்தாய், பாகவிசேஷத்தால் வந்த ஸாரஸ்யமன்றிக்கே ஸ்வாபாவிகமான ஸாரஸ்யத்தையுடைத்தாயிருப்பதொரு கன்னல்போலே நிரதிசயபோக்யனானவனே. கடல்கிடந்தகண்ணனே. பெரியபெருமாளுடைய கந்த (௩௩) த்தைச

சொல்லுகிறது. திருப்பாற்கடலிலே அபேக்ஷாநிரபேக்ஷமாகக் கண்வளர்ந்தருளுகிற ஸௌலப்யத்தை யுடையவனே ப்ரஹ்மாவுக்கு க்ஷீராப்திநாதன் உகந்தருளினபடியாலே அங்குத்தை ஸௌலப்யமும வடிவழகும பெரியபெருமாள்பக்கலிலே பரத்யபிஜ்ஞை பண்ணலாம் படியிறே யிருப்பது. இரும்பரங்க வெஞ்சரந்துரந்த வில்லிராமனே. எதிரிகள சரீரத்திலே அழுந்தும்படி கநிப்தபாவக ஸங்காசமான அமபுகளைவிட்ட வில்லையுடைய தசரதாத்மஜனே. இத்தால் - "நஞ்சேவகனர் மருவிய பெரியகோயில்" என்கிறபடியே சக்ரவர்த்தி திருமகனுடைய வீரமும் அபிராமத்தையும் பெரியபெருமாள் பக்கலிலே அநுபவிக்கலாயிருக்கை. (உ) "ஜேவபஸ்ரீகம் ஷோவோஹாம ஸூஷ்ஷ்டுநி ரஹைபு" என்னக்கடவதிறே. ப்ராப்தராய் ஸந்நிஹிதராய் நிரதிசய போக்யபூதராய் விரோதிநிரஸந சீலராய் தேவரிருக்க இத்தலையில் ருசியுண்டாயிருக்க நான் இழக்கவேண்டுகிறதென்? இரங்கி யருளவேணுமென்கை. "கரும்பிருந்தகட்டியே - கடல்கிடந்தகண்ணனே - இரும்பரங்க வெஞ்சரந்துரந்த வில்லிராமனே - அரங்கவாணனே - சுரும்பரங்கு தண்டுழாய் துதைந்தலர்ந்த பாதமேவிரும்பி நின்று இறைஞ்சுவேற்கிரங்கு" என்றந்வயம். ... ... ... ... கூங.

அ. தொண்ணூற்றுநான்காம்பாட்டு. த்வதநுபவ விரோதிகளைப் போக்கவும், அநுகூலங்களானவற்றை யுண்டாக்கவும், அநுபவந்தன்னை அவிச்சிந்நமாக்கவும் வேணுமென்றபேக்ஷிக்க ப்ராப்தமாயிருக்க, "இரங்கு", என்று — இவ்வளவபேக்ஷிக்க வமையுமோ வென்ன; உனக்கு ப்ரகாரமாயிருக்குமதொழிய ஸ்வதந்த்ரமாயிருப்பதொரு பதார்த்தமில்லாமையாலே என்னபிமதஸித்திக்கு உன்னிரக்கமே யமையுமென்கிறர்.

மூ.—ஊனின்மேயவாவிநீ யுறக்கமோடுணர்ச்சிநீ
ஆனின்மேயவைந்துநீ யவற்றுணின்றதூய்மைநீ
வானினோடுமண்ணுநீ வளங்கடற்பயனுநீ
யானுநீயதன்றியெம் பிரானுநீயிராமனே. கூச.

ப-ரை.— உறக்கமோடு—தமோகுணாபிபவத்தால்வந்த நித்ரையும், உணர்ச்சியோடு—ஸத்வகுணகார்யமான உணர்த்தியும், நீ—உன் அதீநமாயிரா நின்றது; வளம்—கண்டார்க்கு ஆகர்ஷகமான, கடல் பயனும்—கடலிலுண்டாகும் அம்ர்தமும் ரத்நாதிகளும், நீ—உன் அதீநமாயிரா நின்றது; ஆனில் மேய ஐந்தும்—பசுக்களிடத்திலுண்டாகும் சுத்திகரமான பஞ்சகவ்யமும், நீ—நீயிட்டவழக்காயிரா நின்றது; அவற்றுள் நின்ற தூய்மை—அந்தபஞ்சகவ்யங்களுக் குண்டான சுத்தியும், நீ—உன் அதீநம்; வானினோடு—நிராலம்பநமான ஆகாசத்திலே வாய்வாதிகள் ஸஞ்சரிக்கிறதும், மண்ணும்—நீரிலேகிடக்கிற பூமிகரையாதே ஸகலாதார பூதையாகிறதும், நீ—உன்னாலே ; யானும்—பத்தனான நானும், நீ—உனக்குப்ரகாரபூதன்; அது அன்றி—அதொழிய, இராமன்—சக்ரவர்த்தி திருமகனான நீயே, எம்பிரான்—அகிஞ்சநரான எங்களுக்குஸ்வாமி.

வ்யா. உறக்கமோடுணர்ச்சி நீ - வளங்கடல் பயனும் நீ - ஆனில்மேயவைந்தும் நீ, அவற்றுள் நின்ற தூய்மைநீ – ஊனில்மேயவாவிநீ – வானினோடு மண்ணும் நீ – யானும்நீ, அதன்றி யெம்பிரானும்நீ இராமனே என்றந்வயம். உறக்கமோடுணர்ச்சிநீ. தமோகுணாபிபவத்தால் வந்த நித்ரையும், ஸத்வகுணகார்யமான உணர்த்தியு முன்னதீநம். இத்தால்—

(க) "மேகசயாயமம் மஹாபாஹூம் ஸர்வஸத்வமநோஹரம்"

சேதநர்க்கு விஷயப்ராவண்ய ஹேதுவான அஜ்ஞாநமும், பகவத்ப்ராவண்ய ஹேதுவான ஜ்ஞாநமும் நீயிட்டவழக்கென்கை. (க) " [illegible] " என்று அஜ்ஞாநத்தை நித்யையாகச் சொல்லக்கடவதிறே. வளங்கடல்பயனும்நீ. கண்டார்க்கு ஆகர்ஷகமான கடலில் அம்ருதமும் ரத்நாதிகளும் உன்ஸங்கல்பாதீநம். இது - ப்ரயோஜநாந்தரங்களுக்கும் உபலக்ஷணம். இத்தால் - உன்பக்கல் ப்ராவண்யத்துக்கு விரோதியாய் அஜ்ஞாநகார்யமான பந்தக பதார்த்தங்களெல்லாம் நீயிட்டவழக்கென்கை. ஆனில்மேயவைந்தும்நீ. பசுக்களில் சுத்திகரமாகச் சொல்லுகிற பஞ்சகவ்யமும் உன்னதீநம். அவற்றுள் நின்றதூய்மைநீ. அந்த பஞ்சகவ்யங்களுக்குண்டான சுத்தியும் உன்ஸங்கல்பாதீநம். பரமபாவநரான தேவரீரோட்டை ப்ரத்யாஸத்தியிறே பதார்த்தங்களுக்கு சுத்திஹேது. கோப்ராஹ்மணர்க்கு பகவத்ஸமாராதநோபகரணங்களாகையாலேயிறே சுத்திஹேதுத்வம். (உ) " [illegible] " என்னக்கடவதிறே. கர்மத்துக்கு சுத்திஹேதுத்வம் பகவத்ஸமாராதநமாகையாலே; ஜ்ஞாநத்துக்கு சுத்திஹேதுத்வம் பகவத்விஷய மாகையாலே. (ந) " [illegible] " என்னக்கடவதிறே. (ச) " [illegible] " (ரு) " [illegible] ." இத்தால்—அநாதிகாலம் விஷயாந்தர ப்ராவண்யத்தால் வந்த அசுத்திபரிஹாரமான பாவநபதார்த்தங்களும் நீயிட்டவழக் கென்கை. ஊனில்மேய ஆவிநீ. சரீரத்திலே தாரகமாக வர்த்திக்கிற பஞ்சவ்ருத்தி ப்ராணனும் நீயிட்டவழக்கு. இத்தால் - சரீரஸ்திதியும் சரீரவியோகமும் நீயிட்டவழக்கென்கை. வானினோடு மண்ணும்நீ. நிராலம்பநமான ஆகாசத்திலே வாய்வாதிகள் ஸஞ்சரிக்கிறதும், நீரிலே கிடக்கிற பூமி கரையாதே ஸகலாதாரபூதையாகிறதும் உன்னாலே. அதவா, பந்தகமான ஸம்ஸாரமும் முக்தப்ராப்யமான நித்யவிபூதியும் நீயிட்டவழக்கென்றுமாம். யானும்நீ. பத்தனான நானும் உனக்கு ப்ரகாரபூதன். இததால் - எனக்குருசியில்லாதவன்றும், (சு) " [illegible] " என்கிறபடியே என்னுடைய ருசி நீயிட்டவழக்கு. அதன்றி. அதொழிய. எம்பிரானும் நீயிராமனே. நினைத்தார்க்கு நினைத்ததைக் கொடுக்கவல்லவ னென்கைக்கு உதாஹரணம் சொல்லுகிறது. சக்ரவர்த்தி திருமகனான நீயே அகிஞ்சநரான எங்களுக்கு ஸ்வாமி. (எ) " [illegible] " என்கிறபடியே - ஸ்தாவரபர்யந்தமாக அழகாலும் சீலத்தாலும் பிரிந்து தரிக்கமாட்டாதபடி பண்ணின நீயே எங்களுக்கு நிர்வாஹகன். (அ) " [illegible] ." [புற்பாமுதலாவித்யாதி.] (கூ) " [illegible] " என்று ஒருபக்ஷிக்கு மோக்ஷங்கொடுத்தவனே எங்களுக்கு நிர்வாஹகன்; * அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றினவனே எங்களுக்கு நிர்வாஹகன்.

---

(க) " அநாதிமாயயாஸுப்தஃ " (உ) " ப்ராஹ்மணாம்கவாஞ்சைவ குலமேகந்த்விதாக்ர்தம் । அநயத்ரமந்த்ராஸ்திஷ்டந்தி ஹவிரந்யத்ரதிஷ்டதி " (ந) " க்ஷேத்ரஜ்ஞஸ்யேச்வரஜ்ஞாநாத் விசுத்திஃ பரமாமதா " (ச) " பாவநஸ்ஸர்வ லோகாநாம் த்வமேவ " (ரு) " பவித்ராணாம்ஹி கோவிந்தம் பவித்ரம்பரமுச்யதே " (சு) " ததாமிபுத்தியோகந்தம் " (எ) " அபிவ்ர்க்ஷாஃபரிம்லாநாஃ " (அ) " அலமத்யஹிபுக்தேந பரமார்த்தை ரலஞ்சநஃ । ராபஸ்யாமி நிர்பார்தம் ராமம் ராஜ்யேபப்ரதிஷ்டிதம் " (கூ) " யாகதிர்யஜ்ஞசீலாநாம் "

அ. தொண்ணூற்றைந்தாம்பாட்டு. "எம்பிரானும் நீயிராமனே" என்று—நினைத்தார்க்கு நினைத்தத்தைக் கொடுக்கவல்ல சக்தனுமாய் ஸ்வதந்த்ரனுமான சக்ரவர்த்தி திருமகனை உபாயமென்றார் - கீழ்; இதில்- உபாயத்தில் தமக்குண்டான அத்யவஸாயத்தை யருளிச் செய்கிறார், பாஹ்யவிஷயருசியைத் தவிர்த்து, உன்பக்கலிலே ருசியைப்பிறப்பித்து, கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கும்படி புகுர நிறுத்தினநீ, என்னை உபேக்ஷித்து விஷயாந்தர ப்ரவணனும்படி கைவிட்டாலும் உன்னையொழிய வேறொருகதியில்லையென்று தம்முடைய அத்யவஸாயத்தை யருளிச்செய்கிறார்.

மூ—. அடக்கரும்புலன்களைந் தடக்கியாசையாமவை
துடக்கறுத்துவந்துநின் றொழிற்கண்நின்றவென்னைநீ
விடக்கருதிமெய்செயாது மிக்கோராசையாக்கிலும்
கடற்கிடந்தநின்னலாலோர் கண்ணிலேனெம்மண்ணலே. கூ௩.

ப—ரை.— அடக்க அரு—அடக்கவரிதான, புலன்கள் ஐந்தும்—செவிமுதலிய ஐம்புலன்களையும், அடக்கி—விஷயங்களில் போகாதபடி மீட்டு, ஆசை ஆம் அவை—அவ்விஷயங்களிலுண்டான ருசியை, துடக்கு அறுத்து—வாஸனையோடே போக்கி, வந்து—மோக்ஷேச்சையாலேவந்து, நின் தொழிற்கண் நின்ற என்னை—உன் திருவடிகளிலே கைங்கர்யத்தை அர்த்தித்து நின்றவென்னை, எம் அண்ணலே—எனக்கு நிருபாதிகஸ்வாமியாய், நீ—இந்த்ரிய ஜயமேதொடங்கி இவ்வளவும் புகுரநிறுத்தின நீ, விட கருதி-உபேக்ஷிக்கும்படி நினைத்து, மெய் செயாது—ஆரம்பித்த ஆத்மோஜ்ஜீவனத்தை முடிய நடத்தாதே, மிக்கு ஓர் ஆசை ஆக்கிலும்—விஷயாந்தரங்களில் மிக்கருசியை உண்டுபண்ணினுலும், கடல் கிடந்த நின் அலால்—என்நிமித்தமாகத் திருப்பாற் கடலிலே கண்வளர்ந்தருளின உன்னையொழிய, ஓர் கண் இலேன்—வேறொரு நிர்வாஹகரையுடையேனல்லே னென்கிறார்.

வ்யா. அடக்கரும்புலன்களைந்தடக்கி. ஆசார்யோபதேசத்தாலும் சாஸ்த்ர வாஸனையாலும் இந்த்ரியங்களை நியமிக்கவிழிந்தால் நியமிக்கவரிய ச்ரோத்ராதிகளைந்தையும் ஆகர்ஷகமான தன்வடிவைக்காட்டி விஷயங்களில் போகாதபடி மீட்டு, அவற்றுக்குத் தானே விஷயமாம்படி நியமித்து. ஈச்வரன் வடிவழகைக்காட்டி மீட்டானென்கைக்கு இங்குசப்தமுண்டோ வென்னில்; கீழே-"புலன்களைந்தும் வென்றிலேன் பொறியிலேன்" என்றவராகையாலே இங்குச்சொன்ன இந்த்ரியநியமநம் ஈச்வரனாலேயென்னுமிடம் அர்த்தாத்ஸித்தம். தபோபங்கம் பண்ணவந்த ஊர்வசியை மாத்ர்புத்தியாலே நமஸ்கரித்துநின்ற அர்ஜுநனும், (க) "தஸ்ய அஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்" என்னும்படியிறே இந்த்ரியநியமநத்தினருமையிருப்பது. ஆசையாமவை துடக்கறுத்து. அவ்வடிவில் பாவநத்வத்தாலே விஷயங்களில் ருசியை வாஸனையோடே தவிர்த்து. விஷயாந்தரருசிக்கடி பாபமேயிறே. வந்துநின் தொழில்கண்நின்றவென்னை. புருஷார்த்தத்தின் மேலெல்லையிலேவந்து உன் திருவடிகளிலே கைங்கர்யத்தை அர்த்தித்து நின்றவென்னை. நீவிடக்கருதி. இந்த்ரியஜயமேதொடங்கி இவ்வளவும் புகுரநிறுத்தின நீ உபேக்ஷிப்பாயாக நினைத்து. மெய்செயாது. ஆரம்பித்தகார்யத்தை முடியநடத்தாதே. மெய்செய்யாதொழிகையாவது - ஆத்மோஜ்ஜீவனத்தை ஆரம்பித்து தத்விபரீதமாக ஆசரிக்கும் மித்யாவ்யாபாரம். (உ) "அந்யதா ஸங்கல்ப்ய அந்யதா சரதீதி மித்யாசாரஸ் ஸ உச்யதே" என்னக்கடவதிறே. மிக்கோராசையாக்கிலும். விஷயாந்தரங்க

(க) "தஸ்யாஹம்நிக்ரஹம் மந்யே வாயோரிவஸுதுஷ்கரம்" (உ) "அந்யதாஸங்கல்ப்யாந்யதாசரதீதி மித்யாசாரஸ்ஸ உச்யதே"

விலே ருசியைப்பிறப்பித்தாயாகிலும். ஸ்வவிஷயத்தில் ருசிக்கு க்ர்ஷிபண்ணினவன் சப்தாதி விஷயங்களில் ருசிக்கு உதபாநன்னாகக்கூடாது, அப்படிகூடிறுலும். கடல்கிடந்தநின்னலா லோர்கண்ணிலேன் — நான் அபேக்ஷிபாதிருக்க என்னுடைய ஹிதார்த்தமாக நரிபாதகிடு ஸிவிருபபைவிட்டு விஸத்ர்சமான வைமாயத்திலே திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளு கிற வுன்னையொழிய வேறொரு நிர்வாஹகரையுடையேனல்லேன். எம் அண்ணலே. அபே க்ஷாநிரபேக்ஷமாக என்னுடைய ஹிதத்தை ப்ரவர்த்திப்பிக்கைக்கடி எனக்கு நிருபாதிக ஸ்வாமியாகையாலே யென்கிறார். உபேக்ஷித்தாலும் விடமாட்டாமைக்கடி நிருபாதிகஸ்வாமி த்வம். அண்ணல் - ஸ்வாமி. ... ... ... ... ௬௫.

அ. தொண்ணூற்றாறும்பாட்டு. தம்முடைய வ்யவஸாயத்தையருளிச்செய்தார் — கீழ்ப்பாட்டில்; இதில் - “ அஞ்சலென்னவேண்டுமே ” என்றும், “ இரங்காங்கவாணனே ” என்றும் பலபடியாக அபேக்ஷியாநின்றீர், உமமுடைய ப்ராப்யத்தை நிர்ணயித்துச்சொல்லீ ரென்ன ; நான் ஸம்ஸாரத்தையறுத்து உன் திருவடிகளிலே பொருந்தும்படியாக ப்ரஸாதத் தைப பண்ணியருளவேணுமென்று தம்முடைய ப்ராப்யத்தை ப்ரார்த்திக்கிறார்.

மூ.—வரம்பிலாதமாயமாய வையமேழுமெய்ம்மையே
வரம்பிலூழியேத்திலும் வரம்பிலாதகீர்த்தியாய்
வரம்பிலாதபல்பிறப் பறுத்துவந்துநின்கழல்
பொருந்துமாதிருந்தநீ வரஞ்செய்புண்டரீகனே. ௬௬.

ப—ரை.— வரம்பு இலாத—அளவிறந்தஸ்வரூபத்தையும் அளவிறந்த மஹதாதி பரி ணமங்களையுமுடைத்தான, மாய—ப்ரக்ர்திதத்வத்தை ஸ்வாதீநமாகவுடையனுய், மாய— ஆச்சர்யமான ஜ்ஞாந சக்த்யாதி கல்யாணகுணங்களை யுடையனுய், வையம் ஏழும் - ஸப்த லோகங்களிலுள்ளவர்களும், மெய்ம்மையே—அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு, வரம்பு இல் ஊழி—அஸங்க்யாத மான கல்பங்களெல்லாம, ஏத்திலும்—ஸ்தோத்ரம் பண்ணினுலும், வரம்பு இலாத—எல்லைகாணவொண்ணுத, கீர்த்தியாய்—ஈக்ஷகத்வ ப்ரஸித்தியையுடையனுய், புண் டரீகனே-தாமரைமலரையொத்த அவயவங்களை யுடையவனே, வரம்பு இலாத-அளவில்லாத, பல் பிறப்பு அறுத்து—பலவகைப்பட்ட பிறப்பையறுத்து, வந்து—அர்ச்சிராதி மார்க்கத் தாலே ஒருதேச விசேஷத்திலேவந்து, நின் கழல்—ஸுரிபோக்யமான உன் திருவடிகளை, பொருநதும் ஆ—பொருந்தும்படியாக, திருந்த—கைங்கர்ய ஸுகமே ஸுகமாம்படி, நீ— என்னுடைய உஜ்ஜீவநார்த்தமாக ஆள்பார்த்து ஸஞ்சரிக்கிற நீ, வரம் செய்—ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணுமென்கிறார்.

வ்யா. வரம்பிலாதமாய. அளவிறந்த ஸ்வரூபத்தையும் அளவிறந்த மஹதாதிபரி ணமங்களையுமுடைத்தான ப்ரக்ர்தி தத்வத்தை ஸ்வாதீநமாகவுடையவனே. மாயை-ப்ரக்ர்தி. (க) “ ...... ” என்னக்கடவதிறே. இத்தால்- பந்தகமான ப்ரக்ர்தி நீயிட்ட வழக்கென்கை. மாய. ஆச்சர்யமானஜ்ஞாநசக்த்யாதி கல்யாண குணங்களையுடையவனே. மாயம் - ஆச்சர்யம். இத்தால் - கீழ்ச்சொன்ன ப்ரக்ர்தியிலே பத் தராய் தந்நிவர்த்த்யர்த்தமாக தேவரீரை ஆச்ரயித்த சேதநர்க்கு தத்ஸம்பந்தத்தை யறுத்துக்

(க) “ அநந்தஸ்யநதஸ்யாந்தம்ஸங்க்யாநம்வாபிவித்யதே ”

கொடுக்கைக்கடியான ஜ்ஞாநசக்த்யாதி குணங்களையுடையவனென்கை. வையமேழும்மேம்மையே வரம்பிலூழியேத்திலும் வரம்பிலாத கீர்த்தியாய். ஸப்தலோகங்களும் ஸ்தோதாக்களாக, தந்தாமுடைய சேஷத்வத்தை யுணர்ந்து ஸ்வரூபாநுரூபமாக அநந்யபரராய்க்கொண்டு அஸங்க்யாதமான கல்பங்களெல்லாமேத்தினாலும எல்லைகாணவொண்ணாத ரக்ஷகத்வப்ரதையையுடையவனே. இத்தால - அசித்ஸம்ஸர்க்கத்தையறுத்துத் திருவடிகளோடேசேர்த்து ரக்ஷித்துப்போந்த ரக்ஷகத்வ ப்ரதையைப் பரிசேதிக்கவொண்ணாதென்கை. (க) "வர்ஷாயுதைர்யஸ்யகுணா நசக்யா வக்தும்ஸமேதைரபி ஸர்வலோகை: । சதுர்முகாயுர்யதி கோடிவக்த்ர:." வரம்பிலாதபல்பிறப்பறுத்து. நம்மைப்புகழாதே அபேக்ஷிதத்தைச்சொல்லீரேன்ன ; அஸங்க்யேயமான பலவகைப்பட்ட பிறப்பையறுத்து. பலவகையாவது - தேவதிர்யங்மநுஷ்ய ஸ்தாவரங்கள். அஸங்க்யாதமாவது - ஒருஜாதியிலேபிறக்கும் ஜந்மத்துக்கும் தொகையற்றிருக்கை. காலம் அநாதி, ஆத்மா நித்யன், பண்ணிவைக்க வல்ல கர்மங்களுக்கு அவதியில்லாமையாலே கர்மாநுகுணமாகப்பிறக்கவிருக்கிற பிறவிக்குத் தொகையில்லை ஜந்மங்களை அறுத்து. வந்துநின்கழல்பொருந்துமா. அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒருதேசவிசேஷத்திலே வந்து, ஸூரிபோக்யமான திருவடிகளிலே, (உ) "ஸாயாவாஸ் தவமநுகச்சேத்" என்கிறபடியே பார்த்தஸ்திதயனாருமாகப் பொருந்தும்படியாக. திருந்த. (௩) "நோபஜநம் ஸ்மரந்நிதம் சரீரம்" என்கிறபடியே திருவடிகளுக்குப் புறம்பானவற்றை ஸ்மரியாதே கைங்கர்யஸுகமே ஸுகமாம்படி. நீவரஞ்செய். என்னுடைய உஜ்ஜீவநார்த்தமாக * ஆளபார்த்துழிதருகிற நீ ப்ரஸாதத்தைப்பண்ணியருளவேணும். புண்டரீகனே. புண்டரீகாக்ஷனே. புண்டரீகாக்ஷனே!. திருக்கண்களே ப்ரசுரமாயிருக்கையாலே புண்டரீகனென்கிறார். (௪) "விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே" என்னக்கடவதிறே. இத்தால - ப்ரஸாதத்தைப்பண்ணுகையாவது - ஒருவிசேஷகடாக்ஷமென்கை. ... ... ... ... ௯௬.

அ. தொண்ணூற்றேழாம்பாட்டு. "வரஞ்செய்புண்டரீகனே" என்றுநின்றீர், நம்முடையவிசேஷகடாக்ஷத்துக்கு உம்முடையபக்கலிலே ஒரு முதல் வேண்டாவோவென்ன ; திருமார்விலே பிராட்டியெழுந்தருளியிருக்கத் திருக்கையிலே திவ்யாயுதங்களிருக்க ஒருமுதல் வேணுமோ. அங்ஙனேயொருநிர்ப்பந்தம் தேவரீர்க்குண்டாகில் என் விரோதியைப் போக்கி உன்னைக்கிட்டி யடிமைசெய்கைக்கு ஹேதுவாயிருப்பதொரு உபாயத்தை தேவரீரே தந்தருளவேணுமென்கிறார். அகிஞ்சநனாய் தேவரீரைப்பார்த்திருக்கிற எனக்கு ப்ராப்யமான கைங்கர்யத்தோடு உபாயத்தோடு வாசியற தேவரீரே தந்தருளவேணும் மத்தனையன்றோ வென்கிறார்.

மூ.—வெய்யவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்துசீர்க்
கைய! செய்யபோதில்மாது சேருமார்ப! நாதனே!
ஐயிலாயவாக்கைநோ யறுத்துவந்துநின்னடைந்
துய்வதோருபாயநீ யெனக்குநல்கவேண்டுமே. ௯௭.

(க) "வர்ஷாயுதைர்யஸ்யகுணா நசக்யா வக்தும்ஸமேதைரபிஸர்வலோகை: । சதுர்முகாயுர்யதிகோடிவக்த்ர:" (உ) "சாயாவாஸதவமநுகச்சேத்" (௩) "நோபஜநம்ஸ்மரந்நிதம்சரீரம" (௪) "விஜ்ஞாநம்யஜ்ஞம்தநுதே"

ப-ரை.— வெய்ய-வெவ்விதான, ஆழி-திருவாழியையும், சங்கு-ஸ்ரீபாஞ்சஜந்ய ததையும், தண்டு—கௌமோதகியென்னும் கதையையும், வில்லும்—ஸ்ரீசார்ங்கமென்னும் திருவில்லையும், வாளும்—நந்தகமென்னும் திருக்குற்றுடைவாளையும், ஏந்து—எப்போதும் தரித்த, சீர்-அழகிய, கைய-திருக்கைகளையுடையனாய், செய்ய போதில்-சிவந்த தாமரை மலரைப்பிறபபகமாகவுடைய, மாது—பெரியபிராட்டியார், சேரும்—நித்யவாஸம்பண்ணு கிற, மார்ப—திருமார்வையுடையனாய், நாதனே—ஸர்வஸ்வாமியானவனே ; ஐயிலாய—ச்லேஷ்மத்தை பரக்ருதியாக வுடைத்தான, ஆக்கை நோய் அறுத்து—சரீரமாகிறநோயை யறுத்து, வந்து—ஒருதேச விசேஷத்திலேவந்து, நின் அடைந்து—நிரதிசயபோக்யனை உன்னை பராபித்து, உய்வது ஓர் உபாயம்—அடிமைசெய்து உஜ்ஜீவிப்பதொருவழியை, நீ= எனக்கு இல்லாதவையெல்லாம் தரக்கடவநீ, எனக்கு-உன்கைபார்த்திருக்கிறவெனக்கு, நல்க வேண்டும்—தந்தருளவேணுமென்கிறார்.

வயா. வெய்யவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்து சீர்க்கைய. காணவே யெதிரிகள் தறைப்படும்படியான ஸ்ரீபஞ்சாயுதங்களையும் அநவரதம் வாத்ஸல்யத்தாலே திருக்கையிலே யேந்தினவனே. வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படி யிருக்கிற கையிலே திவ் யாயுதங்களை யேந்தினவனே யென்றுமாம். திவ்யாயுதங்களை யேந்தினபடியே யிருக்கிறது தேவரீர்க்கு ஒருவிரோதியுண்டாயோ, என்விரோதியைப் போக்குகைக்காக வன்றோவென் கை. "எப்போதுங்கைகழலா நேமியான் நம்மேல்வினைகடிவான்" என்னக்கடவதிறே. செய்யபோதில்மாதுசேருமார்ப. சிவந்த தாமரைப்பூவைப் பிறந்தகமாக வுடையளாயிருக்கை யாலே ஸுகுமாரியாய்த் திருமேனிக்கு பரபாகரூபத்தாலே ஆபரணபூதையான பிராட்டி "அகலகில்லேனிறையும்" என்று சொல்லப்படும் திருமார்வை யுடையவனே. இத்தால்- ஆச்ரயண விரோதிபாபத்தைப் பொறுப்பிக்கைக்குப் பிராட்டி ஸந்நிதியுண்டாயிருக்க, அநு பவவிநாச்யமாய் பகவத்ப்ராப்தி விரோதிகளை அழியச்செய்கைக்கு பரிகாரமுண்டாயிருக்க, மாதா்பித்ர்ஸந்நிதியிலே நோவுபடுவாரைப்போலே, சரீரஸம்பந்தத்தாலே நோவுபடக்கட வேனோ வென்கை. நாதனே. ஸர்வஸ்வாமியானவனே. இத்தால் — இவள் புருஷகாரமா காதே கையிலே பரிகாரமுமின்றிக்கே யொழிந்தவன்றுதான் ஆருடைமை நோவுபடுகிறது. இப்படியிருக்க, புருஷார்த்தஸித்திக்கு என்தலையிலேயுமோருபாயம் வேணுமென்று தேவ ரீர்க்கு நிர்ப்பந்தமுண்டாகில் அத்தை தேவரீரே தந்தருளவேணுமென்கிறார் மேல்; ஐயிலா யவாக்கை நோயறுத்து. ச்லேஷ்மத்தை ப்ரக்ருதியாகவுடைய சரீரமாகிற நோயையறுத்து. தேஹாத்மாபிமாநிகளுக்கு ப்ரார்த்தநீயமான சரீரம் ஜ்ஞாநம்பிறந்தால் வ்யாதியாயிறேயிருப் பது. "ஏய்ந்ததம்மெய்குந்தமாகவிரும்புவர்" என்னக்கடவதிறே. வந்துநின்னடைந்து. ஒரு தேசவிசேஷத்திலேவந்து நிரதிசயபோக்யனை உன்னைப்ராபித்து. உய்வதோருபாயம். அடி மைசெய்து உஜ்ஜீவிப்பதொருவழியை. நீயெனக்கு நல்கவேண்டுமே. ஸ்ரிய:பதியாய் திவ் யாயுதோபேதனாய் எனக்கில்லாதவையெல்லாம் தரக்கடவநீயே, எல்லாவற்றுக்கு முன்னை பார்த்திருக்கிற வெனக்குத் தந்தருளவேணும். நல்குதல்-கொடுத்தல். அதாகிறது-தருதல்.

அ. தொண்ணூற்றெட்டாம்பாட்டு. நம்முடைய விசேஷகடாக்ஷத்துக்கு உம்முடைய தலையிலே ஒருமுதல்வேணுமே, என்னை நீயே தரவேணுமென்னக்கடவீரோவென்று பகவ தபிப்ராயமாக ; புருஷார்த்தருசியாலே வந்த ப்ராதிகூல்ய நிவ்ருத்தியும் புருஷார்த்த ருசியுமே ஆலம்பநமாக நான் ஸம்ஸாரதுரிதத்தைத் தப்பும்படி நீயேபண்ணியருளவேணுமென்கிறார்.

மூ.—மறந்துறந்துவஞ்சமாற்றி யைம்புலன்களாசையும்
துறந்துநின்கணுசையே தொடர்ந்துநின்றநாயினேன்
பிறந்திறந்துபேரிடர் சுழிக்கணின்றுநீங்குமா
மறந்திடாதுமற்றெனக்கு மாயநல்கவேண்டுமே. கூஅ.

டீ—கை—மாய-ஆச்சர்யமான சக்தியையுடையவனே; மறம் துறந்து-பிறர்மினுக்கம் பொறுமை ழிகையும் பிறருக்குத் தீங்கை நினைக்கையுமாகிற இவற்றைவிட்டு, வஞ்சம் மாற்றி-க்ர்த்ரிமத்தைத் தவிர்த்து, ஐம்புலன்கள் ஆசையும் துறந்து—இந்த்ரியங்களுக்கு இதரவிஷயங்களிலுண்டான ஆசையைவிட்டு, நின்கண் ஆசையே தொடர்ந்து நின்ற-உன்பக்கலாசையையே ஆதரித்துநின்ற, நாயினேன்—தண்ணியனான நான், பிறந்து இறந்து—பிறப்பது சாவதான, பேர் இடர்—மஹா துக்கமாகிற, சுழிக்கண் நின்று—சக்ரத்தினின்றும், நீங்கும் ஆ—நீங்கும்படி, மறந்திடாது—ஸம்ஸாரத்தில் நான்பட்ட துக்கத்தைமறவாமல், எனக்கு—விரோதி நிரஸநத்திலே அசக்தனான எனக்கு, நல்கவேண்டும்—புருஷார்த்தத்தைத் தந்தருள வேணுமென்கிறார்.

வ்யா. மறம்துறந்து. மறமாகிறது-கோபம். அதினெல்லை-பரஸம்ருத்தி பொறுமை ழிகையும், பராநர்த்தசிந்தையும். அத்தைவிட்டு. வஞ்சம்மாற்றி. க்ர்த்ரிமத்தைத் தவிர்த்து. அதாகிறது - அநுகூலனாய்த்தோற்றி ப்ராதிகூல்யத்தோடே தலைக்கட்டுகை. வஞ்சம் — பொய். ஐம்புலன்களாசையும் துறந்து. இந்த்ரியங்களுக்கு இதரவிஷயங்களிலுண்டான ஸங்கத்தையும் விட்டு. கீழ் - "பொறியிலேன்" என்றத்தை அகப்பாடாகச் சொன்னார்; இதிலே - கீழ்ச்சொன்ன கோப க்ர்த்ரிமங்களுக்கு ஹேதுவான விஷயாந்தர ஸங்கத்தையும் விட்டு. அவைதான் புருஷார்த்தருசி பிறந்தார்க்கு அஸம்பாவிதங்கள். நின்கணுசையே தொடர்ந்துநின்ற. உன்பக்கலாசையையே ஆதரித்துநின்ற. அதாகிறது — பகவத்ப்ரேமம் வேணுமென்றிருக்கிற ஆதரம். தொடர்வு - உறவு. நாயினேன். ப்ராதிகூல்ய நிவ்ருத்தியும் புருஷார்த்த ருசியுமொழிய, புருஷார்த்த ஸித்திக்கு முதலொன்றுமின்றிக்கே யிருக்கிற அநந்யகதி. பிறந்திறந்து பேரிடர் சுழிக்கண் நின்று நீங்குமா. பிறப்பது சாவதான மஹா து:க சக்ரத்தினின்றும் நீங்கும்படி. "பிறந்து" என்கிறவிது - ஷட்பாவவிகாரத்துக்கும் உபலக்ஷணம். "இறந்து" என்கிறவிது - நரகாதிகளுக்கும் உபலக்ஷணம். மறந்திடாது மற்றெனக்கு மாய நல்கவேண்டுமே. ஸம்ஸாரத்திலே நான்பட்ட து:கத்தையும் என்னுடைய பூர்வவ்ருத்தத்தையும் தேவரீருடைய ஸ்வாதந்த்ர்யத்தையும் பார்த்து விஸ்மரியாதே, அபேக்ஷாமாத்ரத்தையும் ஸம்பந்தத்தையும் பார்த்து, விரோதிநிரஸநத்திலே அசக்தனான எனக்கு தந்நிவ்ருத்தி பூர்வகமாக புருஷார்த்தத்தைத் தந்தருளவேணும். "மற்று" என்கிறது விரோதிநிவ்ருத்தி ஸமநந்தரத்திலே லபிக்குமதாகையாலே. மாய. (க) "मममाया" என்கிறபடியே ஸம்ஸாரசக்ரத்தை யறுத்து நித்யஸூரிகளோடே ஒருகோவை யாக்கவல்ல ஆச்சர்யசக்தியுக்தனே. ... ... ... ... ... ... கூஅ.

அ. தொண்ணூற்றென்பதாம்பாட்டு. புருஷார்த்தருசி பிறந்தபின்பு அத்தால்வந்த ப்ராதிகூல்ய நிவ்ருத்தியை உம்முடையபக்கல் முதலாகச் சொல்லாநின்றீர், அநாதிகாலம் நரக ஹேதுவாகப் பண்ணின ப்ராதிகூல்யங்களுக்குப போக்கடியாக நீர் நினைத்திருந்த தென்னென்ன; நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக, (உ) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"

(க) "மமமாயா" (உ) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"

என்ற உன் திருவடிகளிலே ந்யஸ்தபரனை இதொழிய வேறுபோக்கடியுண்டோ, ஆன பின்பு கீழ்ச்சொன்ன கர்மமடியாக வருகிற யமவசயதையைத் தவிர்த்து, எனக்கு உன் திருவடிகளிலே அவிச்சிந்நமான போகத்தைத் தநதருளவேணு மென்கிறார்.

மூ.—காட்டிநான்செய்வல்வினைப் பயன்றனுல்மனந்தனை
நாட்டிவைத்துநல்லவல்ல செய்யவெண்ணினாரெனக்
கேட்டதன்றியென்னதாவி பின்னைகேள்வநின்னொடும்
பூட்டிவைத்தவென்னைநின்னுள் நீக்கல்பூவைவண்ணனே. கூகூ.

ப-ரை.— பின்னை—நப்பின்னைப்பிராட்டிக்கு, கேள்வ—வல்லபனாய், பூவை வண்ணனே—காயாம்பூப்போன்ற திருநிறத்தையுடையவனே; நான் செய்—நான்செய்த, வல்வினை—ப்ரபலமானபாபங்களை, காட்டி—யமபடர்க்குக்காட்டி, ( “ இந்த பாபபலம் நமக்கு அநுபவிக்க ப்ராப்தம் ” என்று, ) பயன்தனுல்—பலத்திலே, மனந்தனை— மநஸ்ஸை, நாட்டிவைத்து—பூட்டிவைத்து, நல்ல அல்ல செய்ய எண்ணினார் என-கொடிய செயல்களைச் செய்யவெண்ணினாரென்று, கேட்டது அன்றி—கேட்டுப்போந்தவற்றையகற்றி, என்னது ஆவி—பாபப்ரசுரனாய் அகிஞ்சநனான என்னுடைய ஆத்மாவை, நின்னொடும—உன்விஷயத்திலே, பூட்டிவைத்த என்னை—ஸமர்ப்பித்தவென்னை, நின்னுள்— உன்பக்கல் நின்றும், நீக்கல்— அகற்றுதொழியவேணும்.

வ்யா. காட்டிநான்செய்வல்வினை. நான்செய்த ப்ரபலமான பாபங்களை யமபடர் எனக்குக்காட்டி. வாசிகமாயும் மாநஸமாயுமுள்ள பாபங்களை பொழிய, செய்தவையாய், நரக ப்ரவேசம் பண்ணி அநுபவிக்கவேண்டும் ப்ரபலபாபங்களை. இத்தால் — இவர்கள் என்னை நலிகிறார்களென்று நான் நினையாதபடி பண்ணுமவாகளென்கை. பயன்றனுல்மனந்தனை நாட்டிவைத்து. இந்தபாபபலம் நமக்கு இவ்வளவும் அநுபவிக்க ப்ராப்தமென்று பலத்திலேயும் என்மநஸ்ஸைப் பூட்டிவைத்து. நல்லவல்லசெய்ய வெண்ணினார். கொடிய செயல்களைச்செய்ய வெண்ணினார். இவனுக்கு முதலிலேபண்ணின பாபத்தை யறிவித்து இப்பாபபலம் நாம் இவ்வளவு மநுபவிக்க வேணுமாகாதே! என்று நெஞ்சைபபிறப்பித்துப் பின்னையாய்த்து க்ரூரமான செயல்களை அவர்கள்செய்ய நினைப்பது. எனக்கேட்டதன்றி. என்று கேட்டுப் போந்தவற்றையகற்றி. இப்படி சாஸ்த்ரத்திலே கேட்டுப்போநத யமவசயதையைத் தவிர்த்து. என்னதாவி பின்னைகேள்வ நின்னொடும்பூட்டிவைத்தவென்னை. நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனாகையால் வந்த நீர்மையையுடைய க்ருஷ்ணனே ! பாபப்ரசுரனாய் அகிஞ்சநனான என்னுடைய ஆத்மாவை உன்பக்கலிலே ஸமர்ப்பித்த வென்னை. “ காலியாய - நின்றனக்கடைக்கலம் புகுந்தவென்னை ” என்றத்தை ஸ்மரிபபிக்கிறார். பூட்டி வைக்கையாவது-“ நீ விடக்கருதி மெய்செயாது மிக்கோராசையாக்கிலும் - நின்னலாலோர்கண்ணிலேன் ” என்றத்தை ஸ்மரிப்பிக்கிறார். நின்னுள்நீக்கல் பூவைவண்ணனே. பூவைப் பூப்போலேநிறத்தையும் ஸௌகுமார்யத்தையுமுடைய வடிவையுடையவனே ! நின்பக்கல்நின்றும் அகற்றுதொழியவேணும். புஷ்பஹாஸ ஸுகுமாரமான வடிவழகை ஸர்வகாலமும் விச்சேதியாதே அநுபவிக்கும்படி பண்ணியருளவேணும். “ பின்னைகேள்வ - என்ன தாவிநின்னொடும் பூட்டிவைத்த வென்னை - காட்டி நான் செய்வல்வினைப்பயன்றனுல்மனந்தனை நாட்டிவைத்து நல்லவல்ல செய்யவெண்ணினாரெனக்கேட்டதன்றி - பூவைவண்ணனே - நின்னுள் நீக்கல் ” என்றந்வயம். ... கூகூ.

அ. நூரும்பாட்டு. இப்படி அவிச்சின்னமான அநுபவத்துக்கு பரபக்தி யுக்தனுக வேண்டாவோவென்ன; அப்பரபக்தியைத் தந்தருளவேணுமென்கிருர்.

மூ.—பிறப்பிஞேடுபேரிடர்ச் சுழிக்கணின்றுநீங்குமஃ
திறப்பவைத்தஞானநீச ரைக்கரைக்கோடேற்றுமா
பெறற்கரியநின்னபாத பத்தியானபாசனம்
பெறற்கரியமாயனே யெனக்குநல்கவேண்டுமே. கOO.

ப-ரை.—பிறப்பிஞேடு - ஜந்மத்தோடேகூடின, (தாபத்ரயரூபமான,) பேர் இடர் - மஹா துக்கத்தை விளைக்கக்கடவதான, சுழிக்கண்நின்று—ஸம்ஸாரமாகிற சக்ரத்தினின்றும், நீங்கும் அஃது—நீங்குகைக்குறுப்பான தத்வஹிதங்களை, இறப்பவைத்த—மறைத்துவைத்து, ஞானநீசரை—ஸர்வோத்தமராகத்தங்களை அபிமாநித்திருக்கும் நீசரை, கரைக்கொடு ஏற்றும் ஆ—கரையிலேகொண்டேற்றுகைக்கு உபாயமாக, பெறற்கு அரிய—பெறுதற்கு அரிய, நின்ன பாதம்—உன் திருவடிகளை விஷயமாகவுடைத்தான, பத்தி ஆன—பக்தியாகிற, பாசனம்—பாஜநத்தை, (உன் க்ருபையாலேயொழிய,) பெறற்கு அரிய—வேருருவழியாலே பெறக்கூடாத, மாயனே—ஆச்சர்யசக்தியுக்தனே, எனக்கு—உன் க்ருபையல்ல தறியாத எனக்கு, நல்கவேண்டும்—தந்தருளவேணும்.

வயா. பிறப்பிஞேடுபேரிடர் சுழிக்கண்ணின்று நீங்குமஃதிறப்பவைத்த. ஜந்மத்தோடேகூடின தாபத்ரயரூபமான மஹா துக்கத்தைவிளைக்கக்கடவதான ஸம்ஸாரசக்ரத்தில் நின்றும் நீங்குகைக்குறுப்பான தத்வஹிதங்களை மறைத்துவைத்தவர்கள். தத்வஹிதங்களை "அஃது" என்றது – ச்ருதிப்ரஸித்தியாலே. அதாவது – ஸம்ஸர்க்க தத்ஸாதநங்களை வேதார்த்தமென்றிருக்கை. (க) "[Grantha]" என்றிறே அவர்கள் நிர்ணயம். இறக்கையாவது - நசிக்கை. அதாகிறது – (உ) "[Grantha]" என்கிறபடியே மறைக்கை. ஞானநீசரை. ஸர்வஜ்ஞராகத் தங்களை அபிமாநித்திருக்கும் நீசரை. "யாரும் வையகத்தொன்றிநின்று வாழ்தலின்மைகண்டு நீசர்" என்றவர்கள் கேவலநீசர்; இவர்கள் ஜ்ஞாநநீசர். கரைக்கோடேற்றுமா. இவர்களைக் கரையிலேகொண்டேற்றுகைக் குபாயமாக. (ங) "[Grantha]" என்கிறபடியே - ஸம்ஸாரத் தாவுக்குக் கரையாவது - பகவத்விஷயமிறே. அத்தை லபிக்கைக்கு உபாயமாக வேதாந்தங்களில் சொல்லிவைத்த. பெறற்கரியநின்னபாத பத்தியானபாசனம். பெறுதற்கரிய உன் திருவடிகளை விஷயமாகவுடைத்தான பரமபக்தியாகிற பாஜநத்தை. ப்ராப்யனுனவனிற் காட்டில் தத்விஷயபக்தி துர்லபமிறே. (ச) "[Grantha]" என்றும், (ரு) "[Grantha]" என்றும், (சு) "[Grantha]" என்றும் சொல்லக்கடவதிறே. பாசனம் – மரக்கலம். அத்தாலே — தநத்தைலக்ஷிக்கிறது. "தனமாயதானே கைகூடும்" என்னக்கடவதிறே. (எ) "[Grantha]" என்றும், (அ) "[Grantha]" என்றும்-வேதாந்தங்கள்

(க) "வேதவாதரதா:பார்த்த நாந்யதஸ்தீதிவாதிந:" (உ) "ஙசு—அதர்சநே"
(ங) "ஸோத்வந:பாரமாப்நோதி தத்விஷ்ணோ:பரமம்பதம்" (ச) "யாப்ரீதிரவிவேகாநாம்"
(ரு) "முக்திஸ்தஸ்யகரேஸ்திதா" (சு) "ஸமஸ்தஜகதாம் மூலேயஸ்யபக்திஸ்ஸ்திராத்வயி"
(எ) "யமேவைஷவ்ருணுதேதேநலப்ய:" (அ) "ஹ்ருதாமநீஷாமநஸாபிக்லுப்த:"

உன் திருவடிகளைப்பெறுகைக்கு ஸாதநமானபக்தியை உபதேசித்தருளவேணுமென்கிறார்; அந்த பக்தியை. பெறற்கரியமாயனே. உன் கேவலக்ருபையையொழிய வேறொருவழியாலே உன்னைப்பெற இருப்பார்க்கு ஸித்தியாத ஆச்சர்யபூதனே. லோகத்தில் ஸாத்யங்களுக்கெல்லாம் ஸாதநமுண்டாயிருக்க அநந்யஸாத்யனான ஆச்சர்யபூதனே. எனக்குநல்கவேண்டுமே. பெறவேண்டுமவை யெல்லாவற்றுக்கும் உன்க்ருபையையல்லதறியாத எனக்கு அந்த பக்தியை தேவரீர் தந்தருளவேணும். ப்ரயோஜநாந்தரபரர்க்கு மோக்ஷருசியைப்பிறப்பித்து தத்ஸாதநமானபக்தியைக்கொடுத்தருளக்கடவ தேவரீர், அநந்யப்ரயோஜநனுய் அநந்யஸாதநனுயிருநதுள்ள எனக்கு த்வதநுபவபரிகரமான அந்தபக்தியைத் தந்தருளுகை தேவரீர்க்கு அபிமதமன்றோ, அத்தைத் தந்தருளவேணுமென்றதாய்த்து. ... ... கOO.

அ. நூற்றோராம்பாட்டு. நீர் நம்மை ப்ரார்த்திக்கிற பரபக்தி-விஷயாந்தரங்களினின்றும் நிவ்ர்த்தமான இந்த்ரியங்களைக்கொண்டு நம்மை அநவரதபாவனைபண்ணுமத்தாலே ஸாத்யமன்றோவென்ன; அங்ஙனேயாகில் ஜிதேந்த்ரியனுய்க்கொண்டு அநவரதபாவனை பண்ணுவேனுக தேவரீர் திருவுள்ளமாகவேணுமென்கிறார்.

மூ.—இரந்துரைப்பதுண்டுவாழி யேமநீர்நிறத்தமா
வரந்தருந்திருக்குறிப்பில் வைத்ததாகில்மன்னுசீரப்
பரந்தசிந்தையொன்றிநின்று நின்னபாதபங்கயம்
நிரந்தரம்நினைப்பதாக நீநினைக்கவேண்டுமே. கOக.

ப-ரை —இரந்து-தேவரீரைத் தலையாலே யிரந்து, உரைப்பது உண்டு-விண்ணப்பஞ்செய்யப்புகுகிற தொருகார்யமுண்டு; வாழி-உன் வடிவழகுக்கு மங்களமுண்டாகக்கடவது; ஏமம் நீர்—அபரிச்சிந்நமான கடல்போலேயிருக்கிற, நிறத்த—திரு நிறத்தையுடைய நிருபாதிகபந்துவே; மன்னு—இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபாநுரூபமான, சீர்—நன்மைகளையும், வரம்—ஆச்ரிதாபேக்ஷிதவரங்களையும், தரும்-தந்தருளுகிற, திருக்குறிப்பில்-திருவுள்ளத்திலே, வைத்தது ஆகில்—எனக்குத்தர நினைத்ததாகில், பரந்த—சப்தாதி விஷயங்களிலே பரந்த, சிந்தை—என்னுடைய மநஸ்ஸு, ஒன்றி நின்று—உன்பக்கலிலேபொருந்தி நின்று, நின்ன பாதபங்கயம்-உன் திருவடித்தாமரைகளை, நிரந்தரம் நினைப்பதாக-நிரந்தரமாக நினைக்கும்படி, நீ நினைக்கவேண்டும்—நீ திருவுள்ளம்பற்றியருளவேணும்.

வ்யா. இரந்துரைப்பதுண்டு. (க) "ஶிரஸா யாசதஸ்தஸ்ய" என்கிறபடியே திருவடிகளிலே பக்தாபிமாநனுய்க்கொண்டுவிழுந்து, தலையாலே தேவரீரையிரந்து விண்ணப்பஞ்செய்யப்புகுகிற தொருகார்யமுண்டு. வகுத்தவிஷயத்திலே ஸ்வரூப ப்ராப்தமான அநவரதபாவனையே அர்த்திக்கிறாராகில் இப்படி கூசிச்சொல்லுகிறதென்னென்னில்; தம்முடைய பூர்வ வ்ர்த்தத்தைப்பார்த்தும், தத்வத்தினுடைய உத்துங்கதையைப்பார்த்து மருளிச்செய்கிறார். பூர்வ வ்ர்த்தத்தைப்பார்த்தால் கிட்டக்கூசவேணும், கிட்டினாலும் உத்துங்கதையைப்பார்த்தால் அநாதரிக்கிறானோவென்று கூசவேணும். வாழி. அவன்முகம் பார்க்கைக்காக மங்களாசாஸநம்பண்ணுகிறாரென்னுதல்; அநவரதபாவனைக்கு விஷயமான அவனழகை யநுஸந்தித்து மங்களாசாஸநம்பண்ணுகிறாரென்னுதல். ஏமநீர்நிறத்தமா. (உ) "ஸமுத்ர இவ காம்பீர்யே" என்கிறபடியே - அபரிச்சிந்நமான கடல்போலேயிருக்கிற திருநிறத்தையு

(க) "ஶிரஸா யாசதஸ்தஸ்ய" (உ) "அப்ரமேயோமஹோததி:"

டைய நிருபாதிகபந்துவே. ஏமம் - உறவு. (௧) "ஸம்நாவஞ்ஷ" என்றும், (௨) "ஸஹாவொவாஞ்ஷவொஜாதஃ" என்றும் சொல்லக்கடவதிறே. இத்தால் - இரந்தல்லது நிற்கவொண்ணாதபடியையும், மங்களாசாஸநம்பண்ணியல்லது நிற்கவொண்ணாதபடியான வடிவழகையும், ப்ராப்தியையும் சொல்லுகிறது. வரந்தருந்திருக்குறிப்பில்வைத்ததாகில் மன்னுசீர். இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபாநுரூபமான நன்மைகளை, அபேக்ஷித்தார் அபேக்ஷிதத்த வரங்களைத்தந்தல்லது நிற்கமாட்டாத திருவுள்ளத்திலே வைத்ததாகில். சீர் - நன்மை. அதாகிறது கைங்கர்யஸாம்ராஜ்யம். இந்த கைங்கர்யத்துக்கடியாயிருக்குள்ள அநவரதபாவனையை அபேக்ஷிக்கிறார்மேல்; பரந்தசிந்தையொன்றிநின்று. சப்தாதிவிஷயங்களிலேபோந்த என்னுடைய மநஸ்ஸு, மற்றொன்றில்போகாதே உன்பக்கலிலே ஒன்றிநின்று. நின்னபாதபங்கயம் பாவநமுமாய், நிரதிசய போக்யமாகையாலே ஆகர்ஷகமுமான உன் திருவடிகளை நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே. அம்மநஸ்ஸு நிரந்தரமாக நினைக்கவற்றும்படி நீ திருவுள்ளமாகவேணும். என் நினைவும் என்செயலும் அகிஞ்சித்கரம், உன் நினைவுக்கே பலவ்யாப்தியுள்ளதென்கை. ... ... ... ... ... ... ௧0௧.

அ. நூற்றிரண்டாம்பாட்டு. விச்சேத ப்ரஸங்கமில்லாத அநவரதபாவனைக்கு சரீரஸம்பந்தமறவேணுங்காணுமென்ன; எனக்கு ருசியுண்டாயிருக்க தேவரீர் ஸர்வசக்தியாயிருக்க அநுவர்த்திக்கிற இவ்வசித் ஸம்ஸர்க்கத்தை தேவரீரறுத்துத்தந்தருளுமளவும் நான் தரித்திருக்கும்படி இன்னபடி செய்கிறோமென்று ஒரு வார்த்தையாகிலும் அருளிச்செய்யவேணுமென்கிறார்.

மூ.—வில்விலாதகாதலால் விளங்குபாதபோதில்வைத்
துள்ளுவேனதூனநோ யொழிக்குமாதெழிக்குநீர்
பள்ளிமாயபன்றியாய வென்றிவீரகுன்றினால்
துள்ளுநீர்வரம்புசெய்த தோன்றலொன்றுசொல்லிடே. ௧0௨.

ப—ரை.—தெழிக்கும்—கோஷிக்கிற, நீர்—கடலிலே, பள்ளி—கண்வளர்ந்தருளுகிற, மாய—ஆச்சர்யபூதனே, பன்றி ஆய—மஹாவராஹமாய் பூம்யுத்தாரணம்பண்ணி, வென்ற—ஹிரண்யனைவென்ற, வீர—வீரத்தையுடையவனுய், துள்ளு நீர்—திரைக்கிளர்த்தியையுடைய கடலிலே, குன்றினால்—நீரிலே ஆழக்கடவ மலைகளைக்கொண்டு, வரம்பு செய்த—அணைசெய்த, தோன்றல்—சக்ரவர்த்தி திருமகனே; வில்வு இலாத—விச்சேதமில்லாத, காதலால்—ப்ரேமத்தாலே, விளங்கு—உஜ்வலமான, பாதபோதில்—திருவடித்தாமரைகளிலே, வைத்து—நெஞ்சைவைத்து, உள்ளுவேனது—அத்திருவடிகளையே தஞ்சமாக நினைத்திருக்கிறவெனக்கு, ஊனம்—ஊனத்தைவிளைக்குமதான, நோய்—ஸம்ஸாரமாகிற நோயை, ஒழிக்கும் ஆறு ஒன்று—போக்கநினைத்திருக்கிறதோருபாயம், சொல்லிடு—அருளிச்செய்யவேணும்.

வ்யா. வில்விலாதகாதலால். ப்ரயோஜநாந்தரங்களைப்பற்றி நெகிழாதே அநந்ய ப்ரயோஜநனுய்க்கொண்டு திருவடிகளில் பண்ணின ப்ரேமத்தாலே. "வில்கை வில்லாமைவிரும்பி" என்னக்கடவதிறே. விளங்குபாதபோதில்வைத்து. அந்த ப்ரேமத்தாலே உஜ்வலமான திருவடித்தாமரைகளிலே நெஞ்சைவைத்து. அநந்யப்ரயோஜநரான ஆச்ரிதருடைய ஸந்நிதியிலே அலருமதிறே திருவடித்தாமரைகள். இத்தால் — நான் ப்ரயோஜநாந்தரபரனுய்

(௧) "ஸநோபந்துஃ" (௨) "அஹம்வோபாந்தவோஜாதஃ"

அசித்ஸம்பந்த மநுவர்த்திக்கிறதோ, தேவரீர் ஆச்ரிதவத்ஸலரல்லாமே யநுவர்த்திக்கிறதோ வென்கை. உள்ளுவேனதூனநோ யொழிக்குமா. அத்திருவடிகளையே தஞ்சமென்று நினைத்திருக்கிற வெனக்கு ஊனத்தை விளைக்கும் சரீரஸம்பந்தமாகிற நோயைப்போக்க நினைத்திருக்கிற விரகு. ஊனமாகிறது — ஸ்வஸ்வரூபவிஷயமான ஜ்ஞாநஸங்கோசமும், பகவத்ஜ்ஞாந ஸங்கோசமும், பகவதநுபவஸங்கோசமும். இவற்றை விளைக்குமதிறே தேஹஸம்பந்தம். "சரீரம" என்றும, "வ்யாதி" என்றும் - பர்யாயமிறே. இத்தால் — வேறொன்றைத் தஞ்சமென்றிழுக்கிறேனோ, சரீரத்திலாதரமுண்டா யிழுக்கிறேனோ. தெழிக்குநீர்ப்பள்ளிமாய. தேவரீரோட்டை ஸ்பர்சத்தாலே கோஷிக்கிறகடலிலே ஆச்ரிதாநுக்ரஹார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிற ஆச்சர்யமான ஸௌலப்யாதிகுணயுக்தனே. தெழிக்கை - முழங்குகை. பன்றியாயவென்றிவீர. விஸத்ர்சயான ஸம்ஸாரத்திலே ஆச்ரிதாநுக்ரஹார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிற இவ்வளவேயன்றிக்கே, நீருக்கும் சேற்றுக்குமிறுயாத மஹாவராஹமாய் பாதாளகதையான பூமியை யெடுத்து ஹிரண்யாக்ஷனைவென்ற வீரத்தை யுடையவனே. குன்றினால்துளறு நீரவரம்பு செய்ததோன்றல். தன்னில்கிடக்கும் பதார்த்தங்களைக் கரையிலே போகடுமதிரைக் கிளர்த்தியையுடைய கடலிலே அழுந்தக்கடவ மலைகளைக்கொண்டு அணைசெய்த சக்ரவர்த்தி திருமகனே. தோன்றல் - அரசன். பரமபதநிலயனான தேவரீர் ஆச்ரிதார்த்தமாக ஸம்ஸாரத்திலேவந்து ஸுலபராயும் தேவரீரையழிய மாறி நஷ்டோத்தரணம் பண்ணியும, ஆச்ரிதவிரோதிகளை யழியச்செய்தும், அதிமாநுஷசேஷ்டிதங்களைப் பண்ணியும், இபபடி நீர்மையாலும் சக்தியாலும் குறைவற்ற தேவரீர்க்கு, என் சரீரஸம்பந்தத்தை யறுக்கைக்கு என்கையில் பொருளுண்டோவென்கை. ஒன்றுசொல்லிடே. இரண்டு தலையிலும் குறைவற்ற பின்பு இது அநுவர்த்திக்கிறது நீ நினையாமையிறே. தேவரீர் நினைக்குமளவும் தரிக்கும்படி "இன்னவளவிலே செய்கிறோம்" என்று ஒரு வார்த்தை யருளிச்செய்ய வேணும். தெழிக்குநீர்ப்பள்ளிமாய பன்றியாய வென்றிவீர குன்றினால் துள்ளுநீர்வரம்பு செய்த தோன்றல் - வில்விலாதகாதலால் விளங்கு பாதபோதில் வைத்து உள்ளுவேனதூனநோ யொழிக்குமா - ஒன்று சொல்லிடே" என்றந்வயம். ... ... ௧0உ.

அ. நூற்றுமூன்றும்பாட்டு. அசித்ஸம்பந்தம் தேஹாவஸாநத்திலே போக்குகிறோம், நீர் பதறுகிறதென்னென்ன; அங்ஙனேயாகில் தேவரீருடைய மேன்மைக்கும் நீர்மைக்கும் வடிவழகுக்கும் வாசகமான திருநாமங்களை நான் இடைவிடாதே மநநம்பண்ணிப் பேசுகைக்கு ஒருப்ரகார மருளிச்செய்ய வேணுமென்கிறார்.

மூ.—திருக்கலந்துசேருமார்ப தேவதேவதேவனே
இருக்கலந்தவேதநீதி யாகிநின்றநின்மலா
கருக்கலந்தகாளமேக மேனியாயநின்பெயர்
உருக்கலந்தொழிவிலா துரைக்குமாறுரைசெயே. ௧0௩.

ப-ரை.—திரு—பெரிய பிராட்டியார், கலந்து—தேவரீரோடே ஸம்ச்லேஷித்து, சேரும்—நித்யவாஸம்பண்ணுகிற, மார்ப—திருமார்பையுடையனாய், தேவதேவதேவனே—நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாய், இரு கலந்த—ரிக்(ஜ்ஸ)ப்ரசுரமான, வேதம்—வேதத்தாலே ப்ரதிபாதிக்கையையே, நீதி ஆகிநின்ற—ஸ்வபாவமாக வுடையையாய் நின்ற, நின்மலா—ஹேயப்ரத்யநீகனாய், கரு கலந்த—பொன்போலே புகர்த்து, காளமேகம்—கறுத்த

மேகம்போலே யிருக்கிற, மேனி—திருமேனியையுடைய, ஆய-க்ர்ஷ்ணனே, நின் பெயர் உருக்கலந்து—உன் திருநாமங்களை மநநம்பண்ணி, ஒழிவு இலாது—இடைவிடாதே, உரைக்கும் ஆறு—பேசும்வழியை, உரைசெய்—அருளிச்செய்யவேணும்.

வ்யா. திருக்கலந்துசேருமார்ப. பிராட்டி தேவரீரோடே ஸம்ச்லேஷித்து, அந்த ஸம்ச்லேஷத்தில் அதிசங்கித்து "அகலகில்லேனிறையும்" என்று நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வையுடையவனே. பத்தரோடு முக்தரோடு நித்யரோடு வாசியற, (க) "ஈச்வரீம் ஸர்வபூதாநாம்" என்கிறபடியே - ஸர்வர்க்கும் அபாச்ரயபூதையான பிராட்டி தான் நித்யஸாபேக்ஷையாம்படியன்றோ தேவரீருடையபெருமை. தேவதேவதேவனே. (உ) "யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:" என்கிறபடியே ப்ரஹ்மாதிகளுக்கு மோக்ஷருசிபிறந்தவன்று ப்ராப்யமான நித்யஸூரிகளுக்கு நித்யாநுபாவ்யனாய்க்கொண்டு நிர்வாஹகனானவனே. தேவரீரும் பிராட்டியும் சேர்ந்த சேர்த்தியிலே மெடுத்துக் கைநீட்டுகையே யாத்ரையாயிருக்கும் நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனென்கை. இருக்கலந்த வேதநீதியாகிநின்ற நின்மலா. நிரபேக்ஷமான வேதத்தாலே ப்ரதிபாதிக்கையையே ஸ்வபாவமாக வுடையையாய் நின்ற ஹேயப்ரத்யநீகனே. நீதி - ஒழுக்கம். அதாகிறது - ஸ்வபாவம். (௩) "ஹ்ரீச்ச தே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ" (௪) "தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய:" (௫) "அபஹதபாப்மா" இத்யாதிவாக்யங்களாலே ஸ்ரீய:பதித்வமென்ன, ஸூரிபோக்யதையென்ன, ஹேயப்ரத்யநீகதையென்ன, இப்படிகளாலே வேதைகஸமதிகம்யனென்கை. கருக்கலந்த காளமேக மேனியாய. பொன்போலே புகர்த்துக் கறுத்து மேகம்போலே யிருக்கிற திருமேனியையுடைய. க்ர்ஷ்ணனே. கரு - பொன். (௬) "நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவபாஸ்வரா" (எ) "அஜாயமாநோ பஹுதா விஜாயதே" என்று - விக்ரஹத்தையும் அவதாரஸௌலப்யத்தையும் சொல்லிற்றிறே. (அ) "நவமாஸத்ர்தம் கர்ப்பம்" என்னுமாபோலே நீரையுள்ளேயுடைய காளமேகமென்னவுமாம். கரு - கர்ப்பம். இத்கால - தாபஹரமாய் ஆகர்ஷகமுமான வடிவோடே க்ர்ஷ்ணனாய்வந்தவதரித்து ஆச்ரிதர்க்கு ஸுலபனானவனென்கை. நின் பெயருருக்கலந்தொழிவிலாது உரைக்குமாறுரைசெயே. ஸ்ரீய:பதி, * அயர்வறுமமரர்களதிபதி, ஹேயப்ரத்யநீகன், விலக்ஷண விக்ரஹயுக்தன், ஆச்ரிதஸுலபனென்று நிரதிசயமான ப்ரதிபாத்யனான உன்குணங்களுக்கு வாசகமான திருநாமங்களை வடிவழகோடே இடைவிடாதே நான் பேசுகைக்கு வழியை யருளிச்செய்யவேணும். ... ... கO௩.

அ. நூற்றுநான்காம்பாட்டு. (௯) "யத்கரோஷி யதச்நாஸி" என்றும், (கO) "த்ரவ்யயஜ்ஞாஸ் தபோயஜ்ஞா:" என்று மித்யாதிகர்மத்தாலே விரோதிபாபத்தைப்போக்கி, (கக) "ஸததம் கீர்த்தயந்த:" என்கிறபடியே நம்மை யநுபவிக்கும் வழி சொல்லிவைத்திலோமோ, "உரைசெய்" என்கிறதென்னென்ன; நீ ப்ரதிபாதக நிரஸநஸமர்த்தனாயிருக்க, நான் காமத்தாலே விரோதியைப்போக்க வென்பதொன்றுண்டோ, நீயே என் விரோதியைப்போக்கி உன்னை நான் மேல்விழுந்து இடைவிடாதே யநுபவிக்கும்படி பண்ணித் தந்தருளவேணுமென்கிறார்.

---

(க) "ஈச்வரீம்ஸர்வபூதாநாம்" (உ) "யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவா:" (௩) "ஹ்ரீச்சதேலக்ஷ்மீச்சபத்ந்யௌ" (௪) "தத்விஷ்ணோ:பரமம்பதம் ஸதாபச்யந்தி ஸூரய:" (௫) "அபஹதபாப்மா" (௬) "நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவபாஸ்வரா" (எ) "அஜாயமாநோபஹுதாவிஜாயதே" (அ) "நவமாஸத்ர்தம்கர்ப்பம்" (௯) "யத்கரோஷியதச்நாஸி" (கO) "த்ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா:" (கக) "ஸததம் கீர்த்தயந்த:"

அசித்ஸம்பந்த மநுவர்த்திக்கிறதோ, தேவரீர் ஆச்ரிதவத்ஸலரல்லாமையே யநுவர்த்திக்கிறதோ வென்கை. உள்ளுவேனதூனநோ யொழிக்குமா. அத்திருவடிகளையே தஞ்சமென்று நினைத்திருக்கிற வெனக்கு ஊனத்தை விளைக்கும் சரீரஸம்பந்தமாகிற நோயைப்போக்க நினைத்திருக்கிற விரகு. ஊனமாகிறது — ஸ்வஸ்வரூபவிஷயமான ஜ்ஞாநஸங்கோசமும், பகவத்ஜ்ஞாந ஸங்கோசமும், பகவதநுபவஸங்கோசமும். இவற்றை விளைக்குமதிறே தேஹஸம்பந்தம். "சரீரம்" என்னும், "வ்யாதி" என்னும் - பர்யாயமிறே. இத்தால் — வேறொன்றைத் தஞ்சமென்றிழக்கிறேனோ, சரீரத்திலாதரமுண்டா யிழக்கிறேனே. தெழிக்குநீர்ப்பள்ளிமாய. தேவரீரோட்டை ஸ்பர்சத்தாலே கோஷிக்கிறகடலிலே ஆச்ரிதாநுக்ரஹார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிற ஆச்சர்யமான ஸௌலப்யாதிகுணயுக்தனே. தெழிக்கை - முழங்குகை. பன்றியாயவென்றிவீர. விஸத்ர்சமான ஸம்ஸாரத்திலே ஆச்ரிதாநுக்ரஹார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிற இவ்வளவேயன்றிக்கே, நீருக்கும் சேற்றுக்குமிறாயாத மஹாவராஹமாய் பாதாளகதையான பூமியை யெடுத்து ஹிரண்யாக்ஷனை வென்ற வீரத்தை யுடையவனே. குன்றினால்துள்ளு நீர்வரம்பு செய்ததோன்றல். தன்னில்கிடக்கும் பதார்த்தங்களைக் கரையிலே பொகடுமதிரைக் கிளர்த்தியையுடைய கடலிலே ஆழுந்தக்கடவ மலைகளைக்கொண்டு அணைசெய்த சக்ரவர்த்தி திருமகனே. தோன்றல் - அரசன். பரமபதநிலயனான தேவரீர் ஆச்ரிதார்த்தமாக ஸம்ஸாரத்திலேவந்து ஸாலபாரயும் தேவரீரையழிய மாறி நஷ்டோத்தாரணம் பண்ணியும், ஆச்ரிதவிரோதிகளை யழியச்செய்தும், அதிமாநுஷசேஷ்டிதங்களைப் பண்ணியும், இப்படி நீர்மையாலும் சக்தியாலும் குறைவற்ற தேவரீர்க்கு, என் சரீரஸம்பந்தத்தை யறுக்கைக்கு என்கையில் பொருளுண்டோவென்கை. ஒன்றுசொல்லிடே. இரண்டு தலையிலும் குறைவற்ற பின்பு இது அநுவர்த்திக்கிறது நீ நினையாமையிறே. தேவரீர் நினைக்குமளவும் தரிக்கும்படி "இன்னவளவிலே செய்கிறோம்" என்று ஒரு வார்த்தை யருளிச்செய்ய வேணும். தெழிக்குநீர்ப்பள்ளிமாய பன்றியாய வென்றிவீர குன்றினால் துள்ளுநீர்வரம்பு செய்த தோன்றல் - விள்விலாதகாதலால் விளங்கு பாதபோதில் வைத்து உள்ளுவேனதூனநோ யொழிக்குமா - ஒன்று சொல்லிடே" என்றந்வயம். ... ... ௧0௨.

அ. நூற்றுமூன்றாம்பாட்டு. அசித்ஸம்பந்தம் தேஹாவஸாநத்திலே போக்குகிறோம், நீர் பதறுகிறதென்னென்ன; அங்ஙனேயாகில் தேவரீருடைய மேன்மைக்கும் நீர்மைக்கும் வடிவழகுக்கும் வாசகமான திருநாமங்களை நான் இடைவிடாதே மநநம்பண்ணிப் பேசுகைக்கு ஒருப்ரகார மருளிச்செய்ய வேணுமென்கிறார்.

மூ.—திருக்கலந்துசேருமார்ப தேவதேவதேவனே
இருக்கலந்தவேதநீதி யாகிநின்றநின்மலா
கருக்கலந்தகாளமேக மேனியாயநின்பெயர்
உருக்கலந்தொழிவிலா துரைக்குமாறுரைசெயே. ௧0௩.

ப-ரை.—திரு—பெரிய பிராட்டியார், கலந்து—தேவரீரோடே ஸம்ச்லேஷித்து, சேரும்—நித்யவாஸம்பண்ணுகிற, மார்ப—திருமார்பையுடையனாய், தேவதேவதேவனே—நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாய், இரு கலந்த—ரிக்(ஈஈ)ப்ரசுரமான, வேதம்—வேதத்தாலே ப்ரதிபாதிக்கையையே, நீதி ஆகிநின்ற—ஸ்வபாவமாக வுடையையாய் நின்ற, நின்மலா—ஹேயப்ரத்யநீகனாய், கரு கலந்த—பொன்போலே புகர்த்து, காளமேகம்—கறுத்த

மேகம்போலே யிருக்கிற, மேனி—திருமேனியையுடைய, ஆய—க்ர்ஷ்ணனே, நின் பெயர் உருக்கலந்து—உன் திருநாமங்களை மநநம்பண்ணி, ஒழிவு இலாது—இடைவிடாதே, உரைக்கும் ஆறு—பேசும்வழியை, உரைசெய்—அருளிச்செய்யவேணும்.

வ்யா. திருக்கலந்துசேருமார்ப. பிராட்டி தேவரீரோடே ஸம்ச்லேஷித்து, அந்த ஸம்ச்லேஷத்தில் அதிசங்கித்து "அகலகில்லேனிறையும்" என்று நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வை யுடையவனே. பத்தரோடு முக்தரோடு நித்யரோடு வாசியற, (௧) "[illegible]" என்கிறபடியே - ஸர்வர்க்கும் அபாச்ரயபூதையான பிராட்டி தான் நித்யஸாபேக்ஷையாம்படியன்றோ தேவரீருடையபெருமை. தேவதேவதேவனே. (௨) "[illegible]" என்கிறபடியே ப்ரஹ்மாதிகளுக்கு மோக்ஷருசிபிறந்தவன்று ப்ராப்யரான நித்யஸூரிகளுக்கு நித்யாநுபாவ்யனுய்க்கொண்டு நிர்வாஹகனானவனே. தேவரீரும் பிராட்டியும் சேர்ந்த சேர்த்தியிலே யெடுத்துக் கைநீட்டுகையே யாத்ரையாயிருக்கும் நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனென்கை. இருக்கலந்த வேதநீதியாகிநின்ற நின்மலா. ரிகாதிரூபமான வேதத்தாலே ப்ரதிபாதிக்கையையே ஸ்வபாவமாக வுடையையாய் நின்ற ஹேயப்ரத்யநீகனே. நீதி - ஒழுக்கம். அதாகிறது - ஸ்வபாவம். (௩) "[illegible]" (௪) "[illegible]" (௫) "[illegible]" இத்யாதிவாக்யங்களாலே ஸ்ரீய:பதித்வமென்ன, ஸூரிபோக்யதை யென்ன, ஹேயப்ரத்யநீகதையென்ன, இப்படிகளாலே வேதைகஸமதிகம்யனென்கை. கருக்கலந்த காளமேக மேனியாய. பொன்போலே புகர்த்துக் கறுத்து மேகம்போலே யிருக்கிற திருமேனியையுடைய, க்ர்ஷ்ணனே. கரு - பொன். (௬) "[illegible]" (௭) "[illegible]" என்று - விக்ரஹத்தையும் அவதாரவைலக்ஷண்யத்தையும் சொல்லிற்றிறே. (அ) "[illegible]" என்னுமாப்போலே நீரையுள்ளேயுடைய காளமேகமென்னவுமாம். கரு - கர்ப்பம். இத்தால் - தாபஹரமாய ஆகர்ஷகமுமான வடிவோடே க்ர்ஷ்ணனுய்வந்தவதரித்து ஆச்ரிதர்க்கு ஸுலபனானவனென்கை. நின் பெயருருக்கலந்தொழிவிலாது உரைக்குமாறுரைசெயே. ஸ்ரீய:பதி, * அபர்வாநுமமரர்களதிபதி, ஹேயப்ரத்யநீகன், விலக்ஷண விக்ரஹயுக்தன், ஆச்ரிதஸுலபனென்று நிர்த்தோஷமான ப்ரதிபாத்யனை உன்குணங்களுக்கு வாசகமான திருநாமங்களை வடிவழகோடே இடைவிடாதே நான் பேசுகைக்கு வழியை யருளிச்செய்யவேணும். ... ... கO௩.

அ. நூற்றுநான்காம்பாட்டு. (௯) "[illegible]" என்றும், (கO) "[illegible]" என்று மித்யாதிகர்மத்தாலே விரோதிபாபத்தைப்போக்கி, (கக) "[illegible]" என்கிறபடியே நம்மை யநுபவிக்கும் வழி சொல்லிவைத்திலோமோ, "உரைசெய்" என்கிறதென்னென்ன; நீ ப்ரதிபந்தகநிரஸநஸமர்த்தனுயிருக்க, நான் கர்மத்தாலே விரோதியைப்போக்க வென்பதொன்றுண்டோ, நீயே என் விரோதியைப்போக்கி உன்னை நான் மேல்விழுந்து இடைவிடாதே யநுபவிக்கும்படி பண்ணித் தந்தருளவேணுமென்கிறார்.

---

(௧) "ஈச்வரீம்ஸர்வபூதாநாம்" (௨) "யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவா:" (௩) "ஹ்ரீச்சதேலக்ஷ்மீச்சபத்ந்யௌ" (௪) "தத்விஷ்ணோ:பரமம்பதம் ஸதாபச்யந்தி ஸூரய:" (௫) "அபஹதபாப்மா" (௬) "நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவபாஸ்வரா" (௭) "அஜாயமாநோபஹுதாவிஜாயதே" (அ) "நவமாஸதர்தம்கர்ப்பம்" (௯) "யத்கரோஷியதச்நாஸி" (கO) "த்ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா:" (கக) "ஸததம் கீர்த்தயந்த:"

மூ —கடுங்கவந்தன்வக்கரன் கரன்முரன்சிரமவை
இடந்துகூறுசெய்தபல் படைத்தடக்கைமாயனே
கிடந்திருந்துநின்றியங்கு போதுநின்னபொற்கழல்
தொடர்ந்துவீள்வி்லாததோர் தொடர்ச்சிநல்கவேண்டுமே. ௧0௪.

ப-ரை.— கடு - மிகக்கொடியனான, கவந்தன் - கபந்தனுடையவும், வக்கரன் - தந்தவக்ரனுடையவும், கரன்—கரனுடையவும், முரன்—முரனுடையவும், சிரம் அவை—தலைகளை, இடந்து—தள்ளி, கூறு செய்த—சிநநம் பிந்நமாக்கின, பல் படை—பலவகைப்பட்ட ஆயுதங்களை, தடம்—குளிர்ந்த, கை—திருக்கைகளிலேதரித்த, மாயனே—ஆச்சர்ய சக்தியுக்தனே; கிடந்து இருந்து நின்று இயங்குபோதும்—கிடக்கும்போதும் இருக்கும்போதும் நிற்கும்போதும் ஸஞ்சரிக்கும்போதும், நின்ன - வகுத்த சேஷியானதேவரீருடைய, பொன் கழல் தொடர்ந்து - ஸ்ப்ருஹணீயமான திருவடிகளைப் பின்சென்று, வீள்வு இலாதது ஓர் தொடர்ச்சி-இடைவிடாதபடியான ஒரு ஸ்வபாவத்தை, நல்கவேண்டும்-எனக்குத் தந்தருளவேணும்.

வ்யா. கடுங்கவந்தன் வக்கரன் கரன்முரன் சிரமவை. அற வெட்டியனானகபந்தன், தந்தவக்ரன், கரன், முரன், இவர்களுடைய தலைகளை. அல்லாதாரிற்காட்டில் கபந்தனுக்கு வெட்டிமைபாவது - பிராட்டியைப்பிரிந்து கடலும் மலையும் விசும்புந் தேடுகிறதசையிலே எதிரம்புகோக்கவந்த வெட்டிமையை நினைத்து வெறுக்கிறார். இடந்துகூறுசெய்த. அவர்கள் தலைமண்டையையிடந்து சரீரங்களை, (௧) "ச்சிந்நபிந்நம் சரைர்தக்தம்" என்கிறபடியே சகலமாக்கினவனே. அஸுரராக்ஷஸர்களை யழியச்செய்தாப்போலே என்னுடைய பாபரூபமான ப்ரதிபந்தகங்களையழியச்செய்யவேணுமென்கை. பல்படைத்தடக்கைமாயனே. அவர்களை யழியச்செய்கைக்கும் பலவகைப்பட்ட ஆயுதங்களை, ஆச்ரிதரைக் குளிரத்தடவக்கடவ திருக்கையிலேதரித்த ஆச்சர்யசக்தியுக்தனே. ஒன்றே ப்ரதிகூலர்க்கு பாதகமாய் அது தானே அநுகூலர்க்கு ரக்ஷகமுமாயிருக்கை ஆச்சர்யமிறே. என்னுடைய விரோதியைப்போக்குகைக்கு திவ்யாயுதங்கள்வேண்டா, இரங்கவமையுமென்கை. (உ) "அப்யேஷ ப்ரஷ்டமஹஸ்தபத்மம் கரிஷ்யதி ஸ்ரீமதநந்தமூர்த்தி:" என்றும், "அணிமிகுதாமரைக்கையை யந்தோ அடிச்சியோந்தலைமிசை நீ யணியாய்" என்றும்- ஆச்ரிதரை உஜ்ஜீவிப்பிக்குங் கையிறே. தடம் - குளிர்த்தி. ஆனாலும் உமக்குச் செய்யவேண்டுவதென்னென்ன; கிடந்திருந்து நின்றியங்குபோதும். (௩) "ஆஸீநோ வா சயாநோ வா திஷ்டந்தோ யத்ர குத்ர வா" என்கிறபடியே - கிடந்தும் இருந்தும் நின்றும் ஸஞ்சரித்தும் இப்படிகளாலே தேஹயாத்ரை நடக்கும்போதும். நின்னபொற்கழல். வகுத்த சேஷியான தேவரீருடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை. தேஹயாத்ராசேஷமான காலமும்விடவொண்ணாத திருவடிகளென்கை. தொடர்ந்து வீள்விலாததோர் தொடர்ச்சி நல்கவேண்டுமே. மேல்விழுந்து இடைவிடாதபடியான ஸ்வபாவத்தையெனக்குப்பண்ணித்தந்தருளவேணும். தொடர்ச்சி - செறிவு. இத்தால் - அநுபவ விரோதிகளை தேவரீரேபோக்கவும், ஸர்வகாலமும் ஸ்ப்ருஹணீயமான தேவரீர் திருவடிகளை இடைவிடாதேயநுபவிப்பேனாகவும் பண்ணித்தந்தருளவேணுமென்ற தாய்த்து.

---

(௧) "சிந்நம்பிந்நம்சரைர்தக்தம்" (உ) "அப்யேஷப்ரஷ்டேமமஹஸ்தபத்மம் கரிஷ்யதிஸ்ரீம தநந்தமூர்த்தி:" (௩) "ஆஸீநாவசயாநாவாதிஷ்டந்தோ யத்ரகுத்ரவா"

அ. ஞாற்றைந்தாம்பாட்டு. நான்சொன்ன உபாயங்களி விழியாதொழிகைக்கும் நான்செய்தபடி காண்கையொழிய போகத்திலே த்வரிக்கைக்கும் ஹேதுவென்னென்ன; பிராட்டி புருஷகாரமாக குணாதிகரான தேவரீர் விஷயீகாரத்தையே தஞ்சமென்றிருக்குமவ ளுகைபாலே உபாயாந்தராபேக்ஷையில்லை, தேவரீர் வடிவழகிலந்வயமே போகத்தில் த்வரிக் கைக்கடி யென்கிறார்.

மூ.—மண்ணையுண்டுமிழ்ந்துபின் னிரந்துகொண்டளந்தமண்
கண்ணுளல்லதில்லையென்று வென்றகாலமாயினாய்
பண்ணைவென்றவின்சொல்மங்கை கொங்கைதங்குபங்கயக்
கண்ண! நின்னவண்ணமல்ல தில்லையெண்ணும்வண்ணமே. ௪0௫.

ப—ரை.— மண்ணை உண்டு—ப்ரளயாபத்திலே லோகங்களை படையத் திருவயிற்றிலே வைத்து, உமிழ்ந்து—ஸ்ர்ஷ்டிகாலத்திலே வெளிநாடு காணப்புறப்படவிட்டு, பின்—ஸ்ர்ஷ் டமானபின்பு, ( அஜ்ஜகத்தை மஹாபலி அபஹரிக்க, ) இரந்து—அவன் பக்கலிலே அர்த் தியாய்ச் சென்றிரந்து, கொண்டு—நீரேற்றுப் பெற்றுக்கொண்டு, அளந்த—திருவடிகளாலே அளந்தருளின, மண்—பூமியானது, கண்ணுள் அல்லது இல்லை என்று—நம்கடாக்ஷத்திலே நிலைநிற்குமதொழிய வேறு ஸ்திதியில்லையென்று, வென்ற—ஸகலபதார்த்தங்களும் தன்கை யிலே அகப்படும்படி ஸகலபரிணாமத்துக்கும் நிர்வாஹகமான, காலம் ஆயினாய்—காலத்து க்கு நிர்வாஹகனாய், பண்ணை—இசைகளை, வென்ற—வெற்றிகொண்ட, இன் சொல்—இனிய பேச் சையுடையளாய், மங்கை—மங்கைப்பருவத்தை யுடையளான பெரியபிராட்டியாருடைய, கொ ங்கை—திருமுலைததடத்திலே, தங்கு—பொருந்திவர்த்திக்கிற, பங்கயம் கண்ணா—புண்டரீ காக்ஷனே, எண்ணும் வண்ணம—தேவரீரை யிடைவிடாதே அநுபவிக்க வேணுமென்கிற மநோரதப்ரகாரத்துக்குஹேது, நின்ன வண்ணம் அல்லது இல்லை—உன்வடிவழகல்லது வே றொன்றில்லை.

வ்யா. மண்ணையுண்டுமிழ்ந்து. ப்ரளயாபத்திலே அபேக்ஷியாதிருக்க ஆபத்தே முத லாக, வரையாதே இஜ்ஜகத்தைத் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்து, உள்ளிருந்து நோவுப டாதபடி ஸ்ர்ஷ்டிகாலத்திலே உமிழ்ந்து. இத்தால்- தன்பக்கல் விமுகராநாரளவிலும் வத்ஸ லனென்கை. பின் இரந்துகோண்டளந்து. ஸ்ர்ஷ்டமானபின்பு அஜ்ஜகத்தை மஹாபலி அபஹரி க்க, அவன்பக்கலிலே அர்த்தியாய்ச் சென்று இரந்து, இந்த்ரனுக்கு த்ரைலோக்யஸாம்ராஜ்ய த்தைக்கொடுத்து, அவ்வளவுக்கு மேலே சதுர்த்தசபுவநத்தி லுண்டான ஸகல சேதநர்தலை யிலும உன்திருவடிகளைவைத்து. இத்தால் - விமுகராநாரளவிலும் சீலவானுமாய் ஸுலபனு மாயிருக்குமவனென்கை. தன்னை அழியமாறித் தாழநிற்கையிறே - சீலம். எல்லார்தலையி லும் திருவடிகளை வைக்கையிறே - ஸௌலப்யம். மண்கண்ணுளல்லதில்லையென்று. விமுக ரான ஸம்ஸாரிகளைக்குறித்து இப்படி செய்தருளுகைக் கடியென்னென்னில்; இஜ்ஜகத்துக்கு நம் கடாக்ஷமொழிய வேறு ஸ்திதியில்லையென்று. வென்றகாலமாயினாய். ஸகலபதார்த்தங் களும் தன்கையிலே அகப்படும்படி ஸகலபரிணாமத்துக்கும் நிர்வாஹகமான காலத்துக்கும் நிர்வாஹகனானவனே. இத்தால் - ஸ்ர்ஷ்ட்யாதிகளுக்கு கர்மீபவித்தும் அந்யசேஷத்வத்தால் முறையழிந்தும், இப்படி காலவச்யரான சேதநர்க்கு தேவரீரல்லது காலத்தை ஜயிக்க விரகி ல்லையென்கை. (க) "காலம்ஸபசதே யத்ர ந காலஸ்தத்ர வை ப்ரபு:" என்னக்கட

(க) "காலம்ஸபசதேயத்ர நகாலஸ்தத்ரவைப்ரபு:"

வதிறே. "மண்கண்ணுளல்லதில்லை யென்றுவென்று" என்று கீழே அந்வயிக்கவுமாம். அப்பக்ஷத்தில், மஹாபலி, ப்ரளயம் முதலான விரோதிகளை உன்பேருக வென்றவென்கை. பண்ணைவென்றவின் சொல்மங்கைகொங்கை தங்குபங்கயக்கண்ண. (க) "[illegible] ஞாவா" என்கிறபேச்சையும் பருவத்தையுமுடைய பிராட்டியுடைய திருமுலைத்தடத்தையே அபாச்ரயமாகவுடைய புண்டரீகாக்ஷனே. இத்தால் - பருவத்தாலும் பேச்சாலும் அவயவ சோபையாலும் விலக்ஷணையான பிராட்டிக்கு வல்லபனுகையாலே பூர்வவர்த்தத்தை விஸ்மரித்து, என்பக்கலிலே கீழ்ச்சொன்ன ஆபத்ஸகத்வாதி குணப்ரேரிதமான விசேஷகடாக்ஷத்தைப் பண்ணினவ னென்கை. நின்னவண்ண மல்லதில்லையெண்ணும் வண்ணமே. தேவரீரை இடைவிடாதே யநுபவிக்க வேணுமென்கிற மநோரதப்ரகாரத்துக்கு ஹேது உன் வடிவழகல்லது வேறொன்றில்லை. உன்னுடைய விசேஷகடாக்ஷத்துக்கடியான வாத்ஸல்யாதி குணங்களொழிய உன்வடிவழகே யெனக்கு இம்மநோரதத்துக்கும் ஹேதுவென்கை.

அ. நூற்றுரும்பாட்டு. "நின்னவண்ணமல்லதில்லை" என்று—தாம்வடிவழகிலே துவக்குண்டபடி சொன்னுர் - கீழ்; இதில்—தேவரீருடைய ஆபத்ஸகத்வத்துக்கல்லது நான் நெகிழிலும் என்னெஞ்சு வேறொன்றில் ஸ்நேஹியாதென்கிறுர்.

மூ.—கறுத்தெதிர்ந்தகாலநேமி காலனேடுகூடவன்
றறுத்தவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்தினுய்
தொறுக்கலந்தவூனமஃது தொழிக்கவன்றுகுன்றமுன்
பொறுத்தநின்புகழ்க்கலாலோர் நேசமில்லைநெஞ்சமே. ௧0௬.

ப-ரை.— கறுத்து – க்ருத்தனுய்; எதிர்ந்த – எதிரிட்ட, காலநேமி – காலநேமியா கிற அஸுரன், காலனேடு கூட—ம்ர்த்யுவோடேகூடும்படி, அன்று—அவனுலே ப்ரஹ்மாதிகளுக்கு ஆபத்துவந்தவன்று, அறுத்த—அவன் தலையை யறுத்த, ஆழி சங்கு தண்டு வில்லும் வாளும் ஏந்தினுய்—திருவாழிதொடக்கமான திவ்யாயுதங்களை தரித்தவனே, தொறு கலந்த—பசுக்களுக்குண்டான—ஊனம் அஃது ஒழிக்க—அநுபவவிநாச்யமான ஆபத்தைப் போக்குகைக்காக, அன்று—பசுக்களும் இடையரும் வருந்துகிறகாலத்திலே, முன்—அவைகளுக்கு நாசம்வருவதற்கு முன்னமே, குன்றம் பொறுத்த—கோவர்த்தநத்தையெடுத்து ரக்ஷித்த, நின் புகழ்க்கு அலால்—உன் கல்யாணகுணத்துக்கல்லது, நெஞ்சம்—என் மநஸ்ஸுக்கு, ஓர் நேசம் இல்லை—ப்ராவண்யலேசமுமுண்டாகாது.

வ்யா. கறுத்தெதிர்ந்தகாலநேமிகாலனேடுகூட. க்ருத்தனுய் எதிரிட்ட காலநேமியாகிறவஸுரன் ம்ர்த்யுவோடே கூடும்படி. இந்த்ராதிகளுடைய ஐசவர்யத்தையும் அவர்கள்பக்கல் ஈசவராநுக்ரஹத்தையும்பொருதே க்ருத்தனுனுய்த்து. (உ) "[illegible]" என்கிறவிஷயத்திலே கிடீர்! க்ருத்தனுய்த்து. (௩) "[illegible]" (௪) "[illegible]" என்கிறபடியே நிருபாதிகபந்துவின் பக்கலிலேயிறே கோபித்தது. ஓரஞ்ஜலியாலே ஒரு நீராகக்கலக்கலாம் விஷயத்திலே துஷ்ப்ரக்ர்தியாகையாலே எதிரம்புகோத்து நசித்தானென்கை. அநுகூலித்தாரை யுன்னேடே கூட்டுகையும்

(க) "மதுராமதுராலாபா" (உ) "ஸுஹ்ர்தம் ஸர்வபூதாநாம்" (௩) "ஸநோ பந்துः" (௪) "அஹம்வோபாந்தவோஜாதः"

ப்ரதிகூலித்தாரை யமனோடே கூட்டுகையுமிறே தேவரீர்க்கு ஸ்வபாவம். அன்று. காலநேமியாலே இந்த்ராதிகளுக்கு ஆபத்துவந்தவன்று. அறுத்தவாழி சங்குதண்டுவில்லும் வாளுமேந்திநாய். ஸபரிகரனான காலநேமியைத் தலையையறுத்த திருவாழி தொடக்கமான ஸ்ரீ பஞ்சாயுதங்களை தரித்தவனே. திருவாழியாலே அவன் தலை யறுப்புண்டபின்னும் தேவர்களுக்கு எவராலே என்னவிரோதம் வருகிறதோ! என்று, "கைகழலாநேமியான்" என்கிறபடியே திவ்யாயுததரனாயிருக்கிறபடி. தோறுக்கலந்தவூனமஃதொழிக்க. இந்த்ராதிகளுக்கு அஸுரனால் வந்த ஆபத்தைப்போக்கினபடி சொல்லிற்று - கீழ், இந்த்ரனால் பசுக்களுக்கும் இடையர்க்கும்வந்த ஆபத்தைப்போக்கினபடி சொல்லுகிறதுமேல். பசுக்களுக்கு அநுபவ விநாசயமான ஆபத்தைப்போக்குகைக்காக. அஸுரர்களால் வந்த ஆபத்துக்கு ரக்ஷகனான இந்த்ரனால் வந்த ஆபத்தாகையாலே அநுபவித்தே அறுமாய்த்து. அன்று. (க) "கௌகௌபீ ஜநவாகுலம் தீவார்த்தம்" என்கிறதசையிலே. தோறு—பசு. குன்றமுன்பொறுத்தநின்புகழ்க்கலால். கோவர்த்தநத்தை தரித்து ரக்ஷித்த உன்கல்யாணகுணத்துக்கல்லது. இந்த்ரன் ப்ராதிகூல்யத்தில் வ்யவஸ்திதனல்லாமையாலே, அழியச்செய்யும்திவ்யாயுதங்களுண்டாயிருக்கத் தன்னுடைய ரக்ஷ்யவர்க்கத்தை மலையெடுத்து நோக்கினனென்கை. "முன்" என்கிறது - ஒருத்தருக்கு நோவுவருவதற்கு முன்பென்கை. "வரைமுனேந்தும்" என்று - அவன் அநாயாஸேந தரிக்கச்செய்தேயும், அவன் ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்து "பொறுத்த" என்கிறார் இவர். ஓர்நேசமில்லை நெஞ்சமே. வ்யக்த்யந்தரத்திலாதல், குணாந்தரத்திலாதல் எனக்கு ப்ராவண்யம் ஸம்பவிக்கிலும் என்மநஸ்ஸுக்கு ப்ராவண்யலேசமில்லை. ஆக, ப்ரயோஜநாந்தரபரரான இந்த்ராதிகளுடைய ஆபத்தை ஆயுதத்தாலே யழித்தும், ஸ்வாபிமாநத்துக்குள்ளே கிடக்கிற பசுக்களுக்கு மிடையருக்கும் வந்த ஆபத்தை மலையையெடுத்து ரக்ஷித்தும், இப்படியால் வந்த உன் ஆபத்ஸகத்வத்துக்கல்லது என்னெஞ்சுக்கு வேறொரு ஸ்நேஹமில்லையென்றதாய்த்து. ... ... ... ... ... ... கo௬.

அ. நூற்றேழாம்பாட்டு. கீழிரண்டுபாட்டாலே - தமக்கும் தம்முடைய திருவுள்ளத்துக்கு முண்டான பகவத்ப்ரேமத்துக்கடியான வடிவழகையும் ஆபத்ஸகத்வத்தையும் பேசினார்; இதில் - அந்த ஸங்கவிரோதியான ப்ரபல ப்ரதிபந்தகங்களை ப்ரபலமான அஸுரர்களை அழியச்செய்தாப்போலே போக்கின உன் திருவடிகளுக்கல்லது வேறொருவிஷயத்தில் நான் ஸங்கம் பண்ணேனென்கிறார்.

மூ.—காய்சினத்தகாசிமன்னன் வக்கரன்பவுண்டிரன்
மாசினத்தமாலிமான் சுமாலிகேசிதேனுகன்
நாசமுற்றுவீழநாள் கவர்ந்தநின்கழற்கலால்
நேசபாசமெத்திறத்தும் வைத்திடேனெம்மீசனே. கo௭.

ப—ரை.— எம் ஈசனே - எனக்கு நிர்வாஹகனானவனே ; காய் - ஸாத்விகரைக்கொன்றல்லது நில்லாத, சினத்த—கோபத்தையுடைய, காசி மன்னன்—காசி ராஜனும், வக்கரன்—தந்தவக்த்ரனும், பவுண்டிரன்—பௌண்ட்ரகவாஸுதேவனும், மா சினத்த மாலி—மிக்ககோபத்தை யுடையனான மாலியும், மான் சுமாலி—மஹானான ஸுமாலியும், கேசி—ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களுக்கு பாதகனான கேசியும், தேனுகன்—பசுக்களுக்கும் இடையர்க்கும்

(க) "கோகோபீஜநஸங்குலம் தீவார்த்தம்".

பயங்கரனுன தேநுகாஸுரனும், நாசம் உற்று—துக்கத்தை யநுபவித்து, வீழ—ம்ர்தராய் விழும்படி, நாள் கவர்ந்த—ஆயுஸ்ஸைவாங்கின,நின் கழற்கு அலால்—உன் திருவடிகளிலல்லது, நேசபாசம்-பக்தியாகிற கயிற்றை, எத்திறத்தும்-எந்ததசையிலும், வைத்திடேன்—வையேனென்கிருர்.

வ்யா. காய்சினத்தகாசிமன்னன். காயும் சினத்தையுடைய காசிராஜன். ஸாத்விகரைக்கொன்றல்லது விடாத கோபத்தையுடையவனென்கை. காய்தல் - கொல்லல். அப்படியிருக்கும் தந்தவக்ரன். பவுண்டிரன். "ஈச்வரோஹம்" என்றிருக்கும் பௌண்ட்ரக வாஸுதேவன். மாசினத்தமாலி. பெரியசினத்தையுடைய மாலி. மான்சுமாலி. மஹானுன ஸுமாலி. சினத்தையுடையனுமாய் பத்ராகாரனுமா யிருக்குமவனென் கை. கேசி. ஸ்வர்க்கவாஸிகளான தேவதைகளுக்கும் பாதகனுன கேசி. தேனுகன்.க்ர்ஷ்ணனை அநுவர்த்திக்கிற இடையர்க்கும் பசுக்களுக்கும் பயங்கரனுன தேநுகன். இவ்வாஸுரவர்க்கத்தினுடைய க்ரௌர்யத்தைப்பேசிற்று - தம்முடைய ப்ரதிபந்தகங்களினுடைய க்ரௌர்யம் தோற்றுகைக்காக. நாசமுற்றுவீழ நாள்கவர்ந்த. து:கத்தை யநுபவித்து ம்ர்தராய்விழும்படி ஆயுஸ்ஸைவாங்கின. நாசம் — து:கம். "வீழ்தல்" என்று – விடுதலாய், ப்ராணனை விடும்படி யென்றுமாம். இத்தால் - ஆச்ரித விரோதிகளை ஸ்வசத்ருக்களைப்போலே கண்ணற்று க்ரூரமாக வதித்தபடி. நின்கழற்கலால் நேசபாசமெத்திறத்தும் வைத்திடேன். விரோதிநிரஸந சீலனுன உன் திருவடிகளிலல்லது, பக்தியாகிறகயிற்றை எவ்விஷயத்திலும் வையேன். பந்தகமாகையாலே பக்தியை'கயிறு' என்கிறது. "எட்டினோடிரண்டெனுங் கயிற்றினல்" என்னக்கடவதிறே. எம்ஈசனே. என்னுதனே. விஷயாந்தர ப்ராவண்ய ஹேதுவான பாபங்களையும் தேவரீர்பக்கல் ப்ரேமத்துக்கு விரோதியான பாபங்களையும்போக்கி இவ்வளவும் புகுர நிறுத்துகைக்கடி இத்தையுடையவனுகையென்கை. ... ... ... ... கoஎ.

அ. நூற்றெட்டாம்பாட்டு. "நின்புகழ்க்கலால் ஓர்நேசமில்லை நெஞ்சம்" என்றும், "நின்கழற்கலால் நேசபாசமெத்திறத்தும் வைத்திடேன்" என்றும் சொல்லக்கடவதிறே, இதுக்கு விஷயமாக நம்மைக்கிட்டி அநுபவிக்கப் பார்த்தாலோ வென்ன; போகமோக்ஷ ஸுகங்களை அநுபவிக்கப் பெற்றாலும உன்னை ப்ராபிக்கவேணுமென்னு மாசையொழிய மற்றொன்றை விரும்பேனென்கிருர்.

மூ.—கேடில்சீர்வரத்தனுய்க் கெடும்வரத்தயனரன்
நாடினேடுநாட்டமா யிரத்தனுடுநண்ணினும்
வீடதானபோகமெய்தி வீற்றிருந்தபோதிலும்
கூடுமாசையல்லதொன்று கொள்வனேகுறிப்பிலே. கoஅ.

ப-ரை.—கேடு இல்—அழிவிலலாத, சீர்—ஸம்பத்தையுடையனும்படி, வரத்தன் ஆய்—பகவத் ப்ரஸாதத்தையுடைய ஞபிருக்கிற, அயன் நாடினேடு—ப்ரஹ்மாவினுடைய ஸத்ய லோக ஸம்பத்தையும், கெடும்-எல்லாம் தன்னுலே அழியும்படி, வரத்து-பகவத்ப்ரஸாதம் பெற்ற, அரன் நாடினேடு—ருத்ரனுடைய கைலாஸஸம்பத்தையும், நாட்டம் ஆயிரத்தன் நாடு —ஆயிரங்கண்களையுடையனுன இந்த்ரனுடைய ஸ்வர்க்கலோக ஸம்பத்தையும், நண்ணினும்—பெற்றாலும், வீடு அது ஆன—பரமபுருஷார்த்த லக்ஷணமாகிற, போகம் எய்தி—

போகத்தை ப்ராபித்து, வீறு இருந்தபோதிலும்—நிரதிசயாநந்த நிர்ப்பரராயிருந்தபோதி லும், கூடும் ஆசை அல்லது—உன்னைக்கூட வேணுமென்னு மாசையல்லது, ஒன்று—வேறொன்றை, குறிப்பில் கொள்வனே—நெஞ்சால் நினைப்பனோ வென்கிறுர்.

வ்யா. கேடில் சீர்வரத்தனுய்க் கெடும்வரத்தயனரன். கேடில் சீர்வரத்தனுய - அயன், கெடும்வரத்தனுய - அரன். அழிவில்லாத ஸம்பத்தையுடையனும்படி பகவத் ப்ரஸாதத்தை யுடையனு யிருக்கிற ப்ரஹ்மா, ஸர்வத்துக்கும் தன்னாலே உபஸம்ஹாரமாம்படி பகவத்ப்ரஸா தம்பெற்ற ருத்ரன். அதவா, அழிவில்லாதஸம்பத்தையுடையனுய் வரபரதாநக்ஷமனை ப்ரஹ் மாவும், ஸர்வஸம்ஹாரத்தை யுடையனுய் வரப்ரதாநக்ஷமனுன ருத்ரனும் என்றுமாம். நாடி னேடு நாட்டமாயிரத்தன் நாடுநண்ணினும். இவர்களுடைய நாட்டோடேகூட ஸஹஸ்ராக்ஷ னுடைய நாட்டையும் பெற்றாலும். நாட்டம் - கண். "நாடு" என்று நாட்டிலுள்ள விஷ யங்களை நினைக்கிறது. அதாகிறது—ப்ரஹ்மருத்ராதிகளுடைய மூவகைப்பட்ட ஐச்வர்யத்தை நாமொருத்தனும் பெற்றாலும். இவ்வைச்வர்யம் மூன்றுக்கும் ஏகாச்ரயத்திலே ஸம்பாவனை யில்லையிறே; கூடாதது கூடினாலும். வீடதானபோகமெய்தி. அதுக்குமேலே 'பரமபுருஷா ர்த்த லக்ஷணமாகிற போகத்தை ப்ராபித்து. மோக்ஷமாகிறது - ஸம்ஸாரநிவர்த்தி மாத்ரமா தல், ஒருதேசவிசேஷ ப்ராப்தியாதலன்று, கைங்கர்யபோகமென்கை. வீற்றிருந்தபோதிலும். கைங்கர்யோப கரணங்கள் குறைவற்றிருந்தபோதிலு மென்னுதல்; நிரதிசயாநந்த நிர்ப்பரனு யிருந்தபோதிலு மென்னுதல். கைங்கர்யோபகரண ஸம்பத்தி ஸங்கல்பமாத்ரத்தாலே உண் டாமதிறே. போகமோக்ஷங்கள் ஏகாச்ரயத்திலே ஸம்பவிக்கிலும். கூடுமாசையல்லது ஒன்று கொள்வனே குறிப்பிலே. உன்னைக் கூடவேணுமென்னு மாசையல்லது வேறொன்றை நெஞ் சால் விரும்புவனே. (க) "[illegible]" (உ) "[illegible]" என்றிறே பகவத் ஜ்ஞானபக்திகள் ரஸித்தவர்களுடைய வார்த்தை. ... ... ... கOஅ.

அ. நூற்றொன்பதாம்பாட்டு. கீழ் - நம்பக்கல் உமக்குண்டாகச் சொன்ன ஆசை ஸ்வயத்நத்தாலே அநவரதபாவனைபண்ணியும் * ஸததம் கீர்த்தநம்பண்ணியும் பெறுவாரு டைய ஆசைபோலே யிருந்ததீ!, "நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே" என் றும், "திருக்கலந்துசேருமார்ப தேவதேவதேவனே" என்றும் தொடங்கி, "நின்பெய ருருக் கலநதொழிவிலா துரைக்குமா றுரைசெய்" என்றும், "கூடுமாசையல்லதொன்று கொள்வனே" என்றும் பேசினீரேயென்ன; உன்னுடைய ஆச்சர்ய குணசேஷ்டிதங்கள் என்னைபரேரிக்க காலக்ஷேபார்த்தமாகப் பேசிநின்றவித்தனை, அதுதானும் வேதங்களும் வைதிகபுருஷர்களும பேசிப் போரக்காண்கையாலே பேசினேனித்தனை யென்கிறுர்.

மூ.—சுருக்குவாரையின்றியே சுருங்கினய்சுருங்கியும்
பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்துபெற்றியோய்
செருக்குவார்கள்தீக்குணங்கள் தீர்த்ததேவதேவனென்
றிருக்குவாய்முனிக்கணங்க ளேத்தயானுமேத்தினேன். கOகூ.

(க) "தர்மார்த்தகாமைஃகிந்தஸ்ய முக்திஸ்தஸ்யகரேஸ்திதா । ஸமஸ்தஜகதாம்மூலே யஸ்யபக்திஸ்ஸ்திராத்வயி" (உ) "விஜ்ஞாநம் யதிதம்ப்ராப்தம்"

ப-ரை.— ( ஒருகர்மத்தாலே ஒருகாலத்திலே, ) சுருக்குவாரை இன்றியே—ஒரு கர்த்தாவாலும் சுருக்குதலின்றிக்கே, சுருங்கினை—வாமநாவதாரம் செய்தருளி, சுருங்கியும்—சுருங்கியிருக்கச் செய்தேயும், பெருக்குவாரை இன்றியே—ஒருவரால் பெருக்குதலின்றிக்கே, பெருக்கம் எய்து—பெருக்கத்தை யெய்தும்படியான, பெற்றியோய்—ஸ்வபாவத்தை யுடையவனே, செருக்குவார்கள்—செருக்கிவர்த்திக்கிற மஹாபலிபோல்வாருடைய, தீ குணங்கள்—அஹங்காரமமகாரமாகிற ஸ்வபாவத்தை, தீர்த்த—தன் அர்த்தித்வத்தால் தவிர்த்த, தேவதேவன் என்று—இந்த்ராதி தேவர்களுக்குக் குடியிருப்பைக்கொடுத்த ஸர்வேச்வரனேயென்று, (த்ரைவிக்ரமாபதாநத்தைப்பற்றி,) இருக்கு வாய்—வேதஸ்தலங்களும், முனிக்கணங்கள்—வைதிகரான சௌநகாதிமுநி ஸமூஹங்களும், ஏத்த—ஏத்தக்கண்டபடியாலே, யானும்-தாஸபூதனான நானும், ஏத்தினேன்-ஸ்தோத்ரம்பண்ணினே னென்கிறார்.

வ்யா. சுருக்குவாரை யின்றியே சுருங்கினாய். ஒருகர்மத்தாலே ஒருகாலத்திலே ஒரு கர்த்தாவாலுண்டாம் ஹ்ராஸமின்றிக்கே ஆச்ரிதாநுக்ரஹம் ப்ரேரிக்க இச்சையாலே வாமநனாய். சேதநர் கர்மபேதத்தாலும் கர்த்ர்பேதத்தாலும் க்ரிமிகீடங்களாகா நின்றார்களிறே. கலிகாலமும் சேதநரை அங்குஷ்டமாத்ரமாக்கா நின்றதிறே. லங்காப்ரவேச ஸமயத்தில் அந்யபாரதந்த்ர்யத்தாலே திருவடி ஹ்ரஸ்வ பூதனானானிறே. சுருங்கியும். அப்படியே சிறுகியிருக்கச் செய்தேயும். பெருக்குவாரை யின்றியே பெருக்கமெய்து பெற்றியோய். பூர்வோக்தமான வர்த்தி ஹேதுக்களின்றிக்கேயிருக்கப் பெருக்கமெய்தும் ஸ்வபாவனே. பெற்றி—இயல்வு. இத்தால் — அர்த்தித்வத்துக்கு ஏகாந்தமான வாமநவேஷத்தைக்கொண்டு, கையிலே நீர்விழுந்த ஸமநந்தரத்திலே செய்ததுவாய்த்து ; ப்ரீதிப்ரகர்ஷத்தாலே வளர்ந்து சதுர்த்தச புவநங்களிலுண்டான ஸகலசேதநர் தலையிலும் வரையாதே திருவடிகளைவைக்கையாலே ஆச்ரிதார்த்தமாக வர்த்திஹ்ராஸாதிகள் இவனுக்கு ஸ்வாபாவிகமென்கை. செருக்குவார்கள். இந்த்ராதிகளைநலிந்து த்ரைலோக்யத்தை அபஹரித்து, (க) "நயஷ்டவ்யம்நதாதவ்யம்" என்று ஈச்வராஜ்ஞையை அதிலங்கித்து, இப்படிச்செய்தோமென்னும் அநுதாபமு மின்றிக்கே செருக்கிவர்த்திக்கிற மஹாபலிபோல் வாருடைய. தீக்குணங்கள் தேவதேவன். அஹங்கார மமகாரமாகிற நாசகரமான ஸ்வபாவத்தைத் தன்னுடைய அர்த்தித்வத்தால் தவிர்த்து, இந்த்ராதிகளுக்குக் குடியிருப்பைக் கொடுத்த ஸர்வேச்வரனே. என்றிருக்குவாய் முனிக்கணங்களேத்த. இப்பாசுரத்தாலே - த்ரைவிக்ரமாபதாநத்தைப்பற்றி வேதஸ்தலங்களும் வைதிகரான முநிஸமூஹங்களும், (உ) "விசக்ரமேப்ருதிவீமேஷஏதாம்" (ங) "த்ரிர்தேவப்ருதிவீமேஷஏதாம்" இத்யாதி வேதங்களும், (ச) "ஸங்கைஸ்ஸுராணாம் திவிபூதலஸ்தை: ததாமநுஷ்யைர்க்ககநேசகேசரை: ஸ்துத:" இத்யாதிகளாலே சௌநகாதிகளும் ஏத்தக்கண்டவாறே. யானுமேத்தினேன். தேவரீருடைய ஸௌலப்யத்தையும் விரோதிநிரஸந சீலத்தையும் பேசி, காலக்ஷேபம்பண்ணி யல்லது நிற்கமாட்டாமையாலே யானுமேத்தினே னித்தனை. இதுவொழிய ஒருஸாதநபுத்த்யா ஏத்தினேனல்லே னென்கை. ... ... ... ... ... ... கoக.

---

(க) "நயஷ்டவ்யம்நதாதவ்யம்" (உ) "விசக்ரமேப்ருதிவீமேஷஏதாம்" (ங) "த்ரிர்தேவப்ருதிவீமேஷஏதாம்" (ச) "ஸங்கைஸ்ஸுராணாம்திவிபூதலஸ்தை: ததாமநுஷ்யைர்க்ககநேசகேசரை: । ஸ்துத:"

அ. நூற்றுப்பத்தாம்பாட்டு. (க) "தத்விப்ராஸோவிபந்யவ:" என்கிறபடியே அஸ்ப்ர்ஷ்ட ஸம்ஸாரகந்தரும் தேவர்களும் ரிஷிகணங்களும் ஏத்திப் போந்தவிஷயத்தை நித்யஸம்ஸாரியாய்ப்போந்த நான் ஏத்தக்கடவேனல்லேன், தன் செல்லாமையாலே புகழ்ந்தானென்று திருவுள்ளம் பற்றிப்பொறுத்தருளவேணுமென்று, கீழ் "ஏத்தினேன்" என்றதுக்கு க்ஷாபணம்பண்ணுகிறார்.

மூ.—தூயனுயுமன்றியுஞ் சுரும்புலாவுதண்டுழாய்
மாயநின்னைநாயினேன் வணங்கிவாழ்த்துமீதெலாம்
நீயுநின்குறிப்பினிற் பொறுத்துநல்குவேலைநீர்ப்
பாயலோடுபத்தர்சித்தம் மேயவேலைவண்ணனே.          கசo.

ப-ரை.— சுரும்பு—வண்டுகள், உலாவு—ஸஞ்சரியாநின்றுள்ள, தண்—குளிர்ந்த, துழாய்—திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனாய், மாய—ஆச்சர்யசக்தியுக்தனாய், வேலை நீர் பாயலோடு—திருப்பாற்கடலில் படுக்கையோடும், வேலைவண்ணனே—கடல்போலே குளிர்ந்த வடிவோடும், பத்தர் சித்தம்-ஆச்ரிதருடைய ஹ்ருதயத்திலுண்டான ஸகலதாபங்களும் போம்படி, மேய—நித்யவாஸம்பண்ணும், வண்ணனே—ஸ்வபாவமுடையனான, நின்னை-தேவரீரை; தூயனாயும்-பரிசுத்தனாயும், அன்றியும்- அபரிசுத்தனாயும், நாயினேன் - நிஹீநனுமான நான்; வணங்கி—திருவடிகளிலே தலையாரவணங்கி, வாழ்த்தும் ஈது எலாம்—வாயாரவாழ்த்துகிற விதுவெல்லாம், நீயும்—பொறுமையை ஸ்வபாவமாகவுடைய நீயும், நின்குறிப்பினில் பொறுத்து—உன் திருவுள்ளத்திலே பொறுத்து, நல்கு—க்ருபைசெய்தருளவேணும்.

வ்யா. தூயனுயுமன்றியும் (உ) "க்ஷேத்ரஜ்ஞஸ்யேச்வரஜ்ஞாநாத் விசுத்திபரமாமதா" என்கிறபடியே தேவரீருடைய பாவநத்வத்தை அநுஸந்தித்து நான் யோக்யனென்று பரிமாறியும், ஆகர்ஷகமான தேவரீருடைய வடிவைக்கண்டு மேல்விழுந்து நான் நித்யஸம்ஸாரியென்று புத்திபண்ணாதே பரிமாறியும். அதவா, (ங) "நஹிஜ்ஞாநேநஸத்ருசம் பவித்ரமிஹவித்யதே" என்கிறபடியே ஸ்வரூபஜ்ஞாநத்தாலே சுத்தனென்று பரிமாறியும், அந்தஸ்வரூபத்துக்கு அஹங்கார மமகாரங்களால்பிறந்த அசுத்தியையும் புத்திபண்ணாதே பரிமாறியும் போந்தேனென்றுமாம். சுரும்புலாவுதாண்டுழாய்மாய. தம்தண்மையையும் அத்தலையில் வைலக்ஷண்யத்தையும் பாராதே யோக்யனென்று ப்ரமிக்கைக்கு ஹேதுசொல்லுகிறது. வண்டுகள் அபிநிவேசிக்கும் திருத்துழாயாலே அலங்க்ருதமாய் ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களையுடையவனே!; திர்யக்குக்களுக்கும் ஸ்ப்ருஹை பண்ணவேண்டும்படியிறே போக்யதையிருப்பது. ஒப்பனையழகும் குணசேஷ்டிதங்களுமாய்த்து இவரை மேல்விழப்பண்ணிற்று. நின்னை. ஸர்வாதிகனாய் பரமபாவநனாய் ஸர்வோரிபோக்யனா யிருக்கிறவுன்னை. நாயினேன். உன்னுடைய உத்கர்ஷத்துக்கு அவதியில்லாதாப்போலே என்னுடைய நிகர்ஷத்துக்கு அவதியில்லையென்கிறார். நாயினேன். திறந்த வாசலெல்லாம்நுழைந்து நுழைந்த வாசலெல்லாவற்றிலும் பரிபூ(ஹ-)தனாய், தேவரீர் உகந்து தொடிலும் அங்குத்தைக்கு அவத்யம் விளையும்படி ஸ்வரூபத்தையுடைய நான். வணங்கிவாழ்த்து மீதெலாம். ஒன்றைசெய்து அதுக்கு க்ஷாமணம் பண்ணுகிறேனே, திருவடிகளிலே தலையாரவணங்கி வாயாரவாழ்த்திப்போருகிற இதெல்லாம்.

(க) "தத்விப்ராஸோவிபந்யவ:" (உ) "க்ஷேத்ரஜ்ஞஸ்யேச்வரஜ்ஞாநாத் விசுத்திர்பரமாமதா" (ங) "நஹிஜ்ஞாநேநஸத்ருசம்பவித்ர மிஹவித்யதே"

நீயும் நானும் பரிமத்தாலே தவிர மாட்டுகிறிலன, க்ஷாந்தியை ஸ்வபாவமாகவுடைய நீயும் பொறுக்கவேணும் நினைக்குறிப்பினில் பொறுத்து நல்குகாக சிசுபாலாதிகளுடைய அபராதத்தைத் திருவுள்ளத்தாலே பொறுத்தாப்போலே என்னபராதத்தையும் திருவுள்ளத்தாலே பொறுத்து அவவாவன்றிக்கே, இவன் பராதிகூல்யத்தில வ்யவஸ்திதனல்லனென்று ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணும் வேலைநீர்ப்பாயலோடு பத்தாசித்தம்மேய வேலைவண்ணனே இது தம்மைப்பெறுகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் திருப்பாற்கடலிலே படுக்கையோடே அக்கடல செல்லே நின்றுப்போலே ச்ரமஹரமான வடிவோடே ஆச்ரிதருடைய ஹ்ருதயத்தில ஸகலதாபங்களும் போம்படி நித்யவாஸம்பண்ணும ஸ்வபாவனே ஆசரிதருடைய ஹ்ருதயத்திலே புகுராக்கணிசித்துத் திருப்பாற்கடலிலே அவஸரப்ரதீக்ஷனாய் வந்து கண்வளர்ந்தருளி, ஆசாலேசமுடையாருடைய ஹ்ருதயத்தில ச்ரமஹரமாய் புகுருமவனாகையாலே, என்னைப் பொறுத்து நல்கவேணுமெனகிறார் ... ... ... ... ௧௧௦.

அ. நூற்றுப்பதினோராம் பாட்டு கமமுடைய தன்மையை அநுஸந்தித்து, "பொறுத்து நல்கு" என்றார் - கீழ்ப்பாட்டில; இதில்- பகவத ப்ரபாவத்தை யநுஸந்தித்து காலக்ஷேபார்த்தமாகப்பண்ணின அநுகூலவர்த்திபால வந்த குற்றத்தையும ப்ராமாதிகமாகச் செய்த குற்றத்தையும குணமாகக்கொள்ளவேணுமெனகிறார்

மூ —வைதுநின்னைவல்லவா பழித்தவர்க்குமாறில்போர்
செய்துநின்னைசெற்றத்தீயின் வெந்தவர்க்கும்வந்துனை
எய்தலாகுமென்பராத லாலெம்மாயநாயினேன
செய்தகுற்றம்நற்றமாக வேகோள்ஞாலநாதனே ௧௧௧.

ப-ரை — நின்னை வைது - புகழுகைக்குவிஷயமான உன்னை வசவுக்குவிஷயமாக்கி, பழித்தவர்க்கும—உன்னுடைய ஆத்யஸாத்யாதிகளை இழிதொழிலாகப்பழித்த சிசுபாலாதிகளுக்கும, மாறு இல போர் செய்து — எதிரிலலாதயுத்தத்தைப்பண்ணி, நின்னை செற்றம தீயின்—உனனுடைய கோபாக்நியாலே, வெந்தவர்க்கும்—தகதரான வாலிமுதலானவர்களுக்கும, உனனை—ஸாவாதிகனானவுன்னை, வந்து எய்தல் ஆகும என்பர—வந்துகிட்டலாமென்று ரிஷிகள சொலலாநின்றார்கள் ; ஆதலால-ஆகையாலே, எம மாய-தயை முதலான ஆச்சர்யகுணங்களை எனக்கு ப்ரகாசிப்பித்தவனாய, ஞாலம நாதனே-ஜகத்துக்கு நிருபாதிக சேஷியானவனே, நாயினேன்—அநந்யகதியாய உன்கைபார்த்திருக்கிற நான், செய்த குற்றம—ப்ராமாதிகமாகச்செய்த குற்றத்தை, நற்றம ஆகவே கொள- குணமாகவே கொள்ளவேணுமெனகிறார்

வ்யா வைதுநின்னை. (க) "[illegible]" என்று புகழப்படும உன்னை பருஷிக்கைக்கு விஷயமாக்கி பருஷநதானென்னெனனில; அபிஷிக்தக்ஷத்ரியனன்றிக்கே, அவர்களுக்குப பெண்கொடுத்து,பெணகுடியான வம்சத்திலே பிறந்தானென்றும, இடக்கையும வலக்கையுமறியாத இடைக்குலத்திலே பிறந்தானென்று மாய்த்துப் பருஷிப்பது வல்லவா பழித்தவர்க்கும். அவ்வவர்களுக்கு அவத்யமான ஆத்யஸாத்யாநவநீதசௌர்யாதிகளை வ்ர்த்தஹாநியாகப்பழிதது பழி - குற்றம. வல்லவா பழிக்கையாவது - உள்ளசக்தியெல

(க) "ஸதவ்யஸ்தவப்ரியஃ"

ஸாம பகவந்நிந்தையிலேயாக்குகை. மாறிலடோர்செய்த நின்னசேற்றத்தீயின் வேந்தவாகவும். எதிரில்லாத யுத்தத்தைபபண்ணி, உன கோபாக்கியாலே முடிந்தானவர்களுக்கும் மஹாராஜ ரோடே வாலிபண்ணின யுத்தத்தைப்பாபத்து இவர 'மாறில்லாதமோர' என்கிறது அவர்களா ரெ - சிசுபாலனும் வாலியும் முதலானவர்கள வந்துனை யெய்தலாகுமெனபர். ஸர்வாதிக ருன உன்னைவந்து பராபிக்கலாமென்று ரிஷிகள சொல்லாநின்றார்கள் (க) " ஹமலந்து [illegible] " என்று சிசுபாலமோக்ஷத்தைச்சொன்னான் ஸ்ரீபராசரபகவான், (உ) " [illegible] " என்று வாலியுடைய பாகதிபராபதியைச்சொன்னான் ஸ்ரீ வால்மீகிபகவான். ஆதலால் உன்னை நிந்தித்தார்க்கும் எதிரிட்டார்க்கு மகப்பட்டுனை ப்ரபாவத்தாலே உன்னைப்பெறலாமென்று மஹர்ஷிகள் சொல்லுகையாலே எம்மாய ஆச்ரிதருடைய அபராதங்களைபபொறுக்கைக்கடியான தயாகாங்க்ஷாத்யாச்சர்ய குணங்களை எனக்கு ப்ரகாசிப்பித்தவனே. நாயினேன செய்தகுற்றம் நற்றமாகவேகொள். அநங்யகதியாய் உன்கை பார்த்திருக்கிறநான் பராமாதிகமாகச்செய்த குற்றத்தையும குணமாகக்கொள்ளவே ணும ஞாலநாதனே ஜகத்துக்கு நிருபாதிகசேஷியானவனே ஜ்ஞாநாஜ்ஞாந விபாக மின்றிக்கே இருந்தநேதுடியாக இஜ்ஜகத்தைபுடையவனென்று குற்றத்தைக்குணமாகககொள்ளுகைக்கு ஹேதுசொலலுகிறது. . . . . ககக.

அ நூற்றுபபனனிரண்டாமபாட்டு. மேலிரண்டு பாட்டாலே - இக்தலையில் குற்றத்தை பொறுக்கவேணுமென்று க்ஷாபணமபண்ணி, அக்குற்றங்களை குணமாகக கொள்ள வேணுமென்று சொன்னார், இப்பாட்டில - திருவுள்ளத்தைக் குறித்து, 'ஆயுஸ்ஸு' எனக்கு இன்னபோது முடியுமென்று தெரியாது, அவன் திருவடிகளிலே வணங்கி வாழ்த்தி காலக்ஷேபம் பண்ணப்பாரென்கிறார்

மூ — வாளகளாகிநாளகளசெல்ல நோய்மைகுன்றிமூப்பெய்தி
மாளுநாளதாதலால வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே
ஆளதாகுநன்மையென்று நன்குணர்ந்ததன்றியும்
மீள்விலாதபோகம்நல்க வேண்டும்மாலபாதமே ககஉ

ப தை — வாள்கள ஆகி—ஆயுஸ்ஸை அறுக்கும வாள்போலே, நாளகள் செல்ல—நாள கள்கழிய-(யௌவநாவஸ்தை யிறுண்டாககடவ,) நோய்மை-பலம், குன்றி-வ்யாதிகளாலே குறைந்து, மூப்பு எய்தி—பலஹாநியாலே கிழத்தனத்தை யடைந்து, ( ஆயுஸ்ஸானது, ) மாளும் நாளது—முடியும் நாளாய்த்து, ஆதலால்—ஆகையாலே, என நெஞ்சமே—என னுடைய மநஸ்ஸே, ஆள அது ஆகும் நன்மை என்று—அடிமைசெய்கையே புருஷார்த்த மென்று, நன்கு உணர்ந்து—நன்றாகவறிந்து, வணங்கி—தலைபடைத்த ப்ரயோஜநம்பெற வணங்கி, வாழ்த்து—வாயபடைத்த ப்ரயோஜநமபெற வாழத்தப்பார், ( வணங்குகையும்புகழ்கையும ஸாதநமாகுமோவென்ன, ) மால பாதமே—ஸர்வாதிகனான ஸர்வேச்வரன திருவடிகளே, (நமககு,) மீள்வு இலாத போகம—யாவதாத்மபாவியான கைங்கர்யபோகத்தை, நல்கவேண்டும்—தந்தருளவேணுமென்கிறார்

(க) " பரவசசக்ரேண [illegible] " (உ) " [illegible] "

வ்யா வாளகளாகி நாளகள் செல்ல ஆயுஸ்ஸையீரும் வாளபோலே நாளகள்கழிய, தேஹாதமாபிமாநிகள் தேஹத்தில் விருப்பததாலே ஆயுஸ்ஸ போகாநின்றதென்று அஞ்சாநிற்பாகள், (க) "விஹிதாமதேஹஸம்ப்ரீதிஸ்ஸ்ரயநிர்வேதிநஃ" என்கிறபடியே பகவத் ஸமாச்ரயணத்துக்குக் கண்டகாலம் வ்யர்த்தமாய்ப்போகாநின்றதென்று மோக்ஷருசியுடையார் வெறுப்பாகள், ஆச்ரயித்தவாகள் பகவதநுபவத்துக்குக் கண்டகாலம் வ்யாததமேபோகாநின்றதென்று வெறுப்பர்கள். நோய்மைகுன்றி மூப்பெய்தி யௌவநாவஸ்தையிலுண்டாகக்கடவ வலி ரோகாதிகளாலே குன்றி, பலஹாநியே பாக்ரியாய மூப்பை ப்ராபித்து. பால்யத்தில் ஜ்ஞாநம் குறைந்திருக்கும், வார்த்தகத்தில் சக்தி குறைந்திருக்கும், இரண்டுமுண்டான யௌவநாவஸ்தையில் ரோகாத்யுபாதிகளாலே ஜ்ஞாநசக்திகள் குறைந்திருக்கும். இவையாய்த்து உள்ள ஆயுஸ்ஸிலேவரும் ப்ரத்யூஹங்கள் மாளும் நாளது மாளும் அந்த திவஸமாயதது-முடியும் நாளாயதது பாரப்தமாய நிற்கிறதென்கை அதுவா, மாளும்-முடியும், நாளது-ஆயுஸ்ஸின ஸ்வபாவமென்றுமாம் ஆதலால் வணங்கிவாழ்த்து ஆயுஸ்ஸ அஸ்திரமாகையாலும்,உள்ள ஆயுஸ்ஸுக்கு ப்ரத்யூஹங்கள் பலவுமுண்டாகையாலும், 'நாளைச் செய்கிறோம்' என்றிருக்குமதன்று, உள்ளபோதே தலைப்படைத்த ப்ரயோஜநம்பெறத் திருவடிகளிலே வணங்கி, (உ) "ஸாஜிஹ்வாயா ஹரிம் ஸ்தௌதி" என்கிறபடியே-வாயபடைத்த ப்ரயோஜநம்பெற வாழ்த்தப்பார் காலக்ஷேபம் நமக்கு பகவதநுபவத்தாலல்லது செல்லாதாகையாலே வணங்கிவாழ்த்தப்பாரென்றுமாம் என்னெஞ்சமே எனக்கு பவ்யமான நெஞ்சமே உன்னுடைய காரியமான ஸம்ருதிக்கு நான்சொல்லவேண்டா விறேயெனகிறார் "நின் புகழ்க்கலால்-நேசமில்லை நெஞ்சமே" என்று கீழிலும் பகவத்ப்ரவணமாயிறே தம்முடைய திருவுள்ளமிருப்பது. ஆளதாகும் நன்மையென்று நன்குணர்ந்ததனறியும் கீழச்சொன்ன காலக்ஷேபமேயன்றிக்கே அடிமைசெய்கையே புருஷார்த்தமென்று ஸ்வரூபஜ்ஞாநமடியாக புத்திபண்ணி வணங்கிவாழத்தப்பார் ஆளதாகும் நன்மையென்று நன்குணர்ந்து (ங) "யஸ்ய யதுஸ்ய-வந்நஶ்ரேயஃ" என்று ப்ராப்திக்கு இவற்றை ஸாதநமாகச்சொல்லாநின்ற பின்பு அதுக்கானுலோவென்ன; மீளவிலாதபோகம் நல்கவேண்டும் மாலபாதமே ஸர்வாதிகனான ஸர்வேச்வரன திருவடிகள், நமக்கு (ச) "நசபுநராவர்த்ததே" என்கிறபடியே பாவர்த்தமபாவியான கைங்கர்யபோகத்தைத் தரவேணும்; நீவணங்கி வாழ்த்தப்பார் (ரு) "நமஇத்யேவவாதிநஃ" (சு) "தத்விப்ராஸோவிபந்யவஃ" என்றிவை ப்ராப்யாந்தர்ப்பூதமாயிறே யிருப்பது. நீ இதனைச் செய்யப்பாரென்று கருத்து ... கக௨.

அ நூற்றுப்பதினமூன்றும்பாட்டு. "மீள்விலாதபோகம் நல்கவேண்டும்" என்று கீழச்சொன்ன கைங்கர்யபோகம் பாரதந்த்ர்யத்தினுடைய எல்லையிலே பெறுமதாயிருக்க, தத்விருத்தமான ஸ்வாதந்த்ர்யாதிகளாலே அபஹதராயிருந்த நமக்கு அந்தப்பேறுபெறுகை கூடுமோவென்ன, திருவுள்ளத்தைக் குறித்து, ஸ்வாதந்த்ர்யத்தாலே ப்ரஹ்மசிரஸ்ஸை யறுத்த ருத்ரனுடைய பாதகத்தைப் போக்கினவனே நமக்கு பாரதந்த்ர்ய விரோதியான ஸ்வாதந்த்ர்யத்தைப் போக்கிப் பேற்றைத்தரும், நீ அவனே உபாயமென்று புத்திபண்ணியிரு என்கிறார்.

---

(க) "விஹிதாமதேஹஸம்பத்திரீச்வராய நிவேதிநஃ" (உ) "ஸாஜிஹ்வாயா ஹரிம் ஸ்தௌதி" (ங) "தயாயஸ்துவநமஸ்யமச்ச" (ச) "நசபுநராவர்த்ததே" (ரு) 'நமஇத்யேவவாதிநஃ" (சு) "தத்விப்ராஸோவிபந்யவஃ"

மூ — சலங்கலந்தசெஞ்சடைக் கறுத்தகண்டன்வெண்டலைப்
புலன்கலங்கவுண்ட பாதகத்தன் வன்துயர்கெட
அலங்கல்மார்பில்வாசநீர் கொடுத்தவனடுத்தசீர்
நலங்கொள்மாலைநண்ணும்வண்ணம் எண்ணுவாழிநெஞ்சமே　　௧௧௩.

ப-ரை — சலம் கலந்த-கங்காஜலத்தைத் தன்னுள்ளே அடக்கினதாய், செம் சடை-சிவந்த ஜடையையும், கறுத்த கண்டன்- (பாற்கடலிலுண்டான விஷத்தைப் பானம்பண்ணுகையாலே,) கறுத்தகண்டத்தையுமுடையனாய், புலன் கலங்க—தன்னுடைய இந்த்ரியங்கள் கலங்கும்படி, வெண் தலை—வெளுத்த ப்ரஹ்மகபாலத்திலே, உண்ட—பிச்சைபுக்கு ஜீவித்துத் திரிந்தவனாய், பாதகத்தன்—பாதகத்தையுமுடையனான ருத்ரனுடைய, வன் துயர் கெட—வலிய துக்கம் கெடும்படி, அலங்கல்—திருமாலையையுடைத்தான, மார்பில்—திருமார்வில், வாசம்—பரிமளிதமான, நீர்—நீராலே, கொடுத்தவன்—அக்கபாலத்தை நிறைத்து ரக்ஷித்தவனுடைய, அடுத்த—ஸ்வரூபாநுபந்தியான, சீர்—கல்யாண குணங்களாலுவந்த, நலம் கொள்—வைலக்ஷண்யத்தையுடைய, மாலை—ஸர்வேச்வரனை, நண்ணும் வண்ணம்—கிட்டும் ப்ரகாரம், எண்ணு—அவனுடைய இரக்கமேயென்று புத்திபண்ணியிரு, நெஞ்சமே-மனஸ்ஸே, வாழி—உனக்கு இந்த வ்யவஸாயம் உண்டாயிடுக.

வ்யா　சலங்கலந்த செஞ்சடைக் கறுத்தகண்டன்　கங்காஜலத்தை ஸாகல்யேந தன்னுள்ளே யடக்கினதாய், சிவந்த ஜடையையும் க்ஷீராப்தி ஸமுத்திதமான விஷத்தாலே கறுத்த கண்டத்தையு முடைய ருத்ரன்　சங்காத்ரத்வமும் நீலகண்டத்வமும் இவனுடைய சக்திக்கு ஸூசகமாயிருக்கிறது　சிவந்த ஜடையென்கையாலே - இந்த சக்தி ஸாதித்துப்பெற்ற தென்கைக்கு ஸூசகம்　இப்போது இவனுடைய சக்திசொல்லுகிற தென்னென்னில்; குருபாதகமேற்றவாயிருந்துள்ள இந்த த்ராமாந்தத்துக்கடி. இந்த சக்தியென்கைக்காக　ஸத்பரக்ருதிகளுக்குண்டான சக்தி ஸாதவிகாக்கு நிழலாமாப்போலே,　தாமஸிகளுக்குண்டானது பிறர்க்கும் பாதகமாயிறே யிருப்பது　வெண்டலை “முடையடர்த்தசிரமேந்தி” என்கிறபடியே ப்ரஹ்மசிரஸ்ஸை அறுத்தநாள் தொடங்கி சிரகாலம் தரித்துக்கொண்டு திரிகையால் ரக்தாதிஸம்பாசங்கள்போய அஸ்திமாத்ரமாகையாலே வெளுத்தசிரஃகபாலத்திலே புலன் கலங்க வுண்ட.　பூர்வகாலத்திலே, தன்னுடைய சக்தியையும், லோகமடங்க ஆச்ரயிக்கும்படியான ஐச்வர்யத்தையு மநுஸந்தித்து, பின்பு பாதகியாய் சிரஃகபாலத்திலே ஜீவிக்கும்படியான ஸ்வரூபஹானியையுமநுஸந்தித்து, ஸர்வேந்த்ரியங்களும் க்ஷோபிதமாம்படி. அதிலே ஜீவித்துத் திரிந்தவன்　பாதகத்தன் வன்துயர்கெட　பிதாவுமாய லோககுருவுமாயிருந்துள்ள அவன் தலையையறுக்கையாலே　வந்த பாதகத்தையுடையவனுடைய வலிய துக்கம் கெட. “வன்துயர்” என்கிறது - ப்ராயச்சித்த பரிஹார்யமாதல் அநுபவ விநாச்ய மாதலன்றிக்கே, ஒரு ஸர்வசக்தி போக்கவேண்டும்படி யிருக்கையாலே.　அலங்கல்மார்வில் வாசநீர்கொடுத்தவன்.　திருமாலையையுடைத்தான திருமார்வில் பரிமளிதமான நீராலே அக்கபாலத்தை நிறைத்தவன்　“அலங்கல் மார்வு” என்றது - ப்ரயோஜநாந்தர பரரோடு அநந்ய ப்ரயோஜநரோடு வாசியற ஆபத்தே முதலாக ரக்ஷிக்கைக்கிட்ட தனிமாலையென்று தோற்றுகைக்காக. “வாசநீர்” என்றது—அநுத்தமமான (க) “ஸர்வகந்தஃ” என்கிற விக்ரஹத்திலே உத்.

(க) “ஸர்வகந்தஃ”

பங்கமான ஜலமாகையாலே முனபு ஊழு செங்குருதி" என்றது - பரிக்ரஹித்த விக்ரஹத்திலுடைய ஸஜாதிய பாவத்திலுடைய மெய்ப்பாடு தோற்றுகைக்காக அடுத்தசீரலங் கொள்மாலெல்லாவருபாரு பந்தியான கல்யாண குணங்களால் வந்த வைலக்ஷண்யத்தையுடைய பர்மேலசுவரனை. நன்றும் வண்ணமேண்ணு. இப்படி. தார்மிகயானவனுடைய பாதகத் தைப் போக்கினவன், அநபாயோஜ்ஞரான நம்முடைய துர்மாகாதிகளைப் போக்குவிக்கக் குறைவில்லை ; அவனைப்ராபிக்கும ப்ரகாரம அவனிரக்கமே யென்று புத்திபண்ணியிருக்கிறது - அவனை நம்தலையாலே ப்ராபிக்க விரகில்லே, அவன்றனே பிரங்கித் தன்னைத்தர் தருமா வேனுமெனறு வ்யவஸ்திதனாயிருக்கை நேஞ்சமே வாழி நெஞ்சமே, உனக்கு இத்தவ்யவஸாயம ஒருபடிப்பட உண்டாயிடுக . ககங.

அ. நாற்றுபப நிறைனகாம்பா. டு. இப்படி பானல் நமக்கு க்ர்த்ய மென்னென்ன ; ஜ்ஞாநபாதாகமே தொடங்கி பரமபதப்ராப்தி பர்யந்தமாக நம்மைப்புற்கு உபாயம்-ரக்ஷகோத்தாமை பண்ணின ஸ்ரீவாராஹநாயனர் திருவடிகளேயாக நினைத்து, சரீராவஸாநத்தளவும் காலக்ஷேபார்த்தமாக அவனை வாழ்த்தப் பாரேனகிறார்

மூ —ஊனமாயவெட்டு நீக்கி யேதமின்றிமீதுபோய
வானமாளவல்லியேல வணங்கிவாழத்தேன்னேஞ்சமே
ஞானமாகிஞாயிறாகி ஞாலமுற்றுமோரெயிற்
றேனமாயிடந்தமூர்த்தி யேந்தைபாதமெண்ணியே ககச

ப-ரை — ஊனம ஆய - சேதநர்க்குக்குறையான, எட்டும நீக்கி - அவித்யாதிகளெட்டையும தாபத்ரயங்களையும நீக்கி, ஏதம் இன்றி-ஸாமாரிகமான துக்கங்களும் நீக்கி, லீலாவிபூதிக்குமேலே, போய-அர்ச்சிராதிமார்க்கத்தாலே போய்,வானம் ஆள வல்லையேல்-பரமபதத்தை ஆளவிரும்புவாயாகில், (உள்ளுண்டான அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்குகைக்கு,) ஞானம் ஆகி—ப்ரகாசகமானஜ்ஞாநமாய், ஞாயிறு ஆகி—புறம்புள்ளவற்றைக்காட்டுற ஆதித்யனுமாய், ஏனம ஆய—வராஹாவதாரஞ்செய்தருளி, (பூமியையடங்க,) ஓர்—அத்விதீயமான, எயிறு—எயிற்றாலே, இடந்த-பிளந்த, மூர்த்தி-விலக்ஷணவிக்ரஹயுக்தனாய, எந்தை—என்னை யெழுதிக்கொண்ட ஸ்வாமியானவனுடைய,பாதம்-திருவடிகளை,எண்ணி-உபாயமாக அநுஸந்தித்து, என் நெஞ்சமே—எனக்கு பகவதநுபவத்துக்கு ஸஹகாரியான நெஞ்சே, வணங்கி—அவன திருவடிகளை வணங்கி, வாழ்த்து—வாழ்த்தப்பார்.

வ்யா. ஊனமாயவெட்டும் நீக்கி. சேதநர்க்குக்குறையான அவித்யாதிகளெட்டையும் சரீரஸம்பந்தப்ரயுக்தமான தாபத்ரயங்களையும்நீக்கி. இவை இவனுக்கு ஜ்ஞாநஸங்கோசகரமாகையாலே "ஊனம்" என்கிறது ஊனம் - குறைவு ஏதமின்றி ஸாம்ஸாரிகமான ஸகல அநர்த்தஹேதுவான அவித்யாதிகள் போகையாலே தத்கார்யமான துக்கங்களும் போமிறே ஏதம் - துக்கம். மீதுபோய்வானமாளவல்லையேல துக்கஸம்பந்தமுள்ள லீலாவிபூதிக்குமேலே அர்ச்சிராதிமார்க்கத்தாலே போய், பரமபதத்திலே, (க) "ஸ்வாராஜ்யம்" என்கிற படியே குறைவற்ற விருப்பையிலேண்டியிருந்தாயாகில் வணங்கிவாழ்த்தேன்னேஞ்சமே உனவழியே என்னைக்கொண்டுபோகைபண்ணிக்கே, பகவதநுபவத்துக்கு ஸஹகாரியான நெஞ்சே!,

(க) "ஸ்வாராட்பவதி"

காலக்ஷேபார்த்தமாக அவன் திருவடிகளிலே வணங்கி வாழ்த்தப்பார். வணங்கிவாழ்த்துகை காலக்ஷேபமாகில் பிற்சொன்ன பேற்றுக்கு முதலேதென்ன; இன்னதென்கிறது மேல்-ஞானமாகி ஞாயிறாகி ஆந்தரமான அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்குகைக்கு ப்ரகாசகமான ஜ்ஞாநமாய், பாஹ்யபதார்த்த ப்ரகாசகனான ஆதித்யனாய் இத்தால்—ஆத்மஜ்ஞாநஹேதுவுமாய் ஐந்த்ரியகஜ்ஞாந ஹேதுவுமென்றதாய்த்து பாஹ்யவிஷயங்களை உள்ளபடி அறிந்தாலாய்த்து விடலாவது, ஆத்மவிஷயத்தை உள்ளபடி அறிந்தாலாய்த்து புருஷார்த்தகருசியுண்டாவது ஆக, ஜ்ஞாந ப்ரதனும் ஸர்வேச்வரனென்கை ஞாலமுற்றுமோரெயிற்றேனமாயிடந்த மூர்த்தி மஹாவராஹமாய், பூமியையடங்க அத்விதீயமான எயிற்றிலேயிடந்த விலக்ஷணவிக்ரஹயுக்தன். "மூர்த்தி" என்று - ஸ்ப்ருஹணீயமான பூர்வாக்ஷாட்குண்ய விக்ரஹத்தையுடையவனைச்சொல்லுகிறது அவ்வடிவையுடையவன் கிடீர் தன்னைப்பற்றியமர்ந்து நெஞ்சோடுதாரணம் பண்ணிறுவென்று கருத்து எந்தை அந்நீர்மையைக்காட்டி என்னையெழுதிக்கொண்டவனென்னுதல், அவ்வடிவையுடையவன் தன்னைப்பற்றியாறுகைக்கு - இத்தையுடையவனாகைபாலே யென்னுதல் பாதமெண்ணியே அவன் திருவடிகளையே உபாயமாக அநுஸந்தித்து. மஹாவராஹமாய் ப்ரளயார்ணவத்தினின்றும் பூமியை உத்தரித்தாப்போலே, ஸம்ஸாரார்ணவத்தினின்றும் நம்மை உத்தரிக்குமென்று அத்யவஸித்து "வணங்கி வாழ்த்து" என்கிறார். "ஏனமாய்வெட்டுநின்று மெய்தமினறி மந்தேபாய வானமாளவல்லமேல்-ஞாலமாகிநாயிறாகி ஞாலமுற்றுமோரெயிற்றேனமாயிடந்தமூர்த்தியெந்தைபாதமெண்ணியே - வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே" என்றந்வயம் க௧௪.

அ—நாற்றுயப்பதின்ந்தாம்பாட்டு. அவன், (க) "அவாப்தஸமஸ்தகாமன்" ஆனபடியாலே ஸ்வயம்ப்ரயோஜனன், நாம் அநேகஜந்மங்களுக்கடியான ஸாமக்ரிகளைப்பண்ணினவர்கள், 'அவன் திருவடிகளே உபாயம்' என்று நினைத்தமாத்ரத்திலே நம்மை ரக்ஷித்தருளக்கூடுமோவென்று சோகித்த திருவுள்ளத்தைக்குறித்து, ஸர்வவிதபந்துவுமாய் ஸகல விரோதிகளையும் போக்கித்தன்னைத் தருவானாக ஏறிட்டுக்கொண்டான், நீ இனி சோகிக்கவேண்டாவென்று [திருவுள்ளத்தைக்குறித்து,] (௨) "மாசுச:" என்கிறார்

மூ—அத்தனாகியன்னையாகி யாளுமெம்பிரானுமாய்
ஒத்தொவ்வாதபல்பிறப் பொழித்துநம்மையாட்கொள்வான்
முத்தனார்முகுந்தனார் புகுந்துநம்முள்மேவினார்
எத்தினாலிடர்க்கடற் கிடத்தியேழைநெஞ்சமே க௧௫

ப—ரை — முத்தனார் - சற்றேனும் ஸம்ஸாரகந்தமற்றவராய், முகுந்தனார் - முக்திபூமிப்ரதரானவர், ஒத்து ஒவ்வாத—ஒத்தும் ஒவ்வாமலுமிருக்கிற, பல் பிறப்பு ஒழித்து—எண்ணிறந்த ஜந்மங்களைத்தவிர்த்து, நம்மை—நித்ய ஸம்ஸாரியாய்ப்போந்த நம்மை, ஆள்கொள்வான—அடிமைகொள்ளுகைக்காக, அத்தன் ஆகி—ஹிதமேப்ரவர்த்திப்பிக்கும் பிதாவுமாய், அன்னை ஆகி—ப்ரியமே ப்ரவர்த்திப்பிக்கும் மாதாவுமாய், ஆளும்—அடிமைகொள்ளக்கடவ, எம்பிரானுமாய்—என்ஸ்வாமியுமாய், நம்முள் புகுந்து—நிக்ரஹத்துக்கு விஷயமான நம்முடைய மநஸ்ஸிலேபுகுந்து, மேவினார்—ஒரு நீராகப்பொருந்தினார்; (இப்படியிருக்க,) ஏழை நெஞ்சமே-அறிவில்லாதநெஞ்சே, எத்தினால்-என்ன ஹேதுவினாலே, இடர் கடல் கிடத்தி—து:க்கஸாகரத்தில் கிடக்கிறாய்?

(க) "அவாப்தஸமஸ்தகாமன்" (௨) "மாசுச:"

வயா அத்தனாகி ஹிதமே ப்ரவர்த்திப்பிக்கும் பிதாவுமாய். அன்னையாகி. ப்ரியமே ப்ரவர்த்திப்பிக்கும் மாதாவுமாய் பிதாசெய்யுமுபகாரத்தை மாதா செய்யமாட்டாள்; மாதாசெய்யுமுபகாரத்தை பிதாசெய்யமாட்டான் இரண்டுவகைப்பட்ட உபகாரத்தையும் அவனொருவனே செய்யவல்லனாயிருக்கை (ச) "ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ:" என்றும், 'உலகுக்கோர் முந்தைத்தாய் தந்தை" என்றும் சொல்லக்கடவதிறே அதவா, அத்தனாகி அன்னையாகி ஜ்ஞாநத்துக்கு உத்பாதகனுமாய், உத்பந்நஜ்ஞாநத்துக்கு வர்த்தகனுமாயிருக்குமவனென்னவுமாம் (உ) "கரீயாந் ப்ரஹ்மத: பிதா" என்று ஜ்ஞாநோத்பாதகனை பிதாவென்று சொல்லக்கடவதிறே இவ்வளவால் - கீழ்ப்பாட்டில் "ஞானமாகி" என்றத்தை விவரிக்கிறது ஆளும் எம்பிரானுமாய். அடிமைகொள்ளக்கடவ என்ஸ்வாமியாய். உத்தமான ஜ்ஞாநகார்யமாய்க்கொண்டு, கைங்கர்யருசிபிறந்தால் அடிமைகொள்ளுகைக்கு ஸ்வாமியுமாயென்கை இவைதான் ஸர்வவித பந்துவுமாயிருக்கிறபடிக்கு உபலக்ஷணம் (ங) "மாதா பிதா ப்ராதா நிவாஸ: சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" என்றும், "எம்பிரானெந்தை என்னுடைச்சுற்றம் எனக்கரசென்னுடைவாணாள்" என்றும் சொல்லக்கடவதிறே ஒத்தோவவாதபல்பிறப்பொழித்து நம்மையாள்கொள்வான் இப்படி ஸர்வவித பந்துவுமாய்த்து ஏதுக்காக வென்னில், விரோதி நிவ்ருத்தி பூர்வகமாக ஸ்வரூப ப்ராப்தமான அடிமைகொள்ளுகைக்காக வென்கிறார் ஒத்தோவவாத பல்பிறப்பொழித்து ஒன்றுக்கொன்று நெடுவாசிபட்டு, இப்படி அஸங்க்யாதமான ஜந்மத்தைத் தவிர்த்து ஆத்மஸ்வரூபம் ஏகமாயிருக்க, ஒருத்தனுக்கு ஒருத்தனுடைய ஜந்மம் ப்ராப்யமாயும், அவன்றனக்கே ஒருத்தனுடைய ஜந்மம் த்யாஜ்யமாயுமிறே யிருப்பது அதவா, ஓராகாரத்திலே ஒத்தும் ஓராகாரத்திலே வைஷம்யப்பட்டுமிருக்கும் ஜந்மங்களென்னுமாம் ஜ்ஞாநைகாகாரதயா ஏகரூபமாய், கர்மத்தாலே தேவதிர்யங்மநுஷ்ய ஸ்தாவரரூபத்தாலே விஷமமாயுமிருக்கை "மகிழ்ந்தலகொன்றேபோல மாறும் பல்யாக்கை" என்னக்கடவதிறே நம்மை ஆள்கொள்வான் நித்யஸம்ஸாரிகளாய்ப் போந்த நம்மை நித்யஸூரிகளைக் கொள்ளும் அடிமைகொள்ளுகைக்காக. ஜந்மங்கள்தோறும் உடன்கேடாய்ப் போந்தாகையாலே திருவுள்ளத்தைக் கூட்டி "நம்மை" என்கிறார் முத்தனார் அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரானவர் "முத்தர்" என்று - ப்ரத்வம்ஸாபாவத்தைச் சொல்லுகிறதன்று, தன்னுடைய ஹேயப்ரத்யநீகதை ஸ்வாபாவிகமாகையாலே ப்ராகபாவத்தைச் சொல்லுகிறது முகுந்தனார். முக்திப்ரதரானவர் இத்தால் - நித்யவ்யாவ்ருத்தி சொல்லுகிறது ஆக இரண்டாலும் - விரோதி நிவர்த்தி ஹேதுவான ஜ்ஞாநசக்த்யாதி பூர்த்தியையும் மோக்ஷப்ரதத்வத்துக்கடியான ஔதார்யத்தையும் சொல்லிற்றாய்த்து புகுந்து நம்முளாமேவினார் (ச) "க்ஷிபாமி" என்கிறபடியே த்யாஜ்யவிஷயமாம்படி சூழ்த்துக்கொண்ட நம்முடைய நெஞ்சில், ஹேயப்ரத்யநீகரானவர் புகுந்து ஒருநீராகப் பொருந்தினார். நம்முடைய தண்மை பாராதே தம்முடைய பெருமை பாராதே ஸர்வபாரத்தையும் தாமேறிட்டுக்கொண்டு செய்வாராகப் புகுந்து பொருந்தினாரென்கிறார். எத்திறலிடர்க்கடல் கிடத்தி. நம்முடைய ஹிதமறிகைக்கு நாம் ஸர்வஜ்ஞரோ, அவன் அஜ்ஞனோ?; ஹிதத்தை ப்ரவர்த்திப்பிக்கைக்கு நாம் சக்தரோ, அவன் அசக்தனோ?; கார்யம் செய்துகொள்ளுகைக்கு நாம் ப்ராப்தரோ, அவன் அப்ராப்தனோ?. தன்மேன்மை பாராதே தாழ

---

(க) "ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதாசமாதவ:" (உ) "கரீயாந்ப்ரஹ்மத:பிதா"
(ங) "மாதாபிதாப்ராதா நிவாஸ:சரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயண:" (ச) "க்ஷிபாமி".

கின்று உபகரிக்கு மவனாயிருக்க, துக்கஸாகரத்திலே கிடக்கிறது எதனாலே? ஏழைநெஞ்சமே பகவத்விஷயத்தில கைவைப்பதற்கு முன்பு சோகிக்கவுமறியாதே. ஆனைக்கழுத்திலே யிருந்தாப்போலிருக்கிற அறிவுகேடுபோலேகாண் - நமகாரியத்துக்கு அவனகடவனானபின்பு இன்று சோகிக்கிற அறிவுகேடு மென்கை ஏழையா - அறிவிலோ "முத்தனார் முகுந்தனார் - ஒத்தொவ்வாத பல்பிறப்பொழித்து நம்மை யாட்கொள்வான - அத்தனாகி அன்னையாகி ஆளுமெம்பிரானுமாய் - நம்முள - புகுந்து - மேவினார்; ஏழைநெஞ்சமே - எதனால் இடாக கடல கிடத்தி" என்றபடியம் . .. .. ... ககரு

அ நூற்றுப்பதினாறுபாட்டு மேலுள்ள ஜநம பரம்பரைகளுக்கடியான காமத்தைப்போக்கி அடிமை கொள்ளுவானாக ஏறிட்டுக்கொண்டானென்றார் - கீழ், இதில் - ராக ஹேதுவான பாபத்தைப்பண்ணி, நாம அதனாலே யமவசப்பாயனமோ இருக்கிறதென்ற திருவுளத்தைக் குறித்து; நமக்குத தஞ்சமான சக்ரவர்த்திதிருமகனார், தம்மோடே நம்மைக் கூட்டிக்கொண்டபின்பு யமனால் நாம் செய்தகுற்றம் ஆராயமுடியுமோவென்கிறார்.

மூ —மாறுசெய்தவாளரக்க னாலுபப வன்றிலங்கை
நீறுசெய்துசென்றுகொன்று வென்றிகொண்டவீரனார்
வேறுசெய்துதம்முளென்னை வைத்திடாமையால்நமன்
கூறுசெய்துகொண்டிறந்த குற்றமெண்ணவல்லனே      கக௬

ப-ரை — மாறு செய்த - எதிரிட்டுக்கொண்டவனாய், வாள் அரக்கன் - ருத்ரனிடத்தில பெற்ற வாளையுடையவனான ராவணனுடைய, நாள் உலப்ப — ஆயுஸ்ஸை முடிக்கைக்காக, அன்று—பிராட்டியைப்பிரிந்த வன்று, இலங்கை நீறுசெய்து—திருவடியை இட்டுவித்து லங்கையை பஸ்மமாக்கின விடத்திலும், (* வணங்கலி லரக்கனாயிருந்தபடியாலே,) சென்று, ஸேதுபந்தம்பண்ணிச்சென்று, கொன்று - பரிகரங்களோடேகூட ராவணனைக்கொன்று, வென்றிகொண்ட வீரனார் — ஜயித்த வீரஸ்ரீயோடேநின்ற சக்ரவர்த்தி திருமகனார், வேறு செய்து - இவன நமக்குப்புறம்பாயிருப்பானொருவனென்று, தம்முள — தம திருவுள்ளத்தில, என்னை வைத்திடாமையால - என்னை நினையாமையாலே, நமன - அவரவர்களசெய்த குற்றங்களை ஆராயக்கடவ யமன, கூறுசெய்துகொண்டு—பிரித்துக்கொண்டு, இறந்த குற்றம்—செய்து கழிந்தபாபத்தை, எண்ணவல்லனே—நினைக்கவல்லனோ

வயா மாறுசெய்த எதிரிட்டுக்கொண்ட (க) "ஸிவஞானசேவித ஸஞ:" (உ) "யதிவா ராவணஸ்ஸ்வயம்" என்றிருக்கிறவிஷயத்தையிறே எதிரிட்டுக்கொண்டது தமபியோபாதி அநுகூலித்துப் பிழைத்துப்போகலாயிருக்க துஷ்ப்ரக்ருதியாகையாலே கிடீ! எதிரிட்டுக்கொண்டது. வாளரக்கன் நாள் உலப்ப வாலியைக்கொன்று அவ்வரசிலே மஹாராஜரை அபிஷேகம்பண்ணினபடியைக் கேட்டிருக்கச்செய்தேயிறே எதிரிட்டது, ருத்ரன்பக்கல்பெற்ற வாளையும், ப்ரஹ்மா தனக்குக்கொடுத்தவயஸ்ஸையும் தனக்கு பலமாகவிசுவஸித்திருக்கையாலே நம கையிலவாளிருக்க ஒருவராலும ஜயிக்கவொண்ணாது, வரத்தாலவந்த ஆயுஸ்ஸுண்டாயிருக்க ஒருவரால கொல்லவொண்ணாதென்றிருந்தானாய்த்து வாளரக்கன் நாள் உலப்ப, ராவணனுடைய அந்தவாளையும் ஆயுஸ்ஸையும் முடிக்கைக்காக, யாதொன்றைத்தனக்கு

(க) "ரிபூணமபிவத்ஸல:" (உ) "யதிவாராவணஸ்ஸ்வயம்"

ராவணவதம் பண்ணி விரோதியற்ற பின்பும் அவதாரத்தில் பிற்பாடாகைக்கு முதவுகைக்காக வாய்த்தக கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. ப்ராந்தமாகச் சொல்லிற்று பூஜ்யவாசியென்று, சேவகத்தி லுறைப்பைச் சொல்லிற்று. மருவிய திருவுள்ளம் பொருந்தி நித்யவாஸம் பண்ணுகிற தேசம் பரவ்யூஹ விபவங்களிற்காட்டில் கோயிலில் பொருத்தம் சொல்லுகிறது பெரியகோயில் கோயில்பரப்பை நினைக்கிறதென்று, ராஜா இன்னவிடத்திலே யிருந்து நினைப்பிட்டானென்றால் பின்னை அவன்றன்னாலும் மாற்ற நினைப்பிடவொண்ணாத தேசகௌரவத்தைப் பற்றச் சொல்லுகிறது அதாகிறது — ஸம்ஸாரிகள்காயம் வீட்டுகைக்கிறே (க) "ஶேஷ்ஶாயீபர்யங்காமத்யே" (உ) "விஷ்ணோராயதநம்யஸ" மதிள்திருவரங்கம் கண்வளர்ந்தருளுகிறவருடைய ஸௌகுமார்யத்தைக்கண்டு அஞ்சவேண்டாதபடி மதிளையுடைத்தாயிருக்கை இவ்வஸ்துவின் சீர்மையையறிந்திருக்கும் திருமங்கையாழ்வார்போல்வாரிட்ட மதிளன்றே என்னு உடம்பு நோவவேண்டா, ஒருகதிமாத்ரமே அமையும் அவருடைய குணசேஷ்டிதங்களைப் பற்றின திருநாமம்வேண்டா, தேசஸ்பர்சியான திருநாமமேயமையும்

கருவிலே திருவிலாதீர். ஸுலபமாயிருக்க நீங்கள் அநாதரிக்கிறது - காப்பத்திலும் பகவத்கடாக்ஷமில்லாமையிறே (ங "ஜாயமாநம்ஹி புருஷம் யம்பஶ்யேந்மதுஸூதந:" என்கிறபடியே காப்பவாஸ ஸமயத்தில் தயநீயதையைக்கண்டு குளிர நோக்குவதொருநோக்குண்டு, அது இவனுக்கு பகவத்பாரவஶ்யமாகிற ஸம்பத்துக்கடி, அதுவும் பெறுதவர்களாகாதே! நீங்களென்கிறார் "கருவரங்கத்துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்" என்றும், "கருக்கோட்டியுட்கிடந்து கைதொழுதேன்" என்றும் சொல்லக்கடவதிறே காலத்தைக் கழிக்கின்றீரே. (ச) "விஶ்ராந்திஹேதுமஜ்ஞாய ஸ்வாத்மவிதாந்த்வி" என்று பகவத்ஸமாச்ரயணத்திக்குக் கண்டகாலத்தை வ்யர்த்தமே போக்குகிறீர்களே. காலகாதமில்லாத தேசத்தில்நின்று மிங்கேவந்துகிடக்க, நீங்கள் காலத்தை வ்யர்த்தமேபோக்குவதே!. நித்யஸூரிகள் நித்யாநுபவம்பண்ணுகிறத அதனைவிட்டு உங்களவஸரம் பார்த்துக்கிடக்க, நீங்கள் காலத்தை வ்யர்த்தமேபோக்குவதே! நித்யஸூரிகளநுபவம் உங்களுக்கும் வேணுமென்று அது ஸாதமிக்கைக்காக இங்கே சாயம்செய்விக்கைக்குவந்துகிடக்க, நீங்கள் அநுபராய்த் திரிகிறீர்களே! யென்கிறார். ... ... ... கக

அ பன்னிரண்டாம்பாட்டு நமனும் வாயாலே திருநாமத்தைச்சொல்லச்சொன்னீர், எங்கள்பாபத்தாலே பஹுஜல்பம்பண்ண க்ஷமராகாநின்றோம், திருநாமம் சொல்லசக்தராகிறிலோமென்ன; ஆகில் சரவணமாத்ரத்தாலே திருநாமமுத்காரகமென்று முதுகிலோ பகயாக முகத்தாலேசொல்லி, இப்படிப்பட்ட பரபாவத்தையுடையவனூர் கோயிலென்று உஜ்ஜீவிக்கலாயிருக்க துர்பாகிகளாவதே! என்று இவர்களநர்த்தத்தைப் பொறுக்கமாட்டுகிறிலரென்கிறார்.

---

(க) "தேசோயம்ஸர்வகாமதுக" (உ) "விஷ்ணோராயதநம்யயௌ" (ங) "ஜாயமாநம்ஹிபுருஷம் யம்பஶ்யேந்மதுஸூதந:" (ச) "விஶ்ராந்தேஹஸம்பந்திரீசவராய நிவேதிதம்"

௱௨—நமனும் முற்கலனும்பேச நரகில் நின்றார்கள் கேட்க
நரகமே சுவர்க்கமாகும் நாமங்களுடைய நம்பி
அவனதூரரங்கமென்னா தயர்த்துவீழ்ந் தளியமாந்தர்
கவலையுட் படுகின்றாரென் றதனுக்கே கவல்கின்றேனே கஉ

ப-ரை — நமனும் - யமதர்மராஜாவும், முற்கலனும் - முத்கலபகவானும், பேச - ஸம்வாதம்பண்ண, (அத்தை) நரகில் நின்றார்கள் — நரகத்தில் உள்ளவர்கள், கேட்க — பாபபலாநுபவம்பண்ணுகிற ஸமயத்திலே கேட்க, (அத்தாலே) நரகமே — அந்நரகந்தானே, சுவர்க்கம் ஆகும் — போகபூமியோடொக்க நினைக்கத்தக்க, நாமங்கள் உடைய — திருநாமங்களையுடையனாகையாலே, நம்பி அவனது — பூர்ணனாயிராநின்ற அந்த ஸர்வேச்வரன் வர்த்திக்கிற, ஊர் - தேசம், அரங்கம் என்னாது — திருவரங்கமென்னுமல், அயர்த்து — அவன் திருநாமங்களை மறந்து, வீழ்ந்து — விஷயப்ரவணராய்க்கொண்டு தலைகீழாக விழுந்து, அளிய மாந்தர் — அருமந்தன்னமநுஷ்யர், கவலையுள் படுகின்றார் என்று — துக்கத்திலே அகப்படுகிறார்களேயென்று அதனுக்கே — அதற்காகவே, கவல்கின்றேன் — க்லேசப்படாநின்றேனென்கிறார்.

வ்யா. நமனும்முற்கலனும்பேச — பண்டு முத்கலனென்பானொருவன் பாப பரவசனாய் வர்த்திக்கிற நாளிலே தேநுவை தாநம்பண்ணுகிற ஸமயத்திலே, "க்ருஷ்ணாய" என்றுகொடுத்தான், பின்பு அவனுடைய மரணதசையிலே யமபடர்வந்து நெருக்கி யமன்பக்கலிலே கொண்டுசெல்ல, யமன்தான் இவனை யெதிர்கொண்டு ஸம்பாவிக்க, "உன்னுடைய படர் என்னை நெருக்கிக் கொண்டுவர நீ ஸம்பாவியா நின்றாய், இதுக்கு ஹேதுவென்" என்ன "உன்னுடைய பாபாவம் அவர்களுடம்பிருந்திலர், நீ புமறிந்திலை ஒருக்கால் திருநாமத்தைச் சொன்னாய்காண்" என்று அத்தைப்ரசம்ஸிக்க, இங்ஙனே ப்ரஸக்தாநுப்ரஸக்தமானவித்தை நரகாநுபவம் பண்ணுகிறவர்கள் கேட்டவனந்தரம் அவ்விடந்தானே ப்ராப்யபூமியாய்த்தென்று சொல்லிப்போருவதொரு கதையுண்டு, அத்தையிங்கே சொல்லுகிறது நமனும்முற்கலனும் பேச. முத்கலபகவான் ஸஞ்சாரத்துக்கு ஹேதுவென்னென்று சொல்ல, யமன் முன்பே திருநாமம் சொன்னாயென்று சொன்னவிவ்வளவே யாய்த்துப் பிறந்தது. யமன் தனக்கு பாவமாகத் திருநாமத்தைச் சொன்னானுமல்லன். முத்கலபகவான் கேட்க அவனுக்கு உபதேசித்தானுமல்லன். நாரகிகளைத் தன் கைசலிக்கவலித்து இவற்றுக்கு இனிபோக்கடியி லென்று சொன்னானுமல்லன், திருநாமஞ்சொன்னானொருவனை (க) "ஸ்வ [illegible] கேசவ கேசவ நாமபி:" என்று அவர்களை கர்ஹித்துச்சொன்னானுமல்லன் நரகபுசகா ளென்று தன் படர்க்கு ஹாநி வருமோவென்று சொன்னானித்தனை. நரகில் நின்றார்கள் கேட்க — பாபம்பண்ணுகிற ஸமயத்திலே அநுதபித்து ப்ராயச்சித்தம் பண்ணும் ஸமயத்தில் கேட்டார்களல்லர், பாபத்தினுடைய பலாநுபவம்பண்ணுகிற ஸமயத்திலே யாய்த்துக் கேட்டது அப்போதுதானும் ஸ்ரத்தாவான்களாய்க் கேட்டார்களல்லர், ப்ராஸங்கிகமாகத் திருநாமஞ்செவிப்பட்டவித்தனை. பாபம்பண்ணுகிறவேளையில் ப்ராஸங்கிகமாகவும் மோக்ஷத்துக்குத் திருநாமஞ்சொல்லுவாரில்லையோ, அப்போது கோஷ்டிதொழிலாவனென்னனவிலே, அப்போது விஷயப்ராவண்யத்தால்வந்த செருக்காலே செவிப்படாது, இப்போது ஹோரபாபம்பண்ணுகிறவனாய் ஆரோ சொல்வார்களை சொலவாரென்னும் தசையாகையாலே செவிப்பட்டது.

(க) "ஸித்தவபாநாம் அதேராதேதவதேகேசவ கலேசநாசநம்"

பூ —எறியுநீர் வெறிகொள்வேலை மாநிலத் துயிர்களெல்லாம்
வெறிகொள்பூந் துளபமாலை விண்ணவர்கோனை யேத்த
அறிவிலா மனிசரெல்லா மரங்கமென் றழைப்பராகில்
பொறியில்வாழ் நரகமெல்லாம் புல்லெழுந் தொழியுமன்றே கா.

ப-ரை —எறியும் - அலையெறியாநின்றுள்ள, நீர் - நீரையும், வெறிகொள - புலால் நாற்றத்தையுமுடைத்தான, வேலை—கடலாலேசூழப்பட்ட, மா நிலத்து உயிர்கள் எல்லாம்—மஹாப்ருதிவியிலுள்ள சேதநரெல்லாரும், வெறிகொள—பரிமளத்தையும், பூ—செவ்வியையு முடைத்தான, துளபம் மாலை-திருத்துழாயமாலையையுடையனான, விண்ணவர்கோனை-அயா வநுமமர்களதிபதியை, ஏத்த—ஸ்தோத்ரம்பண்ணுகைக்கு, அறிவு இலா-ஜ்ஞானமில்லாத, மனிசர் எல்லாம்—மநுஷ்யரெல்லாம், அரங்கம் என்று அழைப்பராகில—வாய்படைத்த பா க்யஜநம்பெற "திருவரங்கம்" என்றுசொல்லுவர்களானால், பொறியிலவாழ்— இந்த்ரியங்களுக்கு வசப்பட்டுகிடக்கிற, நரகம் எல்லாம்—ஸம்ஸாரமெல்லாம், புல எழுந்தொழியும் அன்றே -காட்டாய்ப்போமிறே யெனகிறார்.

வயா. எறியுநீரித்யாதி. எறியாநின்றிருக்குள்ள நீரையுடைத்தாய் அஸாதாரணமான கந்தத்தையு முடைத்தான கடல்சூழப்பட்ட மஹாப்ருதிவியிலுள்ள சேதநவர்க்கமடங்கலும். "எறியுநீர்" என்கிறது - த்ரிபாத்விபூதியிலே அஸங்குசிதமாகவிருக்கைக்கு யோக்யரான சேதநர். "வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போலே" என்கிறபடியே ஸங்குசிதமான நீர்வெள்ளத்துக் குள்ளேயிருக்கிற ஸங்கோசம் தோற்றுகைக்காக "வெறிகொள்வேலை" என்றது - சாத்தின திருத்துழாயின பரிமளத்தை அநுபவிக்கைக்கு யோக்யரான சேதநா ஸமுதாயத்தினுடைய துர்க்கதத்துக்கு இலக்காயிருக்கிற அநர்த்தம் தோற்றுகைக்காக. மா நிலம் பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையான ப்ருதிவி உயிர்கள் தேஹாத்மாபிமாநிகளுமான ஸ்ரீ கௌஸ்துபம்போலே ஈச்வரனுக்கு ப்ரியவிஷயமான வஸ்து கிடேரென்கை எல்லாம். ஸ்வா ந்த்ர்யத்தையே முடிய நடத்தக்கடவதான தேவவர்க்கத்தோடு அவர்களுக்குக் குடிமக்க ளான மநுஷ்யவர்க்கத்தோடு வாசியற ஸகலசேதநரும்

வெறிகொள்பூந்துளபமாலை விண்ணவர்கோனை யேத்த பரிமளத்தையும் செவ்வியையு முடைத்தான திருத்துழாய மாலையாலே அலங்க்ருதனாயிருக்கு மிருப்புக்குத் தோற்று நித்ய ஸூரிகள் ஏத்துமாப்போலே இவர்களையு மேத்த வாய்த்ததாகக் கண்டது. (க) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் ஸர்வாவாஸாய" என்று இளையபெருமாளைப்போலே, ஸம்ஸாரிகளையும் முதலிலே ஸ்ருஷ்டித்தது தன்னையநுபவிக்கைக்காக வாய்த்து

இதுஜ்ஞாநபாரதாரா பெறும்பேறாயிருந்தது, அத்தனை யறிவில்லாத க்ஷுத்ரஸம்ஸாரிகளுக்குக் கிட்டுமோ வென்னும் சங்கையிலே மேல்சொல்லுகிறது- அறிவிலாமனிசரெல்லா மரங்கமென்றழைப்பராகில் மநுஷ்யஜந்மத்திலே பிறந்துவைத்து, அறிவின்றிக்கே யிருந்தார்களாகிலும், திருவரங்கபரவணையம்வேண்டா, உக்திமாத்ரமே அமையும் "ஆகில்" என்றது - பாபபரசுராக்கு இதுதானும் ஸித்தியாதென்கை. பொறியில்வாழ்நரகம். இந்த்ரியங்களுக்குக் குடிமக்களாய் வர்த்திக்கிற லீலாவிபூதி எல்லா அவஸ்தையிலும் தப்பாதபடி

(க) 'ஸ்ராஷ்டஸ்தவமவஸாய"

தனபககலிலே அகபபடுததிக கொளளவறறுகையாலே, "பொறி" என்று இந்த்ரியங்களைச் சொலலுகிறது. நரகம் அவிவேகிகளுக்கு நரகம யமனுடைய தனைடல, அறிவுடையார்க்கு நரகம ஸம்ஸாரம் "நன்றுமஞ்சுவன்நரசம நானடைதல்" எனனக்கடவதிறே எல்லாம் புல்லெழுந் தொழியுமன்றே லீலாவிபூதி சடடடங்கத் தரிசாய்ப்போமிறே . கங.

அ பதினனகாமபாடடு வண்டினம். பிராமுகமபாததுச சொலலியும தமமிலே சொலலியும இபபடிஹிதம சொனன விடததிலும அவாகள விமுகராகையாலே அவாகளை வெறுதது, அவர்களோடடை ஸஹவாஸத்தாலவந்த சிலேசந்திர காபபூாநிகாததைகை வாயிலே இடுவொரைப்போலே கோயிலை யநுபவிதது, இப்படி தங்களுக்குச் செல்லப்ராப்தமாயிருககிறதை அநாதரிப்பதே'என்று அவாகளை உபேக்ஷாவசநத்தைப் பணணி இவர் பரோபதேசங்கிவர்ததராகிறா இது ஸவாநுபவமாயிருநாக பரோபதேசமாகத தலைகட்டுகிறது, ஸததுககளநுபவஜ்ஞாநம பிறர்க்கு காததவயமாகக கடவதிறே

மூ —வண்டின முரலுஞ் சோலை மயிலின மாலுஞ் சோலை
கொண்டல்மீ தணவுஞ்சோலை குயிலினங் கூவுஞ்சோலை
அண்டர்கோ னமருஞ்சோலை யணிதிருவரங்க மென்னா
மிண்டர்பாய்ந் துண்ணுஞ்சோற்றை விலக்கிநாய்க் கிடுமினீரே. கச.

ப-ரை — வண்டு இனம—மதுபாநத்தாலே மதிததவண்டுகள, முரலும்—ஆளாத்தி வையாநின்றுள்ள, சோலை —திருசசோலைகளை புடைத்தாய, இனம—இனமினமாக, மயில்—மயிலகளானவை, ஆலும—நாததநம பணணாநின்றுள்ள, சோலை—சோலைகளையுடைத்தாய், கொண்டல—மேகஙகளானவை, மீது—மேலே, அணவும—வநதுபடியாநிற்கும், சோலை—சோலைகளையுடைத்தாய, குயில் இனம—குயிலினஙகளானவை, கூவும—ஒன்றையொனறு அழையாநின்றுள்ள, சோலை —சோலையையுடைத்தாய, அணடா— அணடாநதாவாததிகளான தேவாகளுககு, கோன—நிாவாஹகனான ஸாவேசவரன, அமரும—நிதபவாஸமபணணுகிற, சோலை—சோலைகளை, அணி—ஆபரணமாகவுடைததான, திருஅரஙகம எனனு—திருவாங்கம என அவாயாற சொலலாத, மிணடா—நன்றிகெட்டவாகளான மூர்க்கா, பாயநது—மேலவிழுநது, உணணும சோற்றை—உண்கிற சோற்றை விலககி—நீககி, நீா—நீஙகள, (அதனை,) நாய்க்கு இடுமின—நன்றியறியும குணமுள்ள நாயககிடுங்கோ ளென்கிறாா்.

வயா வண்டினமுரலுஞ்சோலை. கிண்ணகததிலிழிவாா திரளாகவிழியுமாபபோலே மதுவெளளததாலே வணடுகள திரள திரளாக வாய்த்து இழிவது கழுத்தேசட்டளையாக மதுபாநததைபபணணி, புகக நாவயம இருநதவிடத்திலிருகக வொடடாமையாலும, தான வாயவிடமாடடாமையாலும் ஆளாததிவையாநிறகுமாயதது முக்நா திரள்திரளாக பகவதநுபவம் பணணி, போக்குவீடாக ஸாமகாநம் பணணிசகளிககுமாப்போலே, இவ்வூரில் திரயககுககளும களிதது வர்ததிககுமெனகை மயிலினமாலுஞ்சோலை. வண்டுகளுடைய கலகிடைக கேடடும சோலையினபசுமையைககண்டும் வாஷாவில் மேகங்களாக நினைதது இனமினமாக மயிலகளானவை ஸஸம்ப்ரமந்ர்த்தம பண்ணாநிற்கும ஆலுதல் - ஆடுதலும், களித்தலும். கொண்டல்மீ தணவுஞ்சோலை இவற்றினுடைய ஆலிபபையும சோலைப் பசுமையையும் கணடு மேகங்களானவை ஸமுதரமாகக்கொணடு படியாநிறகும. அன்றிக்கே, மேகபததளவுஞ செலலத் திருச்சோலைதான் ஓங்கி யிருந்தபடியைச் சொல்லிற்றாகவுமாம இவ

ஊரில் பொழிலும் * மயலமிருப் பொழிலாயிருக்கிறபடி திருமலையில் பொழிலின் இருட்சியாலே புகவிடமும் புறப்பட்ட விடமும் தெரியாது, இவ்வூரில் வஸ்துவை வஸ்த்வந்தரமாக ப்ரமிப்பிக்கும் குயிலினங்கூவுஞ்சோலை சூழ்ச் சொன்னவற்றின் வ்யாபாரமின்றிக்கே, குயிலினங்களானவை யிருந்தவிடத்திலே யிருந்து, தாந்தாமிருந்த ப்ரதேசத்தில் குளிர்த்தியாலே அந்யோந்யம் அழைக்கின்றன

அண்டர்கோனமருஞ்சோலை வண்டு பயில சொன்ன குயில இவற்றாலே இவனும சௌலப்யத்தையும் போக்யதையையுங் கண்டு விடமாட்டாதே கிடக்கிறனபத்து ரக்ஷ்ய பூதரான ஸம்ஸாரிகளுக்கு ப்ராப்யமானவோபாதி ரக்ஷகனான ஈச்வரனுக்கும் ப்ராப்யமாயக் காணு மித்தேசமிருப்பது அண்டர்கோன் அண்டாந்தர்வர்த்திகளை நிர்வஹிக்கைக்காக வென்னுதல்; பரவ்யூஹவிபவஸ்தானங்களை விஸ்மரித்து நித்யவாஸம் பண்ணுகிற தேசமென்னுதல் சோலையணி திருவரங்கம் சோலையை ஆபரணமாக வுடைத்தான கோயிலென்னுதல்; ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான கோயிலென்னுதல். திருவரங்கமென்னுமிண்டர் அவன் தங்களுக்காக வந்து கண்வளராநிற்க, அவனிருந்த தேசத்தை வாயாலே சொல்லவுங்கூட மாட்டாத மூர்க்கர் மூர்க்கராகிறார் விழுக்காடறியாதவர்கள் அதாகிறது நரகவாஸம் ஸ்வர்க்கவாஸம் முதலானவை பிடரியைப் பிடித்துக்கொண்டு நிற்க, கேவலம் தேஹபோஷணபரரா யிருக்குமவர்கள். பாய்ந்துண்ணுஞ் சோற்றை விலக்கி நாய்க்கிடுமினீரே. திருவரங்கமென்னமாட்டாத மூர்க்கராயிருப்பார் ஜீவிக்கிறது வழியல்லாவழியே அபஹரித்து ஜீவிக்கிறார்களித்தனை, அதனை விலக்கி நாய்க்கிடுங்கோள் தங்களையுத்தேசித்து வந்து கண்வளர்ந்தருளுகிற அந்த உபகாரத்தை யறியாத க்ருதக்நர் ஜீவிக்கிற ஜீவநத்தை விலக்கி ஒருநாள் ஒருபிடி சோறிட்டவன் வாசலைப்பற்றிக்கிடக்கும் அத்தனை க்ருதஜ்ஞமான நாய்க்கிடுங்கோள் இதுதான் (க) “பொ உவராய ஶஹொஸ்ரோஷாய ஸாய ஶஹ்லொஷ்ய ஶதுஶதி” என்னும் நிர்வாஹகரைக் குறித்திறே சொல்லிற்று ... ... ... ... ... கச

அப்பதினான்காம்பாட்டு மெய்யர்க்கே முதல்மூன்றுபாட்டாலே ஸ்வலாபத்தைப் பேசி, அநந்தரம் பதினொருபாட்டாலே பரோபதேசம்பண்ணி, அதுதன்னை ஸம்ஸாரிகள் ஸ்வீகரியாமையாலே அவர்கள் பக்கல் நின்றும் கால்வாங்கினராய் நின்றார் - கீழ், இவர்களிலே அந்யதமனாயிருந்த வென்னைப் பரோபதேசம்பண்ண வல்லேனாம்படி ஸ்வவிஷயத்தில் ருசியநிவ்ருத்தி முதலாக பரமபக்தி பர்யந்தமாகப் பிறப்பித்தபடி! யென்று, பெரியபெருமாள் தமக்கு நிர்ஹேதுகமாகப் பண்ணின மஹோபகாரத்தை மேல்பகுதிப் பாட்டாலே அருளிச்செய்கிறார் இவர் க்ருதஜ்ஞருடைய ஸ்வபாவமிருக்கும்படி “என்னைத்தீமனங் கெடுத்தாய் உனக்கென்செய்கேன்” என்னுமிறெப்பாகளிறே இப்பாட்டில் அத்வேஷம் பிறந்தவளவிலே தன்படிகளையெல்லாம் காட்டிக்கொடுக்குமெனவும், தானுமொருவனுளனென்றறிந்தவளவிலே ஸம்சய நிவ்ருத்தியைப் பண்ணிவைக்குமென்று மிவவர்த்தத்தை எனக்கு அத்வேஷம் பிறந்தவளவிலே காட்டித்தர அநுபவிக்கப்பெற்றேனென்கிறார்

மூ—மெய்யர்க்கே மெய்யனாகும் விதியிலா வென்னைப்போலப்
பொய்யர்க்கே பொய்யனாகும் புட்கொடி யுடைய கோமான்
உய்யப்போ முணர்வினார்கட் கொருவனென் றுணர்ந்தபின்னை
ஐயப்பா டறுத்துத்தோன்று மழகனூ ரரங்கமன்றே கரு

(க) “பொஸாதுபயோர்ந்த்யதாய ஸாதுபயல்ஸம்பாயசதி”

புள்ளூர்—புள் கொடி உடைய கோமான்—பெரிய திருவடியைத் தவஜமாகவுடைய ஸர்வ ஸ்வாமியானவன், என்னைப்போல—என்னைப்போன்ற, மெய்யர்க்கு— அத்வேஷமுடையவருக்கு, மெய்யன் ஆகும்—மெய்யனாயிரா நின்றான், என்னைப்போல—என்னைப்போன்ற, பொய்யர்க்கு—விமுகரானார்க்கு, பொய்யன் ஆகும்—பொய்யனாயிராநின்றான்; உய்யப்போம் உணர்வினார்கட்கு—உஜ்ஜீவிக்குமவனை தேடவேணும் என்னும் அறிவுபிறந்தவர்களுக்கு, ஒருவன் என்று உணர்ந்தபின்னை-ஸர்வேச்வரனொருவனுளனென்கிற ஜ்ஞானம்பிறந்தபின்பு, ஐயப்பாடு-தானே பரப்பனும் விரோதியைப் போக்குவானும் என்கிறவிஷயத்திலுண்டான ஸந்தேஹத்தை, அறுத்து—அறுத்துக்கொண்டு, தோன்றும்—தோன்றுகின்ற, அழகன் ஊர்—அழகியவடிவுபடைத்தவனுடையதேசம், அரங்கம் அன்றே—கோயிலன்றோ வென்கிறார்.

வயா மெய்யர்க்கே மெய்யனாகும். இங்கு "மெய்" என்று சொல்லுகிறது—பொய் தவிர்ந்தமாத்ரமான அத்வேஷத்தை யாய்த்து இவன்பக்கலுள்ளது அத்வேஷமாத்ரமும் அவன் இவன் பக்கலிருக்கும்படி யென்னென்னில், மெய்யனாகும் மெய்யான பரிமாற்ற முடையார் திறத்திலிருக்கக்கடவ படிகளைக்கொண்டு இவன்பக்கலிலே யிருக்கும் அதாகிறது - தன்படிகளை யடங்க இவனுக்குக் காட்டிக்கொடுக்கும் இரண்டிடத்திலும் சப்தப்ரவ்ருத்தி இது அர்த்தமாகிறபடி யெங்ஙனே யென்னில; குணபூர்ணனாகையாலும் ஸமஸ்த கல்யாண குணாத்மகனுக்கு இதோரேற்றமாகச் சொல்லவொண்ணாமையாலும், இவனாத்மே பஜ்ஜீவனாக ரக்ஷிக்கைக்கடியான ஸ்வாபாவிக ஸம்பந்த முண்டாகையாலும், அவாப்தஸமஸ்த காமனாகையாலே இவன்பக்கல் வேண்டாதபடி நிரபேக்ஷனாயிருக்கையாலும், இதுதான ஸம்ஸாரிகளிலே சிலர்க்கு ஸம்பாவிதமாகையாலும், ஈச்வரனுக்குக் குறையல்லாமையாலும், சப்தத்தை நெருக்கியே அர்த்தம் சொல்லுகிறோம் இன்னம் கன்னமிடவற்ற மெய்யராய பரிமாறுவார் நித்யஸூரிகளே யாகையாலும், அந்த மெய் ஸம்ஸாரிகள்பக்கல் ஸம்பவியாமையாலும்! இவிதுதான் ஸம்ஸாரிகள் பக்கலுள்ளதொன்றாலே பேறாகவேண்டி யிருக்கையாலும், (க) 'பீஜமாமேவ நவஞ்ஜநாதூர்' எனகிற காமிசராஹஸ பரமார்த்தோடு சேருகையாலும். இதுவே அர்த்தமாகவேணும் இந்த அத்வேஷத்தை ஸாதனமாகக் கொண்டு இறே-சேதநனுகையாலே இந்தருசி ஸ்வரூபாந்தர்ப்பூதமாகையாலும் அநுபவவேளையிலேயுள்ள தொன்றாகையாலும் ஸாதநமாகமாட்டாது.

பொய்யர்க்கே பொய்யனாகும். மெய்யென்று பேரிடலாவதொரு பொய் இவனாசாயத்திலின்றியுண்டாக மாட்டாதென்று தோற்றினால் பின்னை கண்ணாடியோடே யாய்த்துச் சால்வாங்குவது. ஸர்ப்பதஷ்டனை நெற்றியைக்கொத்திப் பார்த்தால் பசையில்லையாகில் மருந்தின்று மீளுமோபாதி, இவன்பக்கல் ஜீவநஹேது வில்லையென்று எப்போட்டோடே யாய்த்து மீளுவது "மெய்யர்க்கே" என்கிற அவதாரணத்தாலே — அத்வேஷமாத்ரத்தையே சொல்லுகிறது. "பொய்யர்க்கே" என்கிற அவதாரணம் — மெய்க்கு ப்ரஸங்கமில்லாத பொய்யரைச் சொல்லுகிறது மெய்யென்று சொல்லுகிறது - ஸத்பக்ஷத்தை ஸத்யமென்கிறது - பகவத் விஷயத்தைப் பற்றின அறிவை

'பொய்' என்று சொல்லுகிறது- பகவத் வ்யதிரிக்தமான பதார்த்தங்களை விஷயீகரித்த ஜ்ஞானத்தை. மெய்யர்க்கு மெய்யனாய்ப் பொய்யர்க்குப் பொய்யனாய்ப் போந்தமை

(க) "பிதாபாவேத ஸப்ராபதும"

எங்கேகண்டோ மென்னில், என்னைப்போல நான் நெடுநாள் கைப்பற்றப் பணிப்போந்தவிடத்தில் என்னைக் கிட்டமாட்டாதே நின்றான், எனக்கு அத்வேஷம் பிறந்த வளவிலே மேல்விழுந்து விஷயீகரித்தான், இவைபிறந்தின் எழுபக்கலிலே கண்டேன் விதியிலாவென்னை அவனுடைய சேஷித்வாபிருக்க அநாதிகாலம் விஷயாந்தர ப்ரவணனாய் பகவத்விஷய விமுகனாய்ப்போந்த பாக்யஹீநனென்று முன்பிழந்த இழவுக்கு வெறுக்கிறா “ பழுதேபலபகலும் போயின ” என்று - பெற்ற பேற்றிற் காட்டில் இழந்த இழவே மேற்பட்டிருப்படியிறே இவ்விஷயத்தில் கைவைத்தார்படி யிருப்பது. (க) “ நிர்ஹேதுகவிஷயீகாரதைவ்யசாகதேவமஹர்த்திகே ” என்னக்கடவதிறே இப்படி மெய்யென்று பேரிடலாவதொரு பொய்யைக்கொண்டு விஷயீகரிக்கிறவன்றான ஆரில்லாதானொருவனோ வென்னில்; பட்டிகோடியுடையகோமான் மெய்யான பிரமாத்ருத்தையுடையா ரநேகருடையபடிகளை ஒருவன் செய்யவல்லனாம்படி சமைந்தாரநேகரையுடையா னொருவனுடைத்து “ சோடி ” என்று, (உ) “ ஜாவலஸ்ஸ்வரவாணஜ ந்தி ” இத்யாதிக்கு உபலக்ஷணம் (௩) “ஜிஜாஸன்பாந்தி ” இத்யாதி. கோமானை ஆயர்வநுமவர்க்க ளதிபதியாமையபாலே மேன்மையுடையனாயிருக்குமவன். ஸம்பந்நாயிருக்குமவர்களையாகிலும் தந்தலைபத்தாலே ஒருநாசு விழுந்து விடக்கடவோந்தேடாநிற்பர்களாய்த்து—தந்தாம் வஸ்துவை விடமாட்டாமையாலே

உப்பபோமுணர்விநூர்கட்டு. கீழ்- பொய்யிலே வ்யவஹாராப நின்றநிலையிலே நினையில் காமவாய்கீ நாம உஜ்ஜீவிக்கும் ப்ரகாரமேதாமென்று வெளிச்செறிப்பை யுடையவர்களுக்கு ஏதொழிய முழுப்போ முணர்வுகள் போலேகாணும் (௪) “ வேஷஜிநாம் குணஞ்தி ” என்னக்கடவதிறே. உப்பபோ முணர்வாகிறது- யாதர்ச்சிகமாக விளைந்ததொரு ஸாத்தமபாக ராமார் நாம்நின்றநிலைபேர்தென்றும், மேல் நடக்கும்போகதிலே தென்னமே பிறக்கு முணர்வு. ஒருவனென் றுணர்ந்தபின்னை ஈச்வரனு மொருவனுளனென்று அறிவுபிறந்த பின்பு கேவல தேஹமேயன்று உள்ளது, தேஹாதிரிக்தமாயிருப்பதொரு ஆத்மாவுண்டு, அவனுக்கு ஸ்வாமியாயிருப்பானொரு ஈச்வரனுமுண்டு என்னும் அறிவுடையார்க்கு “ பஞ்சவிம்சகன் ஆத்மா ” என்றால் இசைவாருண்டு; ஷட்விம்சகன் ஈச்வரனென்றால் இசைவாரில்லையிறே.

மெய்ப்பாடுற்றுத்தோனறும் ஈச்வரனைப்பற்றத்தை யிசைபாதநாளிறே இவனுக்கு ஸம்சய முள்ளது காலே பாரப்யஎன்னும்படி த்திலும், தானே விரோதியைப்போக்குமென் னுமிடத்திலாமன்றான ஸம்சயங்களை அறுக்குக்கொண்டுவந்து தோன்றும் இவனுக்கு ஸம்சய நிவர்த்திபண்ணுவது சாத்தாலேயென்னில்; அதுதான் (௫) “ மாமேகம் சரணம் வ்ரஜ ” என்று அர்ஜுநனுக்கு உபதேசத்தாலே ஸம்சயத்தை யறுத்தானதகளை, அவில்லாதார்க்கு அழகாலே ஸம்சயத்தை அறுத்துக்கொண்டுவந்து, தோன்றும்-ப்ரகாசிக்கும் “ திருமேனியர்களுக்கு ” என்றும், “ கண்டவாற்றாற்றனதேயுலகெனநின்றான ” என்றுப சொல்லுகிறபடியே- கண்டபோதே ஸ்வாதிகவஸ்துவென்று நிர்ணயிக்கலாம்படியிறே திருவடிவுதானிருப்பது. ஊரரங்கமன்றே. இவ்வழகு ஒருதேசவிசேஷத்திலே போலனறே

(௧) “ நிர்த்திநஸ்வைவேஷஸ்லோகஸ்வாத்மாப்யேகமகீர்ஹதேக ” (௨) “ தாஸன் தாஸானாம் ” (௩) ‘ ஜிவாஸப்ய ’ (௪) “ புத்திநாசாத்ப்ரணச்யதி ” (௫) “ சிவ யம்பேதறம் சாதியார்த்வாய் ப்ரபந் ’

நபவிக்களாவதென்ன, அது வேண்டா, ஸம்ஸாரத்துக்குள்ளே கோயிலிலே அநுபவிக்க மென்கிறார் பரமபதம் கலவிருக்கை, நாகம் கோயில என்னும்படியாயத்து கோயி நித்யவிபூதியிருப்பது. . . . . . . கரு.

அ. பதினாறும்பாட்டு சூதனாய் ப்ரஸ்யமும் ப்ராபகமும் தானேயெனனுமிடத்தில சயத்தை அறுத்துத் தாதாபபோலே, நாகநதரபாவியான ஆகாங்ஷைத தனபக்கலிலே யாதுருமாகப் பெருகும்படி பண்ணினானென்கிறார்

மூ —சூதனாயக களவனுகித் தூர்த்தரோ டிசைந்தகாலம்
மாதரார் கயற்கணென்னும் வலைப்பட்ட டழுந்துவேனைப
போதரே யென்றுசொல்லிப் புந்தியிற்புகுந்து தன்பால்
ஆதரம் பெருகவைத்த வழகனூ ரரங்கமன்றே கசு.

ப-ரை —சூதன் ஆய—ஈச்வரனும தர்மாதர்மங்களுமில்லை என்று சொல்லுமவனாய், வன் ஆகி—ஈச்வரசேஷமான ஆத்மவஸ்துவையென்னதென்று சொல்லுமவனாய, தூர்த் ராடு—விஷயாந்தர பரவணரோடே, இசைந்தகாலம்—பொருந்திப்போந்தகாலத்திலே, மாத —ஸ்த்ரீகளுடைய, கயல்—கயலபோலே அழகிதான, கண் என்னும—கண்களாகிற, யுளபட்டு—வலையிலே அகப்பட்டு, அழுந்துவேனை—அழுந்திக்கிடக்கிறவென்னை, போ ர என்றுசொல்லி—வாவென்றுசொல்லி, புந்தியில புகுந்து—என மநஸ்ஸிலேவந்துபுகு , தன்பால்—தன் விஷயத்திலே, ஆதரம் பெருகவைத்த—அன்பை மிகவும பெருகப ணின, அழகன ஊர-அழகைநிரூபகமாகவுடையவனுடைய தேசம, அரங்கம அன்றே-யிலன்றோ வென்கிறா

வயா. சூதனாய்க் களவனுகி தமமுடைய பூர்வவ்ருத்த மருளிச்செய்கிறா சூதாவது-மதோஹரத்வம களவாவது-பரதரவயததை யென்னதென்றிக்குகை பரமாணவிஷயமான த்ததை இல்லையெனகை இனி காஷ்டாபஹாரம பண்ணினவனுககும, ரத்நாபஹாரம ணினவனுககும அபஹாரமொததிருககும, த்ரவ்ய வைஷம்யத்தாலே தோஷமும நெடு பெட்டிருககும், சண்டாளத்ரவ்யததை அபஹரித்தார்க்கும வஸிஷ்டத்ரவயததை அபஹ ாககும த்ரவ்யம ஒன்றானாலும வ்யக்திகளுடைய வைஷம்யத்தாலே தோஷம நெடு பட்டிருககும இத் த்ரவ்யம ஸ்ரீ கௌஸ்துபம்போலே ஈச்வரனுககு ஸ்ப்ருஹணீயமான மத்ரவ்யம், உடையவனும ஸர்வேச்வரனாகைபாலே தோஷததுககு அவதியில்லை யென் ஆக, களவாகிறது — ஈச்வரசேஷமான ஆத்மவஸ்துவை என்னது என்றிருககை. ாவது - பச்யதோஹரத்வம அதாவது - ஸதவ்ர்த்தனாயிருப்பானொருவன பரசேஷமாயக ணடு ஆத்மஸ்வரூபமுண்டு, சேஷியான ஈச்வரனுமுண்டு, தர்மாதர்மங்களுமுண்டென்றி ால, இவையெல்லாம பொய்காணென்று அவனை விப்ரலம்பித்துக தனபடியாக்கிக்கொள க அதுவாயில நினைவு இதுவானால பின்னை யிதுககு வர்த்த(ய-ம்)சராயிருப்பாரோடே ஸஹவாஸம்பண்ணுவது தூர்த்தரோடிசைந்தகாலம். ப்ராபதனை ஸர்வேச்வரனை அப்ராப்தவிஷயங்களிலே அதிப்ரவணரோடே பொருந்திப்போந்தகாலம இப்படிப ந்தகாலத்தை ஸ்மரிக்கையுங்கூட அஸஹ்யமாயிருக்கிறதாயத்து இவர்க்கு இப்படி அக பட்டுப போந்தகாலத்துககுத தொகையில்லை ...

ஆத்மாவுக்கு நிலைநின்ற ஸ்வரூபம் வைஷ்ணவ ஸஹவாஸமேயாயிருக்க, அநர்த்த-துவான ஸ்வபாவத்தையுடையவர்களோடே காலத்தைப்போக்குவதே! பாகவத ஸஹவாஸ பகவத்விஷயத்தோடே மூட்டிவிடுமோபாதி, விபரீதருடைய ஸஹவாஸம் விஷயப்ராவண்யத்தோடே மூட்டிவிடுமிறே. மாதரார் கயற்கண்ணென்னும் வலையுட்பட்டழுந்துவேனை ஸ்த்ரீகளுடைய, கயல்போலே மூக்கமாயிருந்துள்ள கண்ணாகிற வலையிலே அகப்பட்டுக் கால்வாங்கமாட்டாதே என்னை. ஜாதிமாத்ரமே பற்றாசாக மேல்விழுமதொழிய ஜந்மவ்ருத்தங்களாராயான், கண்ணினுடைய ஆகர்ஷகத்வமே யறியுமித்தனை. அகவாய மயிர்க்கத்தியாயிருக்கிறவனைப் பொழிந்த மங்கைகளுக்குச்செல்லாமை தோற்றும்படி பாய்ந்துபபாய்ப்பது "கயலென்று போல வலையின காயமேபாய்த்து பஷிப்பது. இதுதானும் மணிவலையிறே. கண்ணாகுளிலே மணிபுழுண்டிறே, அத்தைப்பற்ற "வலை" என்கிறது. புறப்பு கால்வாங்கவொணாதபடி கண்ணைக்காட்டி, தான் கிட்டாதே அகலநிற்கும், அதாசடி, கிட்டினவன் அபிநிவேசத்தோடே போகோபகரணங்களைக்கொண்டு புகுந்து இவன் தனக்கு ஸ்வாதீனமாய்ப் புறப்படவேண்டுமிறே அதின் தன்மையிருப்பது. இவனுடைய அவிவேகியாகையாலே அகவாயாராயமாட்டாதே வாய்கரையிலே அழுந்திநோவுபடாநிற்கும். வலையுட்பட்டழுந்துவேனை மீண்டு கால்வாங்கவொண்ணாது, அதுதன்னில் அநுபாவ்யமொன்றுமில்லை, கிடந்து உழைக்குமித்தனை. விஷயப்ராவண்யத்தால் வந்த க்லேசமேயாய்விட்டது இவ்விஷயங்களிலே அகப்பட்டு கால்வாங்கமாட்டாதே நோவுபடுகிறபடியைக்கண்டு, பெரியபெருமாள், ஆழ்வீர்! நீர் நினைத்திருப்பதென், ஆசைப்பட்டிருப்பதென்னென்ன, இப்படி பெருநோவுபடுத்தின கண்ணை ஒருதார்மிகன் கொண்டுவந்து காட்டுமாகிலாமிறே யென்று கண்ணழகியாரை உகப்பேனென்ன, "கண்ணின் வாசியறிந்தார்" என்று திருத்திரையை விலக்கி திருமுகத்தைக் காட்டினார் * உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்களைக்காட்டியருளி, ஆழ்வீர்! நீர் ஆசைப்பட்ட கண்ணுடையார் இங்கேகாணும், இங்கே போருமென்ன; "இவை சில கண்களிருந்தபடியென்" என்று தாம் முன்பு அநுபவித்த கண்களிற்காட்டில் விலக்ஷணமுமாய் பாரப்தமுமாயிருக்கையாலே இவருடைய நெஞ்சு விஷயாந்தரங்களில் நின்று மீண்டது. (க) "ராமே கமலபத்ராக்ஷே ஸர்வஸத்வமநோஹரே। ரூபதாக்ஷிண்யஸம்பந்நே ப்ரஸூதா ஜநகாத்மஜே."

$ புந்தியில்புகுந்து. இவ்வளவிலே விலக்குகைக்கு பரிகாமில்லாதபடி நினைவுக்குவாய்த்தலையைப்பற்றினான். நாம் புகுமிடத்தில் இவர்க்கு விலக்காமையுண்டாயிருந்தமிதே இதுவே பற்றாசாக இவர் திருவுள்ளத்திலே வந்து புகுந்தானென்றுமாம். புகுந்து செய்தென்னென்னில்; தன்பாலாதரம் பெருகவைத்த அபராபத விஷயத்தில பண்ணிப்பேரார், தன்பக்கலிலே யாமப்படியாகப் பண்ணினான். பாழிலேபாயகிறநீரைப் பயிரிலே மட்டிவிட்டாப்போலே ஆதரத்தை வையோஜநமாக்கினான். பெருக "அதனில்பெரி" யென்னுமாப்போலே அநுபாவ்யனான தன்னளவன்றிக்கே பெருகும்படியாக வைத்த. இகடியாகத் தாதலையிலொன்றும் காணுமைபாலே ஏதொருதண்ணீர்ப் பந்தல் வைத்தா

---

(க) "ராமே கமலபத்ராக்ஷ ஸர்வஸத்வமநோஹரே। ரூபதாக்ஷிண்யஸம்பந்நே ப்ரஸூதா ஜநகாத்மஜே" $ "புந்தியுள்" என்றுமாம

தனை கிடமென்கிறார் இப்படி ஆசாத்தைக் கரைபுரளப் பண்ணின பரிகாரமேதென்னில்; அழகன் "பேரமர்காதல் கடல்புரைய விளைவித்த காரமர்மேனி" என்னக்கடவதிறே. பகுதி வர்த்தமான கர்மஜ்ஞாநஸ்தாநத்திலே நிற்கிறதாய்த்து -இவாகருவடிவழகு; இவர்க்கு ஸம்சபத்தை அறுக்கைக்கும்,ஆசாத்தைப் பெருக்குகைக்கும, ஸாமக்ரி தன்னிறம் பெற்றதாய்த்து அழகன் அழகையே நிரூபகமாக வுடையவன். ஸ்ரீரங்கமன்றே இவர் திருவுள்ளத்தில் புகுருகைக்கு அவஸரப்ரதீக்ஷ ரிருந்தவர் கோயிலிலெனகிறார். பயப்படும் கலவிருக்கை யென்னுமபடி நித்யவாஸம் பண்ணுகிறதேசம் ருசிபிறந்தபோது புக்கநுபவிக்கலாம் தேசமிறே யிது . . . . . கசு

அ பதினேழாமபாட்டு. விரும்பி சிழ - ஆசாமபெருகினபடி சொல்லிற்று, இதில்-அசவாபில ஆதரம் விளைந்து புறவாய் கட்டழியாம லிருக்கையன்றிக்கே,சக்ஷுராதிகரணங் களுமத்தன்னைக்காண்டி சேதநரையா தியாலே களிக்கும்படி பண்ணினனென்கிறா

மூ —விரும்பிநின றேத்தமாட்டேன் விதியிலேன் மதியொன்றில்லை
இரும்புபோல் வலியநெஞ்ச மிறையிறை யுருகும்வண்ணம்
சுரும்பமர் சோலைசூழ்ந்த வரங்கமா கோயில்கொண்ட
கரும்பினைக் கண்டுகொண்டென் கண்ணிணை களிக்குமாறே கள.

ப-ரை — விரும்பி—ஆதரத்தோடே, நின்று—ஒருபடிப்பட நின்று, ஏத்தமாட்டேன—ஸ்தோத்ரம் பண்ணமாட்டாதவனாய், விதி இலேன்—அநுஜ்ஞாபர்தம் முதலிய காயிகவ்யாபாரங்கள் பண்ணாதவனாய், மதி ஒன்று இல்லை—ஸாவேச்வரன் ஒருவனுண்டென்று அறியாதவனாய், இரும்புபோல—இரும்பைப்போலே, வலிய—பலிஷ்டமான, நெஞ்சம—என்னுடைய மனஸ்ஸானது, இறை இறை—கொஞ்சம் கொஞ்சமாய், உருகும் வண்ணம்—உருகும்படிச்சீட்டாக; சுரும்பு—வண்டுகள், அமர்—பொருந்தியிருந்துள்ள,சோலை சூழ்ந்த-சோலைபாலே சூழப்பட்டிருப்பதாய், மா—சலாக்யமான, அரங்கம—திருவரங்கத்தை, கோயில்கொண்ட—வாஸஸ்தாநமாகக் கொண்டிருக்குமவனாய், கரும்பினை—கரும்புபோலே ரஸாவஹனானவனை, இணை—ஒன்றுக்கொன்றொப்பான, என் கண—என்கண்கள், கண்டுகொண்டு— பார்த்தவண்ணமாய, களிக்கும் ஆறே — களித்துப்போரும்படியென் என்று பரிதாகிறா

வயா விரும்பிநின்றேத்தமாட்டேன். மநோவாக்காயங்களுடைய பூர்வவ்ருத்தத்தையநுஸந்திச்செய்கிறா விஷயம் விலக்ஷணமாகில் அத்யாதரத்தோடே வ்யவஸிதனாய் நின்று ஸ்தோத்ரம் பண்ணவேண்டுமிறே, அதுசெய்யமாட்டிற்றிலேன. (க) "ஸொஹம—ஸ்துதெள நஸமர்த்யவாந்" என்னுமாப்போலே பகவத்விஷயத்தைப் பேசவென்றால வாகிந்த்ரியத்துக்குச் சக்தியில்லை, வ்யதிரிக்த விஷயங்களைப் பேசவென்றால ஆதரமுண்டாய சக்தியுமுண்டாயிருக்கும வாக்வ்யாபாரம் புறம்பேயாகிலும காயிகவ்யாபாரங்களில் நமஸ்கார்யமாதேனுமுண்டோ வென்ன, விதியிலேன் (உ) "வியிவிழுயாதழ" என்கிறபடியே காயிகவ்யாபாரத்தைச் சொல்லுகிறது உன்னை உத்தேசித்து உபகாலநுகூலமாக இதுக்கு முன்பு கையால் ஒன்றுஞ்செய்திலேன. (ங) "ஸாஜிஹ்வாயா ஹரிம்ஸ்தெளதி ரு

(க) "ஸொஹம - ஸ்துதெள நசஸமர்த்யவாந்" (உ) "விதிர்விழ

(ங) "ஸாஜிஹ்வாயா ஹரிமஸ்தெளதி"

வதாவும், (க) "பௌனக்ருஷ்ணாகபௌனகவென" என்கிறவனுவும், புறம்பேதப்பிறரு மெறும் நெஞ்சாலேதான் நம்மை நினைத்திரோமென்ன, மதியொன்றில்லை உனவாகியுறியா தொழிந்தால நியொருவனுண்டென நிருக்கு மதியுங்கூட இல்லை. உன்னைபொழிந்த ஸகல பதார்த்தங்களினுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களை உள்ளபடி யறிய க்ஷமனுயிருப்பன்; உன்ன ளவில் வந்தால் உன்ஸத்பாவத்திலும் ஜ்ஞாநமில்லை (உ) "ஜுஷ்டம் யதா பச்யத்யந்ய—மீசமஸ்ய மஹிமாநம்" என்னக்கடவதிறே (ங) "யஸ்யாமதம் மதம் தஸ்ய"

இப்படி மநோவாக்காயங்களாலே அந்யதாவாக்க காயங்கொண்டேனாகில, பாதாமான மநஸ்ஸை மேலேதிருத்திக் கொள்ளுகிறேமென்ன; இருமபுபோல் வலியநெஞ்சம். தேவரீ ருக் திருத்திக்கொள்ளுகைக்கு யோக்யதையில்லை இருமபாகில் அக்நியாலே நிமித்துக் கொள்ளலாம்; இது ஒருபடியாலும் திருத்தவொண்ணுதெனகை இதுக்குமுனபு - பூர்வா வஸ்தையில் தாம்நின்றநிலையை அருளிச்செய்தாராய், இதுக்குமேல- அந்தநிலையில பாபாவம் சொல்லுகிறுா. இறையிறையுருகும்வண்ணம் இவ்வனமையோடே முடிந்து போகாதபடி இப்போது எனமநஸ்ஸை சிதிலமாமபடி பணணினை கடிநஸ்தலத்திலே வர்ஷித்தால சாடிந்யமடங்க செழிச்சிக குழப்பாமாப்போலே, விஷயாந்தரத்தாலே மநஸ்ஸு அதிகடிந மானுலும சிதிலமாமபடி வயிரவுருககாயிறே பகவத்ப்ரபாவமிருப்பது. சுரும்பமரித்யாதி. உருக்கின விஷயதானிருக்கிறபடி. வணடுகள்பொருந்தி விடமாட்டாத சோலை, பரிமளம படித்தாபபோலே தனனிலே பிறந்ததென்னும்படி யாய்த்து வண்டுகள்படிந்துகிடக்கும்படி மது மாறிலிறே அது காலவாங்குவது மதுமாறுவது செவவிமாறிலிறே ஆக நித்யவஸந்தமான சோலையென்கை சோலையின போக்யதை தோரணியெனனும்படியாய்த்து ஊரில்போ க்யதையிருப்பது பரமபதத்தோபாதி சலாக்யமான கோயிலாகக் கொணடான. கரும்பினை. "கருமபு" என்றது - கைதொட்டால பிசகுநாறுதேயிருக்கும் போக்யமான வஸ்துவை ப்ராப்தமுமாய ஸுலபமுமா யிருக்கச்செய்தேயும போக்யதையாய்த்து மிக்கிருப்பது; "கனனல" என்னுதொழிந்தது — பாகவிசேஷத்தாலே ஆக்கனுப்வாந்த ஸாரஸ்யமல்ல, ஸ்வதாபாபுஸதமான ஸாரஸ்யமெனகைக்காக (ச) "ரஸோவை ஸ:" எனனக்கடவ திறே கண்டுகொண்டு, "நிதியெடுத்துக்கொண்டு" என்னுமாபபோலே கணணாலே பருகும கருமபாபதது இது (ரு) "ஜோஷ நாஸ்யாம்விவஸ்ய." என்கண்ணிணைகளிக்கு மாறே நாகாவஹமான விஷயங்களைக்கணடு களித்துபபோந்த எனகண்களன்றோ! இவவிஷய தகைதக கண்டுகளிக்கின்றன. இணை களிபபுக்கு ஒன்றுக்கொன்று ஒப்பாமித்தனை போகவி வேறு உபமாநமில்லை. முக்தர்ஸாக்ஷாத்கரம் பண்ணிக களிக்கும் களிப்பும இக்கணணாலேயிப படி களிக்கிற இதுக்கு ஸத்ர்சமன்றிறே காணுதிறனுன என்னையொழியத் தானே களி யாநின்றன இந்த்ரியங்கள ஜ்ஞாநப்ரஸாதத்வாரமென்கிற அங்கிலைகுலைந்து சேதநஸமாதியாலே தானே களியாநினறன (சா) ["ஸாக்ஷாத்கர்த்து நாமதாதாஜ்யமஹீ:"] கர்த்தாவையொழியவே கரணங்களுக்கே அந்வயவ்யதிரேகங்களிலே சோகஹர்ஷங்க ளுண்டாமபடியிறே விஷய ஸ்வபாவமிருப்பது .. .. . .. ... கள.

---

(க) "யௌநகபூஜாகரௌ கரௌ" (உ) "அஸத்பாஹமேதி வேதசேத- அஸந்நேவ ஸபவதி" (ங) "விதயாநயாமிலபாநைபுணம" ஸ்ரீ புராணி-ஸமஹிதை (ச) "ரஸோவைஸ:" (ரு) "லோசநாபயாமபிபந்திவ" (சா) "ராமமேமஹாகதாதாஷ்டி:"

என்கிறபடியே—நித்யஸூரிகளுடைய பாத்ரமே இங்குள்ளார்க்கும் பாத்ரமாம்படி பண்ணிக்கொள்ளுகை இவ்வன்னியமறுக்கைக்குப் பரிகாரமேதென்னில்; தாமரைக்கண்ணன் கையிலே ப்ரஹ்மாஸ்த்ரமிருக்க வெல்லவொண்ணுத இடமில்லையிறே, அங்குள்ளாரை வென்று பரிகரத்தைக்கொண்டாப்போலே இங்குள்ளாரை வென்றது "தாமரைக்கண்ணனை விண்ணோர்பரவுந் தலைமகனை" என்னக்கடவதிறே. அவர்களுக்கு போகோபகரணமான இத்தைக் கொண்டிகோ! இங்குள்ளாருடைய விரோதியைப்போக்குவது இப்ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு அருப்பட்டாரோவென்னில், எம்மான் என்னைத் தோற்று என்னை யெழுதிக்கொடுத்தேன் ஸம்ஸாரிகளுக்கும், இவ்வருகான எனக்குத் தோற்பித்த கண்களுக்கு இனிவெல்லவொண்ணுத நிலமுண்டோ?

கனியிருந்தனையசெவ்வாய் அகக்கண்ணாலே நிர்மமனானாருக்கு அநுபாவ்யமான விஷயமிருக்கிறபடி கண்டபோதே நுகராம கனிபோலேயாய்த்து திருவதரத்தில் போக்யதையிருப்பது "இருந்த" என்றது—அச்செவ்வி என்றுமொக்க ஏகரூபமாயிருக்கிறபடி (க) "ஸமுதேகாருவரஜவாய" என்னக்கடவதிறே கண்ணனை பெரியபெருமானைத் திருவடித்தொழுகால, "அவதாரத்தில பிற்பட்டார்க்கு முகவுதைக்காக க்ர்ஷ்ணன் வந்து கண்வளர்ந்தருளுகிறான" என்று ஸமரிக்கலாம்படியாயத்திருப்பது

"யசோதைப்பிராட்டி பிள்ளைமன தொன்றுமல நிம்பிலே கைவளரும்படி வளர்த்த மொசப்போகப்பலதாம் தோற்றியிருக்கும் பெரியபெருமாளைக்கண்டால்" என்றும், "வஸிஷ்டாதிகளாலே ஸம்ரக்ஷிதராய் வளர்ந்துவடித்த விநயமெல்லாம் தோற்றும்படியான சக்ரவர்த்தித்திருமகனை ஸமரிக்கலாம்படியிருக்கும் நம்பெருமாளைக்கண்டால்" என்றும் பட்டர் அருளிச்செய்வர்

கண்டகண்கள் அநாதிகாலம் இழந்த இழவு தீரக் காணப்பெற்ற கண்கள் பனிரும்பு திருமாலோ கண்டநுபவிக்கப்பெற்ற பரிதியாலே ஆநந்தாச்ரு பரவஹியாநின்றது அநுபவஜநித ஹர்ஷமடியாக வந்ததாகையாலே அதிசீதளமாய,வ ஒத்தப பறுழலேச்சும்படியிருக்குமென்கை விரஹமடியாக வந்ததாகிலிறே உஷ்ணமாயிருப்பது (உ) "ஆஹ்லாத ஶீத நேத்ராம்பு:" என்னக்கடவதிறே என்செய்கேன் பாவியேனே கண்ணநீர் அருவிகள்போலே மறைக்கையாலே, "என்செய்கேன" என்கிறார். பெறுதற்கரிய விஷயத்தைக்கண்டநுபவிக்கப்பெற்றிருக்க இதுக்கு இடைச்சுவருண்டாவதே! என்செய்கேன் பாவியேன என்கிறார் "அதோ" என்றது—விஷாதாதிசயஸூசகம் அத்தலையில வைலக்ஷண்யத்தைப்பளவுபடுத்தவொண்ணுது, அநுபவஜநிதஹர்ஷத்தை அளவுபடுத்தப்போகிறதில்லை, என்செய்கேன் பாவியேனென்கிறார் கண்ணநீர் ஊற்றுமாறுகைபடி வெள்ளமாய்ச்செல்லுகையாலே இத்தைமாற்றியொருக்கால்கண்டதாய விடப்போகிறதில்லை, இவ்விஷயத்தை அநாதிகாலம் பாபத்தாலே அநுபவிக்கப்பெற்றிலேன, இன்று கண்ணநீர்மறைக்க அநுபவிக்கப்பெற்றிலேன், என் கார்யம் வெள்ளக்கேடும் வறட்கேடுமாய்த்தென்கிறார அங்கனன்றியே, இப்போது இழவுண்டாய் "பாவியேன" என்கிறாரல்லர், பாட்டுக்கேட்டுக்கொண்டுப பாவியேனென்பாரைப்போலே பாவியேனென்கிறாரென்றும் சொல்லுவார்கள்

அ பத்தொன்பதாம்பாட்டு குடதிசை சக்ஷுராத்யவயவங்களுக்குப் பிறகிட்டவிக்ரஹத்தையன்பிக்கிற, ததாச்ரயமாய் அவயவியான சரீரந்தான் சட்டமியா நின்றதென்கிறார்.

(க) "ஸதைகரூபரூபாய" (உ) "ஆஹ்லாத ஶீத நேத்ராம்பு:"

மூ — குடதிசை முடியைவைத்துக் குணதிசைபாதம் நீட்டி
வடதிசை பின்புகாட்டித் தென்றிசை யிலங்கைநோக்கிக்
கடல்நிறக் கடவுளெந்தை யரவணைத் துயிலுமாகண்டு
உடலெனக் குருகுமாலோ வென்செய்கே னுலகத்தீரே ௧௯

ப-ரை — கடல் நிறம் — கடலோடொத்த நிறத்தையுடைய, கடவுள் — ஸர்வேச்வரனும், எந்தை — என்னை யெழுதிக்கொண்டவன், குடதிசை — மேலைத்திக்கிலே, முடியை — உபயவிபூதிக்குமாகச் சூடின திருவபிஷேகத்தை யுடைத்தான திருமுடியை, வைத்து — வைத்தருளி, குணதிசை — கிழக்குத்திக்கிலே, பாதம் — சேதநர் வாழுகைக்கு இழியும் துறையான திருவடிகளை, நீட்டி — எல்லளவும் வர நீட்டி, வடதிசை — ஸம்ஸ்க்ருதமானான வடதிசையிலுள்ளார்க்கு, பின்பு — பின்னழகை, காட்டி — காட்டியருளி, (ஸ்ரீவிபீஷணாழ்வானுக்காக,) தென் திசை — தெற்குத்திக்கிலுள்ள, இலங்கை — லங்கையை, நோக்கி — கடாக்ஷித்துக்கொண்டு, அரவு அணை — திருவனந்தாழ்வானாகிற திருவணையிலே, துயிலும் ஆ கண்டு — கண்வளர்ந்தருளுகிற படியைக்கண்டு எனக்கு — என்னுடைய, உடல் — சரீரமானது, உருகும் — உருகாநின்றது; உலகத்தீரே — லோகத்திலுள்ளவர்களே, என் செய்கேன் — என்ன செய்யப்புகுகிறேன் (ஆல், ஓ - அசை)

வியா குடதிசை இத்யாதி இவரையுருக்கின பரிகரந்தானிருக்கிறபடி. பூமியை ஸர்ஷ்டித்தது புண்யபாப மிச்ரங்களாயும் பாபப்ரசுரங்களாயும் மநுஷ்யதிர்யக் ஸ்தாவரங்களாயு மிருந்துள்ள பதார்த்தங்கள் வர்த்திக்கைக்காகவென்றும், ஆகாசத்தை ஸர்ஷ்டித்தது புண்யயோநிகளான தேவதைகள் வர்த்திக்கைக்காக என்றும் நினைத்திருப்பார்; நடுவில் திக்குக்களுக்கு ஒரு விநியோகமில்லை, இது வ்யர்த்த ஸ்ர்ஷ்டியோ என்றிருப்பார்; இப்போது அங்ஙனன்று, இதுவும் ஸப்ரயோஜநமென்னுமிடமுங்கண்டார்;—சேதநஸ்ர்ஷ்டி முமுக்ஷுவிஸர்ஜ்ஜநார்த்தமானாப்போலேயும், சேதநர் வர்த்திக்கைக்கு லோகஸ்ர்ஷ்டியானாப்போலேயும் திக்குக்களை ஸ்ர்ஷ்டித்ததும் சேதநர்க்கு ருசிஜநகமான வ்யாபாரார்த்தமாகக் கண்டதாகாதே! என்றிருக்கிறார் குடதிசைமுடியைவைத்து மேலைத்திக்கு ஸப்ரயோஜநமாம்படி உபயவிபூதிக்குமாகச் சூடின திருவபிஷேகத்தை யுடைத்தான திருமுடியைவைத்து "முடியானே" என்கிறபடியே சேஷத்வத்தை யநுஸந்தித்து அதிகாக வாழும்படியிறே திருமுடியைவைத்தது குணதிசைபாதம்நீட்டி "மூவுலகும் தொழுதேத்துஞ் சீரடியான்" என்கிறபடியே - ஸகலலோகங்களும் வாழுகைக்கு இழியும் துறையான திருவடிகளை, கிழக்குத்திக்குவாழும்படியாக நீட்டி. "நீட்டி" என்றது - எல்லளவும்வர நீட்டின திருவடிகள் என்கை துர்யோதநஸ்தானம இங்ஙனே வாழ்ந்து போனால் ஆஜ்ஞநனிருப்பு வாழச் சொல்லவேண்டாவிறே. "ஆழ்வார்தாம் திருவடித்தொழ எழுந்தருளினால் 'துர்யோதநஸ்தாநம்' என்று திருமுடிப் பக்கத்தில் ஒருப்ரதேசத்தில் ஒருநாளுமெழுந்தருளியிருந்தறியார், திருவாசலுக்குக்கிழக்கு எழுந்தருளியிராத ப்ரதேசமில்லை" என்று பட்டரருளிச்செய்வர்

வடதிசைபின்புகாட்டி வடக்குத்திக்கு ஆர்யபூமியாகையாலே † ஸம்ஸ்க்ருதமானாய்; ஆழ்வார்களீச்ச சொல்லும் நடையாடாத தேசமாகையாலே அத்திக்கைத்திருத்

† "ஸம்ஸ்க்ருதமாந்ருதாய்" என்றும் காண்கிறது.

தாம் போதும் பின்னாழ்கெல்லாம் வேணும் என இருந்தார் (௧) "ம.வயூராஜ்யி காலாராஜ்ஞஸுஹஜ்" என்னக்கடவதிறே தென்திசை இலங்கைநோக்கி இதுக்கு முன்புத்தை இருக்குக்களைக் கடாக்ஷித்தது அவ்வோ தேசங்களின் வெறுமை தீருகைக்காக, இது தம் குறைதீருகைக்காக அவை க்ருபாகார்யம் இது தன்செல்லாமையாலே யாயத்து "அன்பொடு தென்திசைநோக்கிப் பள்ளிகொள்ளும்" என்னக்கடவதிறே ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு வனவியமறுத்து ராஜ்யத்தைக்கொடுத்து அவன் ஸம்ருத்தியைப் பார்த்துக்கொண்டு கண்வளர்ந்தருளுகிறபடியாயத்து மாதா பிள்ளைகளுக்குமுலைகொடுத்து அவர்களின் புஷ்டி காண்கைக்குப் பாங்காகச்சாயுமாப்போலே. "செல்வவிபீடணற்கு வேறாக நல்லானை" என்னக்கடவதிறே "விபீஷணனை புருஷனாகில நாலும் என்பரிகாரமும் விடைகொள்ளுகிறதென்" என்று மஹாராஜர் சொல்ல; "அனதீன்ற கன்றின்பக்கல் வாத்ஸல்யத்தாலே முன்னணீனக்கன்றைக் கொம்பிலும் குளம்பிலும் கொள்ளும் ஸுரபியைப்போலே, ஸபரிகரரான உம்மை விடவேண்டிலுமாம் விபீஷணனை விடோம்" என்றாரிறே; அந்தமஹாராஜர்தமக்கு ஒருநலிவுவரப் புகுகவொண்ணாதே, (௨) "கிம்கார்யம் ஸீதயாமம" என்றாரிறே.

கடல்நிறக்கடவுள். நித்யஸூரிகளுக்கு நித்யாநுபாவ்யமான வடிவையுடைய பரதேவதையிடே! ஒருஸம்ஸாரியைக்குறித்து ஸாபேக்ஷமாய்க் கிடக்கிறது கடல்போலே கண்டார்க்கு ச்ரமஹரமாயாயத்து வடிவிருப்பது கடல்வண்ணத்துச்சுப் போலியாமித்தனை போக்கி அப்ராக்ருத வஸ்துவுக்கு உபமானமாகமாட்டாதிறே எந்தை அவ்வடிவைக் காட்டியென்னை யெழுதிக்கொண்டவன் பழுகின்று கண்வளருகிறதென், ப்ரக்ருதிவசத்தனாய்த் தாழ்வுக்கெல்லையான என்னளவும் வரவன்றோ வெள்ளங்கோத்தது. "நீசனேன் நிறையொன்றுமிலேன் என்கண் பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே" என்னக்கடவதிறே அரவணைத்துயிலுமாகண்டு விலக்ஷணமான ரத்னத்தை விலக்ஷணமான தட்டிலே அழுத்தினாப்போலே, திருவனந்தாழ்வான் மேலே சாய்ந்தபின்பாயித்து இவ்வஸ்து மஹார்க்கமாய்த்து

உடலெனக்குருகுமாலோ. திருவனந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிறபடியைக் கண்டு சேதநன் உருகுகையன்றிக்கே ஜடமான சரீரமுருகாநின்றது (௩) "ஸமஸ்தரூபதிரோதாநகரீம்" என்கிறபடியே - திரோதாயகமான சரீரம் கட்டழியாநின்றது (௪) "தேஹோ ப்ராஹ்வா ஸோபி" என்கிறபடியே ஜ்ஞாநஸங்கோசகமான சரீரம், அநுபவஜநிதஹர்ஷத்தாலே அழிகிறதிறே கூட்டுப்புக்க ஸம்ஸாரிகள் எங்களுக்கு உடலுருகக் காண்கிறிலோமென்ன, எனக்குருதமாவோ 'ஆரேலா' என்று ஆழ்வாறு பெருக்கிலே அருகு கரைகளுடைந்தால் நோக்குகிறவர்கள் கைவிட்டுக் கடக்க நின்று கூப்பிடுமாப்போலே கூப்பிடுகிறார் என்செய்கேன்! உலகத்தீரே பெரியபெருமாளழகைக் கண்டுவைத்தாக குறைப்பிபாதே புறப்படுகிற ஸம்ஸாரிகளைப் பார்த்து, உங்களைப்போலே தரித்திருக்கைக்கு ஒருவிரகுசொல்லவல்லீர்களோ! என்கிறார் தம்மோடு ஸஜாதீயராயிருக்கிற ஆழ்வார்களைக் கேட்கில் ஓட்டைப்போடத்தோடே ஒழுகலோடமாமித்தனையிறே "எனசெப

(௧) "பூர்வாஸாதஜிகா பாரங்ககலஹம்" (௨) "கிமகார்யம் ஸீதயாமம"
(௩) "பகவத்ஸ்வரூபதிரோதாநகரீம்" (௪) "தேஹேபாகாத்வாஸோபி"

சேன பெருமானே ” என்று அவர் தம்மைக் கேட்கில் தம்மெளிமை அறிவித்ததாய, அத நாலே எதிர்த்தலே அழிந்ததாகாதே என்று அவர் மேனாணித்திருக்கக்காணுமராய்த்து பலம். இவ்விஷயத்தைக் கண்டுவைத்துச் சுழியழியாதே யிருக்கிற ஸம்ஸாரிகளைப் பார்த்து § உங்களாருகுவாராத பரிஹாரத்திலே யெனக்கும் ஒருசிறுங்கை யிடவல்லீகோளே யென்கிறார். . . . ... . ... கக.

அ இருபதாம்பாட்டு பாயுசீர். இவ்விஷயத்தில் பராவண்யத்தைத் தவிர்த்து உங்களைப்போலே தேஹயாத்ரா பரராய் வர்த்திக்கவே தரிக்கலாமென்ன, கண்வளர்ந்தருளுகிற அழகைக் கண்டுவைத்து “ இஸ்ஸமாதிபடங்க எங்களுக்கு ” என்னும்படியான ஸ்வரூபஜ்ஞாநமுடைய எங்களுக்கு, (க) ‘ அஹம்மம ” என்கிற உங்களைப்போலே அகலவிரகுண்டோ வென்கிறார்

மூ —பாயுசீ ரரங்கநதன்னுள் பாம்பணைப் பள்ளிகொண்ட
மாயனார் திருநன்மார்வும் மரகதவுருவுந் தோளும்
தூயதாமரைக் கண்களுந் துவரிதழ்ப் பவளவாயும்
ஆயசீர் முடியுந்தேசு மடியரோர்க் ககலலாமே உ0

ப-ரை — பாயும்—பாயாநின்றுள்ள, சீர்—காவேரியாலே சூழப்பட்ட, அரங்கம் தன்னுள்—கோயிலிலே, பாம்பு அணை—திருவநந்தாழ்வானமேலே, பள்ளிகொண்ட—கண்வளர்ந்தருளுகிற, மாயனார்—ஆச்சர்யசக்தியுக்தனுடைய, திரு—பிராட்டியாலே, நல—விலக்ஷணமான, மார்வும்—திருமார்வும், மரகதம்—மரகதகாந்தத்தை யொத்த, உருவும்—திருவடிவும், தோளும்—திருத்தோள்களும், தூய—பரிசுத்தமான, தாமரை—தாமரைமலரை யொத்த, கண்களும்—திருக்கண்களும், துவர்—சிவந்த, இதழ்—திருவதரமும், பவளம்—பவளம்போன்ற, வாயும்—திருவாயும், ஆய—பண்டேயாய, சீர்—சீர்மையை யுடைத்தான, முடியும்—திருவபிஷேகமும், தேசும்—ஸமுதாயசோபையும், (கண்டால்,) அடியரோர்க்கு, ஸ்வரூபஜ்ஞாநமுடைய எமக்கு, அகலலாமே—அகலப்போமோ.

வ்யா பாயுசீரரங்கம் அடைத்தேற்ற வேண்டாதபடி நீருக்குப் †பள்ளநாலியான கோயில். இது உபலக்ஷணம்' பாவநமாயும் பரஸங்கமாயு முள்ள பதார்த்தங்களுக்குப் பள்ளமடையாயிறே கோயிலிருப்பது (உ) [‘ ரமணீயம்வ்யூஹ ஸந்தாஸ்ய ஸந்நக்ஷ்யமேநாயயா”] நீருக்குஸாக்ஷிகர் ஙிகர்ஷமாயிறே இருப்பது தன்னுள் பாம்பணை அந்நீருறுத்தாமைக்குப் படுத்தபடுக்கையாயதறுத் திருவநந்தாழ்வான “ வெள்ளைவெள்ளத்தின்மேலொருபாம்பை மெத்தையாகவிரித்து ” என்னச்கடவதிறே பள்ளிகொண்டமாயனார் கண்வளர்ந்தருளும் போதையழகு ஆச்சர்யமாயாய்த்திருப்பது (௩) “ ஸயோரவொயிகஸ்ரீ ஶாஹஸாவஸஸாஷ்வஃ வஹுவஃ ” என்னக்கடவதிறே நிற்றல் இருத்தல் செய்தாராகிலும் அகலலாங்கிடீர். “ ஏராரகோலந்திகழக்கிடந்தாய் ” என்றும், “ ஆனையில்கிடந்த கிடக்கைகண்டிடப்பெறவிலேன ” என்றும் சொல்லக்கடவதிறே (ஆனையில்கிடக்கை—ஆனைபோலேகிடக்கை)

§“ உங்களிறுக்குவாத ” என்று அச்சிட்டபாதிகளில் காணகிறது. † பள்ளநாலி-பள்ளமடை.
(க) “ அஹம்மம ” (உ) “ ரமணீயம்பாஸநாமப்ப ஸநமதுஷ்யமேநாயதா ”
(௩) “ ஸமயாபோதிதச ஸ்ரீமாநஸாகஸாபதபோர்தபஃ ”

திருமார்பும். பிராட்டியாலே விலக்ஷணமான மார்பும் பிராட்டியுடைய செப்பகுஸினை சுவடுகளும் கழித்தமாலைகளுமாய்க் கிடக்குமாய்த்து. பிராட்டி "அகலகில்லேனிறையும்" என்று பிரியமாட்டாத வைலக்ஷண்யத்தையுடைய மார்வமென்னவுமாம். மரதகவுருவும் கண்டாகணையுளிருக்கும்படி நீர்வெள்ளத்தைத் திறந்துவிட்டாப்போலே பாய்ந்து வடிவிருப்பது. தோளும். கிழிலவைபோலே ‡ இடுசிவப்பில்லாச் சோளுரும் அவ்வெள்ளத்திலே அழுந்துகிறார்க்குத் தெப்பம்போலே யிருக்கிற திருத்தோளும்.

தூபதாமரைக்கண்களும். பிராட்டியோடே ஸஹ்ருத்பாதிகளோடு வாசியறக் குளிர நோக்குகிற திருக்கண்களும். நோக்குக்குத் தூய்மையாவது - நிர்ஹேதுகமாகக் கடாக்ஷிக்கை. (க) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்கிறபடியே — அநுகூலப்ரதிகூல விபாக ரஹிதமாய்த்து ஸௌஹார்த்தமிருப்பது. (உ) "தேவாநாம் தானவாநாஞ்ச ஸாமாந்யமதி தைவதம்" என்கிறபடியே ஸம்பந்தமொத்தாயிருப்பது. இப்படியிருக்க, சில பதார்த்தங்களுக்குக் கடாக்ஷம் அநர்த்த ஹேதுவாகிறது பாத்ரதோஷத்தாலே. ஸர்வாநுகூலமான தென்றலானது ஒரு பதார்த்தத்திலே வந்தால் தோஷகமாகாநின்றதிறே. மென்மை குளிர்த்தி நாற்றமிவற்றுக்குத் தாமரை ஒருபோலியா யித்தனைபோக்கி அகவாயில் கண்ணளிக்கு த்ருஷ்டாந்தமாகமாட்டாதே. ஆவிர்ப்பவளவாயும். சிவந்த திருவதரத்தையும் பவளம்போலேயிருந்துள்ள தந்தபங்க்தியையுமுடைய வாயும். (ங) "அவாக்யநாதர:" என்கிற காம்பீர்யம் குலைந்து, கிட்டினாரை ஸாந்த்வநம்பண்ணுகிற திருப்பவளமும், ஸ்வாபராதத்தை யநுஸந்தித்துக் கிட்டவஞ்சினவர்களுடைய அபராதங்களுக்கு நேர்த்தாவுகொடுக்க ஸ்மிதம்பண்ணும் திருப்பவளமுமெனகை.

ஆயசீர்முடியும். பண்டேயாயசீர்மையையுடைத்தான முடியும். ஸ்ரீகமாய் ஐச்வர்ய ஸூசகமான திருவபிஷேகமும். இத்தனையாலுமாக அவயவசோபை சொல்லிற்று. தேசும். இதத்தால் - ஸமுதாயசோபை சொல்லுகிறது. அடியரோர்க்ககலலாமே. இவ்வழகைக் கண்டால் ஸ்வரூபஜ்ஞானமுடையார்க்கு அகலப்போமோ. இதுக்குப்புறம்பாய் "நான், எனது" என்றிருப்பார்க்கன்றோ அகலலாவது. "ஆமே" என்றது - எதிரிகளுக்கும் அகலப்போகாதென்ன வேண்டும்படியாயிறே அர்த்தத்தின் மெய்ப்பாடிருப்பது.

அ இருபத்தோராம்பாட்டு. பணிவினால அகலப்போகாதாகில் பரிச்சேதித்தநுபவிக்கப்பார்த்தாலோ வென்கிற திருவுள்ளத்தைக் குறித்து, இவ்விஷயத்தில் துணிவில்லாமையாலே அநாதிகாலமிழந்த அறிவுகேடுபோலே யிருப்பதொன்றுகாண் இப்போது பரிச்சேதித்தநுபவிக்கலாமென்று கணிசிக்கிறவிதுவு மென்கிறார்.

மூ —பணிவினால் மனமதொன்றிப் பவளவா யரங்கனார்க்குத்
துணிவினால் வாழமாட்டாத் தொல்லைநெஞ்சே நீசொல்லாய்
அணியினார் செம்பொனாய வருவரை யனையகோயில்
மணியனார் கிடந்தவாற்றை மனத்தினால் நினைக்கலாமே  உக

‡ இடுசிவப்பு - ஆரோபிதாகாரம் என்றபடி.

(க) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" (உ) "தேவாநாம் தானவாநாஞ்ச ஸாமாந்யமதி தைவதம்" (ங) "அவாக்யநாதர:"

பவளம் — பவளம்போன்ற, வாய — திருவதரத்தையுடையனாய், அரங்கனாகிற — சோலையிலே யெழுந்தருளியிருக்கிற அழகியமணவாளன் விஷயத்திலே, மனமே — மனோவ்ருத்தியை, பணிவினால் ஒன்றி — பணிவதாகவொருப்படுத்தி, துணிவினால் — துணிவினாலே, வாழமாட்டா — வாழமாட்டாத, தொல்லை நெஞ்சே — அநாதிகாலமாக பகவத்விஷயத்தை யிழந்திருக்கிற நெஞ்சே, நீ சொல்லாய் — நீயேசொல்லிச்சாய்; அணியின் ஆர் — அழகுமிக்கிருப்பதாய், செம்பொன் ஆய — செம்பொன்னாலாகிய, அருவரை அனைய — அருமையான மஹாமேருவைப்போலே, கோயில் — திருவரங்கத்திலே, மணியனார் — நீலமணியைப்போன்ற அழகியமணவாளனை, கிடந்த ஆற்றை — கண்வளர்ந்தருளுகிற ப்ரகாரத்தை, மனத்தினால் — மனஸ்ஸினாலே, நினைக்கலாமே — பரிச்சேதித்தறியலாமோ வென்கிறார்.

வியா. பணிவினால் மனமொன்றி பணிவதாகவொருப்பட்டு; இதரவிஷயங்களில் போனாலும் இவ்விஷயத்திலே மனஸ்ஸைப் பணிவதாகவொன்றி. ஒன்றுகை — ஒருப்படுகை. இதரவிஷயங்களிலே போகிற நெஞ்சை அவற்றினின்றும் மீட்டு ப்ராப்தவிஷயத்திலே ப்ரவணமாக்குவோமென்னும் உத்யோகமாத்ரமேயாய்த்து இவ்விஷயத்துக்கு வேண்டுவது. இங்கு மனஸ்ஸென்கிறது - மனோவ்ருத்தியை. பகவத்வ்யதிரிக்த விஷயங்களில் பணிவதானாலும் இரங்குகை ப்ராப்திகம், இரக்கமுண்டானாலும் பலிப்பதில்லை. பகவத்விஷயத்தில (க) "நமேயம்" என்கிற பாஸுரத்தை க்லேமாத்ரமே யமையும்; சேதநனுடைய ஆபிமுக்யத்துக்காக ஸாஷ்டாங்கப்ரணாமங்களைப் பண்ணியபோது ஈச்வரனுக்கு விஷயீகார ஸூசகமாத்ரமே யமையும். பரனும் தன்னைப் பணிவதே அதுவன்றே பலப்ரதம், ஈச்வரனுடைய இரக்கமிறே இவன்பண்ணுகிற வ்யாபாரங்கள் அங்கு பலிப்பதொன்றின்றியேயிருக்க, அவனுடைய இரக்கத்துக்கு ஹேதுவானபடியென்னென்னில்; ஒருத்தனை பொருவன் கையாகுவது எதிரி ஸ்பர்சிப்பதொன்றின்றியே யிருக்க உள்ளதனையும் என்னைப் பரிபவித்தானென்றிருக்கைக்கு ஹேதுவாகாநின்றதிறே; இவ்வோபாதி அஞ்ஜலியும் எல்லாவற்றையும் கொடுத்து, பின்னையும் (உ) "நஜாநாதி ஹீயதே" என்னும்படி ப்ரியவிஷயமாயிறே இருப்பது (ங) "ஏகோபிக்ருஷ்ணஸ்ய ஸக்ருத் ப்ரணாம:" (ச) "அஞ்ஜலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ."

பவளவாயரங்கனுக்கு இவ்வளவானுகூல்ய முடையார் முன்புதுறையிழவர்க்கு ஸர்வஸ்வமும் திருவுள்ளத்தை யுடையவர்க்கு, அரங்கனுக்கு எப்போதோ நம்மைக்கிட்டுவதென்று நித்யஸங்கிஹிதரா யிருக்கிறவர்க்கு துணிவின்றி வாழமாட்டா வடிவழகுதான பணிவையு முண்டாக்கித் துணிவையு முண்டாக்கி, பின்னை அநுபவத்திலே மூட்டிவிடுமோபாத்ரா பவளவாயரங்கனுக்கு — பணிவினால் மனமொன்றி — துணிவினால் வாழமாட்டா இவ்விஷயத்தை அநுபவிக்கைக்கு வ்யவஸாயமேயாய்த்து வேண்டுவது (ரு) "வ்யவஸாயாத்ருதே ப்ரஹ்மந் நாஸாதயதி தத்பரம்" என்று-ப்ராப்திகரு கண்ணழிவற்ற ஸாதநம் வ்யவஸாயமென்று உபதேசித்தானாய்த்து — தன

(க) "நமேயம" (உ) "நஜாநாதுஹீயதே" (ங) "ஏகோபிக்ருஷ்ணஸ்ய ஸக்ருத் ப்ரணாம:" (ச) "அஞ்ஜலி: பரமாமுத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ." (ரு) "வ்யவஸாயாத்ருதே ப்ரஹ்மந் நாஸாதயதி தத்பரம்"

ஹேமா மித்தனைபோக்கி இவ்விஷயத்துக்கு ஸத்ருசமாக ஒரு பதார்த்தமிட்டுப் பேசிற்றில்லை கட்டவொண்ணாது பேசப்போந்ததுதானெங்ஙனேயென்னில்; (௪) "நீலத்தோயத மத்யஸ்தா வித்யுல்லேகேவ" "நீலமுண்டமின்னன்ன மேனி" (௫) "அதஸீபுஷ்பஸங்காச" (௬) "ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே" (௭) "ருக்மாபம்" "பொன்னுருவாய் மணியுருவில் பூதமைந்தாய்" இத்யாதிகளால் ப்ரமாணங்கள் அபராக்தவஸ்துவுக்கு ஸத்ருசமிடுகிறது இதுதனக்கு கொண்டிருப்பது என்னென்னில்; அநிர்த்தேச்ய விஷயத்தில் இழியும்போது ஒரு நிதர்சனத்தைக் கொண்டிறே பேசவேண்டுகையாலே சொன்னவித்தனையொழிய உள்ளபடி சொல்லிற்றாய்த் தலைக்கட்டவொண்ணாது. வேதங்கள் பேசினபடியே பேசுமதத்தனையல்லது நமக்கு பேசமுடியாது. அவை பேசினபடி யென்னென்னில்;— (௮) "அப்ராப்ய" என்று பேசினவித்தனை. அப்படியே பேசவொண்ணாது என்று பேசுமத்தனை என்றுகாவியாம் அதுக்கடியென்னென்னில்; பெருமையொன்றுணரலாகாது இன்னதுபோலேயென்று ஸதாசத்ருசார்த்தமுண்டாதல், ஏவம்பூதமென்று பரிச்சேதித்தல் செய்யவொண்ணாது இதரவிஷயங்களில் வந்தால உபமாநத்தாவும் உபமேயமயாட்டாது, இவ்விஷயத்திலே உபமேயத்தளவும் உபமாநம்வரமாட்டாது; ஸ்வரூபமென்ன, குணங்களென்ன, விக்ரஹமென்ன, விபூதியென்ன, இவற்றிலொன்றையும் பரிச்சேதிக்கவொண்ணாதென்கை ஆனால் இவ்வஸ்து ஒருவர்க்கும் அறியவொண்ணாதோ வென்னில்; ஆசறுந்தங்கட்கல்லாலறியலாவானுமல்லன் ஆசு - குற்றம்

இனி இதை விஷய விபாகம்பண்ணிக் கொள்ளும்படி தன்னை அநாதரித்து — உபாயவிஷயமாக வரும் குற்றம் அதாகிறது — பாரதந்த்ர்யத்துக்குச் சேராதவை. அஹங்கார கர்ப்பமான அசேதனக்ரியாகலாபங்களை ஸாதநமாக நினைத்திருந்தவை இத்தோபாயங்கள் பலப்ரதமாமிடத்தில் அவனுடைய அநுக்ரஹம் பார்த்திருக்கவேணும்; தான் உபாயமாமிடத்தில் ஸஹாயாந்தராபேக்ஷையில்லை; இதரோபாயங்களை விட்டுத் தன்னையே உபாயமாகப்பற்றினார்க்கல்லது தன்னை உள்ளபடி அறியலாயிருப்பானொருவனல்லன்.

மாசறுார இதுவுமொரு மாஸதோஷமாயிற்று, அதாகிறது - ப்ராப்யப்ராபகங்களிலே ப்ராப்ய புத்தியைப்பண்ணியிருக்கை அவன்றன்னைப்பற்றி ஐச்வர்யத்தை விரும்புபோகாநிற்பர்கள். அங்ஙனன்றியே அவனதன்னையே பெறவேணுமென்றிருக்கை — ஆசறுகையாவது மனத்துள்ளானை இப்படி எல்லாவற்றையும் விட்டு ஸாத்ய ஸாதநத்தில் ஹ்ருதயமாக ஒருதேசவிசேஷத்திலே நித்யானுபவம் பண்ணவேணுமென்று தன்பக்கலிலே ஸர்வபரந்யாஸம் பண்ணியிருக்குமவர்களுடைய நெஞ்சிலே நித்யவாஸம்பண்ணுமவன். இவர்கள் நெஞ்சுக்குப்புறம்பு, சாட்டுத் தியோபாதியாக வாய்த்து நினைத்திருப்பது ஜலசரபதார்த்தங்கள் ஜலத்தையொழிய தரிக்கமாட்டாதாப்போலே இவர்கள் நெஞ்சொழிந்த விடத்தில் தரிக்கமாட்டானாய்த்து திருப்பதிகளில் நித்யவாஸம் பண்ணுகிறதும் ஒருசுத்தஸ்வபாவனுடைய ஹ்ருதயத்தைக்கணிசித்திறே "என்னிலாதமுன்னெலாம்" என்னக்கடவதிறே.

---

(௪) "நீலதோயதமத்யஸ்தாவித்யுல்லேகேவ" (௫) "அதஸீபுஷ்பஸங்காசம" (௬) "ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே" (௭) "ருக்மாபம" (௮) "அப்ராப்ய"

மாயிருக்குமோ வென்னில்; வானின்மேல்சென்று சென்று. அர்ச்சிராதிமார்க்கத்தாலே போய், அபுநராவ்ருத்தி லக்ஷணமான பரமபதத்திலேசென்று. அதவா, சென்று சென்று. தேசப்ராப்தியிற் காட்டில் வழிபோக்குத்தானே இனிதாயிருக்கிறபடியைச் சொல்லிற்றாகவுமாம். தேவராயிருக்கிலாதவண்ணம் - என்கொலோ. நித்யஸூரிகளோடே ஒரு கோவையாயிராதே ஒழிகிற ஹேதுவென்னே. நித்யஸூரிகளாயிருக்கையாவது - ஸர்வதாஸத்ர்சராயிருக்கை. ஆகாகிறது — அஸங்கோசத்தாலும், ரூபத்தாலும், பேதத்தாலும், அவர்களோடு ஸமராயிருக்கை. என்கொலோ. ப்ரத்யக்ஷஸித்தமான ஸம்ஸார தோஷத்துக்குக் கண்ணழிவுண்டாயோ, சாஸ்த்ரஸித்தமான பகவத்ப்ராப்தியில நன்மைக்குக் கண்ணழிவுண்டாயோ, ஆச்ரயணீய வஸ்துவினுடைய ஸௌலப்யத்துக்குக் கண்ணழிவுண்டாயோ, ஆச்ரயணத்திலாயாஸமுண்டாயோ, வழிப்போக்கி லருமையுண்டாயோ, ப்ரக்ருதிப்ராக்ருதங்களில் ப்ராவண்ய ஹேதுவான பாபமும் பகவத்வைமுக்ய ஹேதுவான பாபமுமொழிய இப்புருஷார்த்தத்தை இழுக்கைக்கு ஒரு ஹேதுவுங் கண்டிலோமென்கை. ... ... ... ௬௬.

௮. அறுபத்தேழாம்பாட்டு. ஸம்ஸாரிகள் தங்களுக்கு ஹிதமறிந்திலர்களேயாகிலும், இதில் ருசிபிறந்தவன்று இத்தை யிழக்க வொண்ணாதென்று பார்த்து, இவர்கள் தூர்க்கதியைக்கண்டு பரோபதேச ப்ரவ்ருத்தராகிறார் - மேலேழுபாட்டாலே; இதில் முதல்பாட்டு— அர்ச்சிராதிகதியிலே போய், நிலைநின்ற புருஷார்த்தத்தை லபிக்கவேண்டியிருப்பீர்! ப்ராப்யமும் ப்ராபகமுமான பகவத்விஷயத்தை ஆச்ரயித்து உங்கள் விரோதியைப்போக்கி உஜ்ஜீவியுங்கோளென்கிறார்.

மூ.—சண்டமண்டலத்தினூடு சென்றுவீடுபெற்றுமேல்
கண்டுவீடிலாதகாத லின்பநாளுமெய்துவீர்
புண்டரீகபாதபுண்ணிய கீர்த்திநுஞ்செவிமடுத்
துண்டுநும்முறுவினைத் துயருள்நீங்கியுய்ம்மினோ. ௬௭.

ப-ரை.— சண்டமண்டலத்தினூடு சென்று—ஆதித்யமண்டலத்தின் நடுவேபோய், வீடு பெற்று—பரமபதத்தைலபித்து, மேல்—பரமப்ராப்யமாய், வீடு இலாத—ஒருநாளும் விச்சேதியாத, காதல் இன்பம் — பகவதநுபவஜநிதபக்திகாரித கைங்கர்ய ஸுகத்தை, கண்டு—ஸாக்ஷாத்கரித்து, நாளும் எய்துவீர்—யாவதாத்மபாவி லபிக்கவேண்டியிருப்பீர்; புண்டரீகம்—தாமரைமலரையொத்த, பாதம்—திருவடிகளினுடைய, புண்ணியகீர்த்தி—பாவநத்வப்ராபகத்வ பரதை(ப்ர)ஸித்தியிலே, நும் செவி-உங்கள் செவியை, மடுத்து-ஆசார்யோபதேசத்துக்கு பாத்ரமாக்கி, உண்டு—பகவத்குணங்களை யநுபவித்து, நும்—உங்களால் சூழ்த்துக் கொள்ளப்பட்ட, உறு—அநுபவித்தே கழியவேண்டும்படி பொருந்தியிருக்கின்ற, வினை—பாபபலமான, துயருள் நீங்கி—துக்கத்தினின்றும் நீங்கி, உய்மின்—உஜ்ஜீவியுங்கோள்.

வ்யா. சண்டமண்டலத்தினூடுசென்று. கடிதான ஆதித்ய மண்டலத்தின் நடுவே போய். "மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தினன்னடுவுள்" என்கிறபடியே முமுக்ஷுக்களல்லாதார்க்கு துஷ்ப்ரபமான ஆதித்யமண்டல மத்யத்திலே, ராஜபுத்ரர்கள் ராஜகுலத்தாலே அப்ரதிஹத கதிகளாய்ப் போமாப்போலே போய். வீடுபெற்று. பரமபதத்தைலபித்து. மேல்கண்டு வீடிலாத காதலின்பம் நாளுமெய்துவீர். மேல்--வீடிலாதகாதலின்பம்—கண்டு—நாளுமெய்துவீர். ப்ராப்யபலமாய், யாவதாத்மபாவி விச்சேதசங்கையின்றியே ஸ்வரூபாநுபந்தியாய், பகவதநுபவஜநிதபக்திகாரித கைங்கர்ய ஸுகத்தை ஸாக்ஷாத்கரித்து யாவ

யிருக்கை. (௧) "அக்நௌப்ராஸ்தாஹுதி꞉ ஸம்யக்" (௨) "பத்ரம்புஷ்பம் பலம்தோயம்" (௩) "த்ரைகுண்யவிஷயா வேதா꞉" என்கிறபடியே வேதங்களும் குணத்ரய வச்யரான சேதநர்க்கு குணாநுகூலமாக ஆராத்ய தேவதைகளையும், ததாராதநப்ரகாரங்களை யும், ஆராதநபலங்களையும் சொல்லிவைத்தது. இரண்டிலொன்றும் நீசர்கள். ஸ்வகுணங்க ளுக்கு அநுகூலமாயிருக்கையாலும் சாஸ்த்ராநுமதியாலும் நித்யஸத்வத்தையும் ததாராத்ய னான ஈச்வரனையும் ஆராதந பலமான மோக்ஷத்தையு மொழிந்து, ராஜஸ தாமஸபலங்களிலே ருசியைப்பண்ணும் நீசர். நீசராகிறார் — ஸம்ஸாரத்தை வர்த்திப்பித்துக்கொள்ளும் ஹேயர். மத்தராய் மயங்குகின்ற திட்டதிலிறந்துபோந்து. இட்டதில். கர்மாவஸாநத்திலே அந்தபலத்தை விட்டு. இறந்து. அவ்வவதேசங்களில் போகசரீரங்களைமுடித்து. போந்து. அந்தபோகபூமி யில்நின்றும் ஆகாச மேக ஸஸ்யாதிகளிலே கிடந்து கர்ப்பவாஸார்த்தமாகப்போநது. (௪) "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி" என்கிறபடியே பூமியிலேபிறந்து. மத்தராய். தேஹாத்மாபிமாநத்தாலே ப்ராக்ருத பதார்த்த லாபத்தாலே களித்து. மயங்குகின்றது. ஆத் மாவையாதல், ஈச்வரனையாதல் உள்ளபடி அறியாமையாலே மோஹங்கதரைப்போலே யிருக் கிறதிறே. ஸ்வர்க்காதிபலாநுபவங்களை,புண்யம் க்ஷயித்தவளவிலே மத்யேவிட்டு அந்தபோக சரீரங்களையும் முடித்து, கர்ப்பவாஸார்த்தமாக அதிக்லேசத்தோடே போந்தபடியை அநு ஸந்தியாமையாலேயிறே சேதநர்ப்ராக்ருதபோகங்களிலேகளித்துவர்த்திக்கிறதென்கை.எத்திற த்துழப்வதோருபாயமில்லை. ஆகையாலே ஸ்வபௌருஷத்தாலும் இதரதேவதைகளை ஆச்ரய ணியாகப்பற்றினாலும், ஈச்வரன்தன்னையே ஐச்வர்யார்த்தமாகப் பற்றினாலும் உஜ்ஜீவிக் கைக்கு வழியில்லை. உய்குறில். உஜ்ஜீவிக்கவேண்டி யிருந்திகோளாகில். தோத்திறுத்த தண்டு ழாய் நன்மாலை வாழ்த்தி வாழ்மினோ. ஸர்வேச்வரத்வஸூசகமாய், தொடைசெறிந்து ச்ரம ஹரமாயிருந்துள்ள திருத்துழாயாலே அலங்க்ருதனாய், ஸௌலப்யாதி கல்யாணகுணயுக்தனா யிருக்கிற ஸர்வேச்வரனை யாச்ரயித்து வாழுங்கோள். "திகழில் புகழாயுலகமூன்றுடையாய்" இத்யாதிகளைச்சொல்லிப் புகழ்ந்து, யாவதாத்மபாவி ஆநந்த நிர்ப்பரராயிருங்கோள். (௫) "ஏஷஹ்யேவாநந்தயாதி" என்னக்கடவதிறே. ... ... ௬௮.

அ. அறுபத்தொன்பதாம்பாட்டு. "எத்திறத்துமுய்வதோருபாயமில்லை" என் கிறதென், தேவதாந்தரங்களை ஆச்ரயித்தால் உஜ்ஜீவிக்கவொண்ணாமை யென்னென்ன; அந்த தேவதாந்தர ஸமாச்ரயணம் துஷ்கரம், அத்தைப்பெற்றாலும் அபிமதப்ரதாநத்தில் அவர்கள் அசக்தர்; ஆனபின்பு ஜகத்காரணபூதனை யாச்ரயித்து ஸம்ஸார துரிதத்தை அறுத் துக்கொள்ள வல்லிகோளென்கிறார்.

மூ.—காணிலுமுருப்பொலார் செவிக்கினாதகீர்த்தியார்
பேணிலும்வரந்தர மிடுக்கிலாததேவரை
ஆணமென்றடைந்துவாழு மாதர்காளெம்மாதிபால்
பேணிநும்பிறப்பெனும் பிணக்கறுக்ககிற்றிரே ௬௯.

(௧) "அக்நௌப்ராஸ்தாஹுதிஸ்ஸம்யக்" (௨) "பத்ரம்புஷ்பம் பலம்தோயம்"
(௩) "த்ரைகுண்யவிஷயாவேதா꞉" (௪) "க்ஷீணேபுண்யே மர்த்யலோகம் விசந்தி"
(௫) "ஏஷஹ்யேவாநந்தயாதி"

ப-ரை.— (முமுக்ஷுக்களுக்கு,) காணிலும்—காணக்கூடாத, உரு பொலார்—க்ரூர மான ரூபத்தையுடையவர்களாய், செவிக்கு—காதுகளுக்கு, இனாத— இனிமையைத்தாராத, கீர்த்தியார் - பித்ர்வதம்முதலிய கீர்த்தியை யுடையவர்களாய், பேணிலும் - ஆச்ரயிக்கிலும், வரம் தரா—அபிமதபலம் தருகைக்கு, மிடுக்கு இலாத—சக்தியில்லாதவர்களான, தேவரை—தேவதைகளை, ஆணம் என்று—தஞ்சமென்று, அடைந்து—ஆச்ரயித்து, வாழும்—வாழுகிற, ஆதர்காள்-குருடர்களே !, எம் ஆதிபால்-எங்களுக்குக் காரணபூதனான ஸர்வேச்வரன் பக்கலிலே, பேணி-ஆதரத்தைப் பண்ணி, நும்-உங்களுடைய, பிறப்பு எனும்-பிறப்பு என்கிற, பிணக்கு - தூற்றை, அறுக்ககிற்றிர் - அறுத்துக்கொள்ள ஸமர்த்தராகுங்கோள்.

வ்யா. காணிலுமுருப்பொலார். தாமஸதேவதைகளாகையாலே முமுக்ஷுக்களுக்கு அவர்கள் த்ரஷ்டவ்யரல்லர். (க) "ஸ்கந்தருத்ரமஹேந்த்ராத்யா: ப்ரதிஷ்டிதாஸ்துபூஜநே । அசுத்தாஸ்தே ஸமஸ்தாச்ச தேவாத்யா: கர்மயோநய:" என்னக்கடவதிறே. (உ) "ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய:" என்னுமவனல்லனிறே. இங்ஙனே யிருக்கச்செய்தே உங்கள் குணானுரூபமான ருசியாலே கண்டாலும் விரூபாக்ஷத்வாதிகளாலே வடிவு பொல்லாதாயிருப்பர்; திருவுள்ளத்தில் தண்ணளியைக்கோட்சொல்லித்தாராநின்றபுண்டரீகாக்ஷனைப்போலே வடிவு ஆகர்ஷகமாயிருக்கிறதன்றே; அவர்களுடைய ஹ்ருதயத்தில் க்ரௌர்யமே அவர்கள்வடிவிலே ப்ரகாசிப்பது. செவிக்கினாத கீர்த்தியார். த்ரஷ்டவ்யரல்லாதவோபாதி ச்ரோதவ்யருமல்லர். கேட்கவேண்டியிருந்திகோளேயாகிலும், பித்ர்வத ப்ரஸித்தியென்ன, தத்பலமான பிக்ஷாடந சாரித்ரப்ரதையென்ன, (ங) அத்வரத்வம்ஸ கதையென்ன, ச்வசுரவதகதையென்ன, இத்யாதி ச்ரவணகடுகமான கீர்த்தியையுடையரா யிருப்பர்; ம்ருதனானபுத்ரனை ஸாந்தீபிநிக்கு மீட்டுக் கொடுத்தான், புநராவ்ருத்தியில்லாத தேசத்தில்நின்றும் வைதிகன் புத்ரர்களை மீட்டுக்கொடுத்தான் என்றித்யாதிகளாலே * ஸம்ச்ரவே மதுரமான கீர்த்தியிறே. பேணிலும். ஆச்ரயணீயருமல்லர், ஆச்ரயித்தார்திறத்திலே "உன்பயலையறுத்திடு" என்றும், "ஊட்டியிலே தட்டிற்றில்லைகாண்" என்றும் சொல்லுகையாலே, உங்கள்ருசியாலே அவற்றையும் பொறுத்து ச்ரவணகடோரமான கீர்த்தியையும் வைரூப்யத்தையும் பொறுத்து ஆச்ரயித்தாலும். (ச) "பத்ரம் புஷ்பம் பலம் தோயம்" என்றும், (ரு) "ஸுஸுகம் கர்த்தும்" என்றும் ஆச்ரயணம் ஸுகரமுமாய் ஸுகரூபமுமாயிருக்கிறதன்றே. வரந்தர மிடுக்கிலாததேவரை. பரஹிம்ஸையிலேவந்தால் ஜகதுபஸம்ஹாரக்ஷமராய், அபிமதபலந்தருகைக்கு சக்தியில்லாத தேவதைகளை. ஒரு பிசாசத்துக்கு மோக்ஷத்தைக் கொடுப்பது, ஒரு பக்ஷிக்கு மோக்ஷத்தைக் கொடுப்பது, (சா) "உதாராஸ்ஸர்வ ஏவைதே" என்று—தானும், பிறரும் (எ) "ஸகல பலப்ரதோ ஹி விஷ்ணு:" என்னும் விஷயமன்றிறே. "நீதந்த நித்யத்வம் எனக்குக் கழுத்துக்கட்டியாய்த்து" என்று மார்க்கண்டேயன் அவனைவளைக்க, மோக்ஷப்ரதன்கையிலே காட்டிக்கொடுத்து நழுவும் சிலமிறே பிறாது. ஆணமென்றடைந்து. இப்படி இவர்கள் ஆச்ரயணீயருமன்றிக்கே யிருக்கச்செய்தே தங்கள் ப்ரமத்தாலே ஆச்ரயித்து. ஆணம்—அரண்.

(க) "ஸ்கந்தருத்ரமஹேந்த்ராத்யா: ப்ரதிஷ்டிதாஸ்துபூஜநே । அசுத்தாஸ்தே ஸமஸ்தாச்ச தேவாத்யா: கர்மயோநய:" (உ) "ஆத்மாவாரேத்ரஷ்டவ்ய:" (ங) [illegible] கதை. (ச) "பத்ரம்புஷ்பம் பலம்தோயம்" (ரு) "ஸுஸுகம்கர்த்தும்" (சா) "உதாராஸ்ஸர்வ ஏவைதே" (எ) "ஸகல பலப்ரதோ ஹிவிஷ்ணு:"

ளென்றுமாம். அப்போது "பந்தம்" என்று - பந்தகமென்றபடி. (க) "விநாஸாயச துஷ்க்ருதாம்" என்கிறபடியே க்ர்ஷ்ணனை, தங்களுக்கு விரோதிகளான அஸுரராக்ஷஸர்களை அழியச்செய்து குடியிருப்புத்தர வந்துபிறந்தவனென்று பாராதே, அந்த தூர்வர்க்கத்தோடே எதிரம்பு கோத்துவருகையாலே க்ர்தக்நருமாய் தூர்மாநிகளுமாயிருக்குமவர்களென்கை. ஸாயுதராய்வந்த தேவர்களென்று ஈநங்கச்சொல்லாதே, பாக்க ஆயுதங்களைப் பேசிற்று – உபகாரகனானவன் பக்கலிலே இத்தனை அபகாரத்தை நினைப்பதே! என்னும் நெஞ்செரிவாலே யருளிச்செய்கிறார். பரந்துவாஙகமுற. க்ர்ஷ்ணன் ஸந்நிதியிலே நேர்நிற்க மாட்டாதே ஒருவர்போனவழி யொருவர் போகாதே சிதறித் தங்கள் குடியிருப்பிலே புக. வந்தவாணன். தேவதைகள் ஆயுதங்களைப் பொகட்டுப்போன விடத்திலும், தனக்கு நியாமகனான ருத்ரன் $ ஜ்ர்ம்பிதனானவிடத்திலும், தன் தோள்வலியை விச்வஸித்துவந்த பாணனுடைய. ஈரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாள். ஆயிரந்தோள்களையும் கழித்தவன்று. தோள்வலியைக் கொண்டு வந்தவனுடைய தோள்வலியைக் கழித்தான், ஆயுதங்களை பலமாகக் கொண்டுவந்த தேவர்களை ஆயுதங்களைப் பொகட்டுப் பிற்காலித்துப் போம்படி பண்ணினான், ஸர்வாத்யக்ஷனாய் வந்த ருத்ரனை நிச்சேஷ்டனும்படி பண்ணினான். அந்தவந்தவாகுலம். ருத்ரன் கொன்றையும் தும்பையும் ஜடையும் குலையக்கெட்டுப்போன பாரவச்யமும், போக்கற்றவாறே கலங்கி க்ர்ஷ்ணனுடைய முகம்பெறுகைக்கு ஸ்தோத்ரம்பண்ணின பாரவச்யமும், (உ) "பாரவச்யம்ஸமாயாதச் சூலீ ஜ்ர்ம்பிததேஜஸா । பாஞ்சஜந்யஸ்யகோஷேண சார்ங்கவிஷ்பூர்ஜிதேநச" என்றும், (ங) "க்ர்ஷ்ணக்ர்ஷ்ண மஹாபாஹோ ஜாநேத்வாம் புருஷோத்தமம் । பரேசம்பரமாத்மாநமநாதிநிதநம்ஹரிம்" என்னக்கடவதிறே. அமரரேயறிவரே. ஆக இப்படி யிரண்டு வகைப்பட்ட ஆகுலத்துக்கும் கெட்டுப்போன தேவர்களேஸாக்ஷி, நான் இன்றுசொல்லவேண்டி யிருந்ததோ. ... ... ... எ௦.

அ. எழுபத்தோராம்பாட்டு. பாணனை ரக்ஷிக்கக்கடவேனென்று ப்ரதிஜ்ஞைபண்ணி ஸபரிகரனாய்க்கொண்டு ரக்ஷணத்திலே உத்யோகித்து, எதிர்த்தலையிலே அவனைக்காட்டிக் கொடுத்துத் தப்பிப்போனபடியாலும், "ஒருவன் ஆச்ரிதனுக்குதவினபடியென்" என்று லஜ்ஜித்து க்ர்ஷ்ணன் க்ர்பைபண்ணி அவன் ஸத்தையை நோக்கினபடியாலும், அவன் ரக்ஷகனல்லனென்னுமிடமும் க்ர்ஷ்ணனே ரக்ஷகனென்னுமிடமும் ப்ரத்யக்ஷமன்றே, இவ்வர்த்தம் ஒருவர் சொல்லவேண்டி யிருந்ததோ வென்கிறார்.

மூ.—வண்டலோவுகோதைமாதர் காரணத்தினல்வெகுண்
டிண்டவாணனீரைஞ்ஞூறு தோளகளைத்துணித்தநாள்
முண்டனீறன்மக்கள்வெப்பு மோடியங்கியோடிடக்
கண்டநோணிவாணனுக் கிரங்கினனெம்மாயனே. எக.

ப—ரை.— (சித்ரலேகையைக்கொண்டு அநிருத்தாழ்வானை வரவழைத்தவளாய்,) வண்டு உலாவு—வண்டுகள் மாறாத, கோதை—மாலையாலே அலங்க்ர்தையாய், மாதர் காரணத்தினல்—தன்பெண்ணான உஷைநிமித்தமாக, (எதிர்த்தலை ஸர்வேச்வரனென்று பாரா

(க) "விநாசாயச துஷ்க்ர்தாம்" $ ஜ்ர்ம்பி தன் - மூவிந்துபோனவன்.

(உ) "பாரவச்யம்ஸமாயாதச் சூலீ ஜ்ர்ம்பிததேஜஸா - பாஞ்சஜந்யஸ்யகோஷேண சார்ங்கவிஷ்பூர்ஜிதேநச" (ங) "க்ர்ஷ்ணக்ர்ஷ்ணமஹாபாஹோ ஜாநேத்வாம் புருஷோத்தமம் - பரேசம்பரமாத்மாநமநாதிநிதநம்ஹரிம்"

[illegible]—[illegible]ருத்தனும், இண்ட—மேல்விழுந்த, வாணன்—பாணாஸுரனுடைய, [illegible] தோள்களை—ஆயிரம் தோள்களையும், துணித்த நாள்—சேதித்தவன்று; [illegible]—[illegible]னும், நீறன்—பஸ்மதரித்த சரீரத்தையுடையனான ருத்ரனும், (தேவ[illegible]) மக்கள்—பிள்ளையான ஸுப்ரஹ்மண்யன்முதலிய புத்ரர்களும், வெப்பு—[illegible]ாரியும், அங்கி—நாற்பத்தொன்பது அக்நிக்கும் நிர்வாஹகனான அக்நியும், [illegible]ராய் [illegible]முதுகுகாட்டி போடக்கண்டு, எம் ஆயன்-என்னுடையனான க்ர்ஷ்ணன், நாணி—தாம் [illegible] யாகாதே சீறிற்றென்று லஜ்ஜித்து, வாணனுக்கு—பாணாஸுர[illegible]இரங்கி இரண்டுதோளைக் கொடுத்து ரக்ஷித்தருளினானென்கிறார்.

[illegible]. வண்டுலாவு கோதைமாதர் காரணத்தினால். வண்டுமாறாத மாலையாலே அல[illegible]யான உஷையின்நிமித்தமாக. ஸ்வப்நத்ருஷ்டனான அநிருத்தனை சித்ரலேகை கொண்டு [illegible]ன்று அவள்வரவுபார்த்துச் செவ்விப்பூவாலே ஒப்பித்திருந்தபடியைச் சொல்[illegible]. வெகுண்டிண்டவாணன். எதிர்த்தலை ஸர்வேச்வரனென்று பாராதே யுத்தக்ருத[illegible] பாணன். வெகுளி - கோபம். இண்டல் - நெருங்குதல். (க) "வித[illegible]" என்று - ரத்நஸ்பர்சங்களைவிட்டுப் பற்றவேண்டும் விஷயத்திலே [illegible]மாகப் பகைக்கிறவிறே துஷ்ப்ரக்ருதியாகையாலே. காந்தர்வபக்ஷத்தாலே [illegible] பிறந்தபின்பு க்ர்ஷ்ணனோடே ஸம்பந்தியாய்க்கொண்டு ப்ரீதனாக ப்ராப்தமாயி[illegible], தன் [illegible]லத்தாலே வந்த துர்மாநத்தாலே சீறி அந்தரப்பட்டானென்கை. ஈரை[illegible] தோள்களைத் துணித்தநாள். இவன் எதிரிடுகைக்குஹேது பாஹுபலமாகையாலே [illegible]த்தைச் சேதித்தவன்று. முண்டன் நீறன் மக்கள் வெப்புமோடி யங்கியோடிடக் கண்டு [illegible]. "ரக்ஷிக்கிறேன்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணினவன் செய்ததென்னென்[illegible]; பாணனை க்ர்ஷ்ணன்கையிலே காட்டிக்கொடுத்து ப்ரதானனான தன்னோடுபரிகரத்தோடு [illegible] முதுகுகாட்டியோடின வித்தனை. முண்டன்நீறன். முண்டிதனாய் பஸ்மச்சந்நசரீர[illegible]ான ருத்ரன். இத்தால் - க்ர்ஷ்ணனைக்குறித்துத் தன்னபிமத ஸித்தியைக்குறித்து, ஸாதக[illegible] அவன் தன்னளவும்பாராதே எதிர்த்தலையைப்பாராதே ஸாதகவேஷத்தோடே துர்[illegible] கொண்டாடினபடி. தேவஸேநாபதியான ஸுப்ரஹ்மண்யன் முதலான புத்ரர்கள், [illegible]ரம், மோடி - பிடாரி, நாற்பத்தொன்பதக்நிக்கும் கூடஸ்தனான அக்நி இவர்களோடு, [illegible] வாசிபற முதுகிட்டுப் போகக்கண்டு லஜ்ஜித்து. மோடி - காளிகளென்றுமாம். [illegible]க்கையாவது - புத்ரோத்முகனாய்த் தான்படுதல், எதிர்த்தலையை ஜயித்தல் செய்ய ப்ரா[illegible]மாயிருக்க, முதுகிடுகையாலே தாம்போராத இவற்றின்மேலே யாகாதே நாம் சீறிற்றெ[illegible] லஜ்ஜிக்கை. (உ) "[illegible]ணாநுவர்தந்ஜ்யாரக்ஷிதவ்யஃ" என்கிறபடியே - ஆச்[illegible]னை ப்ராணவதியாக ரக்ஷிக்க ப்ராப்தமாயிருக்க, ஒருவன் ஆச்ரிதனுக்கு உதவினபடி[illegible]! என்று லஜ்ஜித்தென்னவுமாம். வாணனுக்கிரங்கினானெம்மாயனே. இப்படிப்பட்ட [illegible]த் தனக்குத் தஞ்சமாக நினைத்திருக்கையாலே தயநீயனான பாணனுக்கு ஆபத்தே [illegible]வாக க்ருபைபண்ணி இரண்டுதோள்களைக்கொடுத்து ரக்ஷித்தான் என்னுடையனான க்ர்ஷ்[illegible]. இத்தால் - தேவதாந்தரங்கள் ரக்ஷகராலும் ஆபத்துக்கு உதவார்கள்; ஈச்வ[illegible] தசையிலும் ஆபத்ஸகனென்றதாய்த்து, (௩) "[illegible]."

(க) "பிதாம்மாதாம்தாராந்" (உ) "அரிப்ராணாந்பரித்யஜ்யரக்ஷிதவ்யஃ"
(௩) "[illegible]பர்யபாலயத்"

அ. எழுபத்திரண்டாம்பாட்டு. ருத்ரன் லோகத்திலே மோக்ஷப்ரதனென்று ஆச்ர யிப்பாரும் ஆகமாதிகளிலே பரத்வத்தை ப்ரதிபாதித்துமன்றோ போருகிறதென்னில்; நிர்த் தோஷச்ருதியில் அவனை க்ஷேத்ரஜ்ஞனாகச் சொல்லுகையாலே லோகப்ரஸித்தி வடயக்ஷப்ர ஸித்திபோலே அயதார்த்தம், ஆகமாதிகள் விப்ரலம்பகவாக்யவத் அயதார்த்தமென்கிறார்.

மூ.—போதின்மங்கைபூதலக் கிழத்திதேவியன்றியும்
போதுதங்குநான்முகன் மகனவன்மகன்சொலில்
மாதுதங்குகூறனேற னூர்தியென்றுவேதநூல்
ஓதுகின்றதுண்மையல்ல தில்லைமற்றுரைக்கிலே. எஉ.

ப-ரை.— போதில் மங்கை-தாமரைமலரில் திருவவதரித்த பெரியபிராட்டியாரும், பூதலம் கிழத்தி— ஸ்ரீபூமிப்பிராட்டியும், தேவி—மஹிஷிகள்; அன்றியும்-அதுக்குமேலே, போது தங்கு நான்முகன்—கமலாஸநனானப்ரஹ்மா, மகன்—புத்ரன்; அவன்—அந்தப்ரஹ் மாவினுடைய, மகன் சொலில்—மகன்பேரைச்சொல்லப்புகில், மாது—பார்வதியை, தங்கு கூறன்-இடது பக்கத்திலேயுடையருத்ரன்; ஏறு அது—ரிஷபமானது, ஊர்தி-அவனுக்கு வாஹநம்; என்று—ஸ்ரீபூமீஸஹிதன் ப்ரஹ்மாவுக்கு உத்பாதகன் ப்ரம்ஹோத்பந்நன் ருத்ர னென்று, வேதம் நூல்—வேதமாகிற சாஸ்த்ரம், ஓதுகின்றது—சொல்லுகிற அர்த்தமே, உண்மை—ஸத்யம்; மற்று—அதுக்குப் புறம்பாக, உரைக்கில்—ஓரர்த்தம் சொல்லில், அல் லது இல்லை—அது அஸத்யமல்லதுவேறன்று.

வ்யா. போதில்மங்கைபூதலக்கிழத்திதேவி. தாமரையிலேபிறப்பையுடைய பிராட்டி யும், ஸ்ரீபூமிப்பிராட்டியும் மஹிஷிகள். (க) "[illegible]" என்றும் (உ) "[illegible]" என்றும் சொல்லக்கடவதிறே. அன்றியும். ஸ்ரியப்பதி த்வமேபோரும் ஸர்வாதிகன் ஸர்வ ஸமாச்ரயணீய னென்கைக்கு, ஸ்ரியப்பதித்வத்துக்கு மேலில்லையிறே. அன்றியும்-அதுக்குமேலே. போதுதங்கு நான்முகன்மகன். திருநாபிகமலத் திலே பிறக்கையாலே கமலாஸநன சதுர்முகன் புத்ரன். (ங) "[illegible]" என்னக்கடவதிறே. அவன்மகன் சொலில் மாதுதங்குகூறனேறனூர்தி. (ச) "[illegible]" என்கிற பரசம்ஸாவாக்யங்களையும் ஆகமாதிதந்த் ரங்களையுமொழிய அவன் ஸ்வரூபத்தையுள்ளபடியே (ரு) "[illegible]" இத்யாதி நிர்த்தோஷ ச்ருதிப்ரக்ரியையாலே சொல்லப்பார்க்கில், அவன் ப்ரஹ்ம புத்ரன். "மாதுதங்குகூறன்" என்கிறது - ப்ரஹ்மாவினுடைய மாநஸஸ்ர்ஷ்டியொழிய யோ ஷித்புருஷ ஸம்யோகத்தாலே பிறக்கும் ஸ்ர்ஷ்டிக்கு ப்ரதமகன்யனென்று இவனுடைய க்ஷேத்ரஜ்ஞத்வம் தோற்றுகைக்காக. (சு) "[illegible] । [illegible] । [illegible]" என்று ப்ரஹ்மாவினுடைய ஸ்ர்ஷ்டிப்ரகரணத்திலே சொல்லக்கட

(க) "ஹ்ரீச்சதேலக்ஷ்மீச்சபத்ந்யௌ" (உ) "பத்மேஸ்திதாம் பத்மவர்ணாம்" (ங) "அஜஸ்யநாபாவத்யேகமர்ப்பிதம் யஸ்மிந்நிதம் விச்வம்புவநமதிச்ரிதம் ஸப்ரஜாபதிரேகஃ புஷ்கரபர்ணேஸமபவத்" (ச) "ஏகஏவருத்ரஃ ஸர்வோஹ்யேஷருத்ரஃ" (ரு) "ப்ரஹ் மணஃபுத்ராய ஜ்யேஷ்டாய" (சு) "ப்ருகுடீகுடிலாதஸ்யலலாடாத்க்ரோததீபிதாத் । ஸமுத் பந்நஸ்ததாருத்ரோ மத்யாஹ்நார்க்கஸமப்ரபஃ । அர்த்தநாரீநரவபுஃ ப்ரசண்டோதிசரீரவாந்"

வதிறே. "ஏறதூர்தி" என்று – வேதமயனுன பெரியதிருவடிக் கெதிராக ரிஷபத்தை வாஹனமாகக்கொண்டிருக்கிற தூர்மாநம் தோற்றுகைக்காக. என்று வேதநூலோதுகின்ற துண்மை. ஸ்ரீ பூமிஸஹிதன் ப்ரஹ்மாவுக்கு உத்பாதகன், ப்ரஹ்மோத்பந்நன் ருத்ரனென்று வேதாக்யசாஸ்த்ரமோதுகிற அர்த்தமே ஸத்யம். அல்லதில்லை மற்றுரைக்கிலே. அதுக்குப் புறம்பாக ஓரர்த்தம்சொல்லில் அது அஸத்யம். ஸுபர்ணவைகுண்டஸம்வாதே- (க) "யத்ர ஸ்ரஷ்டா வை புமாந் யத்ர ப்ரஹ்மா வ்யஜாயத। ப்ரஹ்மணஸ்சாபி ஸம்பூத ஸிவ இத்யவதார்யதாம்। ஸிவாத்ஸ்கந்த ஸம்பூத ஏதத்ஸ்ருஷ்டி சதுஷ்டயம்" இத்யாதி. ... எஉ.

அ. எழுபத்துமூன்றாம்பாட்டு. ஸ்ரீயப்பதியே ஆச்ரயணீயன், ப்ரஹ்மருத்ரர்கள் க்ஷேத்ரஜ்ஞராகையாலே அநாச்ரயணீயரென்றதாய் நின்றது – கீழ்; இதில் அந்த ஸ்ரீயப்பதி தான் தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காக மநுஷ்ய ஸஜாதீயனாய்த் தன்னைத்தாழவிட்டுக் கொண்டு நின்றநிலையிலே ப்ரஹ்மருத்ரர்களுடைய அதிகாரத்திலே நின்றார்க்கு மோக்ஷப்ரத னென்றுகொண்டு தேவதாந்தரங்களுக்கும் ஸர்வேச்வரனுக்குமுண்டான நெடுவாசியை அருளிச்செய்கிறார்.

மூ.—மரம்போதச்சரந்துரந்து வாலிவீழமுன்னோர்நாள்
உரம்போதச்சரந்துரந்த வும்பராளியெம்பிரான்
வரங்குறிப்பில்வைத்தவர்க் கலாதுவானமாளிலும்
நிரம்புநீடுபோகமெத் திறத்தும்யார்க்குமில்லையே. எங.

ப-ரை.— (மஹாராஜருக்கு நம்பிக்கையுண்டாக்குகைக்காக,) மரம் - மராமரங்கள், போத—மறுபாடுருவும்படி, சரம் துரந்து—திருச்சரங்களை யேவி, முன் ஓர் நாள்—முன் பொரு த்ரேதாயுகத்திலே, வாலி—வாலியானவன், வீழ—தரையிலே விழும்படி, உரம்— அவனுடைய மார்வு, போத - மறுபாடுருவும்படி, சரம் துரந்து - அம்புவிட்டருளினவனாய், உம்பராளி–நித்யஸூரிகளை அடிமைகொள்ளுமவனாய், எம்பிரான்—அச்செயலாலே என்னை யெழுதிக்கொண்டவன்; (இப்படிப்பட்ட தசரதாத்மஜனுடைய,) வரம் - ச்ரேஷ்டமான, குறிப்பில் வைத்தவர்க்கு அலாது — திருவுள்ளத்தாலே விஷயீகரிக்கப்பட்டவர்களுக்கல்லது, (ஜ்ஞாநாதிகனான சதுர்முகனாய்,) வானம் ஆளிலும் - ப்ரஹ்மலோகத்தை நிர்வஹிக்கப்பெற்றாலும், நிரம்பு—குறைவற்று, நீடு போகம்—நித்யமானமோக்ஷம், எத்திறத்தும்— கர்மாத்யுபாயங்களை அநுஷ்டித்தாலும், யார்க்கும் இல்லை - அநந்யப்ரயோஜநர்க்கும் ஸித்தியாது.

வ்யா. மரம்போதச்சரந்துரந்து. மஹாராஜருடைய விச்வாஸார்த்தமாக மராமரங்களை மறுபாடுருவத்திருச்சரத்தையேவி. இத்தால்–தன்னுடைய ரக்ஷணத்திலே அதிசங்கைபண்ணினார்க்கும் அவ்வதிசங்கையைத்தீர்த்துத் தன்பக்கலிலே விச்வாஸத்தைப்பிறப்பித்து ரக்ஷிக்கும் சீலவானென்கை. வாலிவீழ முன்னோர்நாள் உரம்போதச் சரந்துரந்த. ராவணனை வாலிலே கட்டிக்கொண்டுதிரியும் பெருமிடுக்கனான வாலியை, முன்போன சதுர்யுகங்களில் ஒரு த்ரேதாயுகத்திலே இவன் தரைப்படும்படியாக மராமரங்களிலும் திண்ணிய அவன்மார்வு

(உ) "யத்தத்பத்மமபூத்பூர்வம் யத்ர ப்ரஹ்மா வ்யஜாயத। ப்ரஹ்மணச்சாபி ஸம்பூதச் சிவ இத்யவதார்யதாம்। சிவாத்ஸ்கந்தஸ்ஸம்பபூவ ஏதத்ஸ்ருஷ்டி சதுஷ்டயம்"

மறுபாடுருவும்படி அம்மைவிட்டு. அதிகாரிகளுமாய் நிவர்த்தவிரோதருமா யிருக்குமவர்களுக்கு ஸ்வாநுபவரூபமான அபிமதத்தைக் கொடுக்கையேயன்றிக்கே, தத்விரோதியான அவித்யாதி ப்ரபல விரோதிகளையும்போக்கி அதுக்கடியான அதிகாரத்தையும் கொடுக்கும் சீலவானென்கைக்கு உதாஹரணமிதுவென்கை. "வரந்தரமிடுக்கிலாததேவர்" என்று அபிமத ப்ரதாநத்திலும் அசக்தரெனறதிறே ப்ரஹ்மாதிகளை. உம்பராளி. நித்யஸூரிகளை அடிமை கொள்ளுகிறவன்கிடீர் தாழ்ந்தார்க்கு இப்படி உபகரிக்கிறானென்கை. ரக்ஷணத்திலே அதிசங்கை பண்ணினவனுடைய அதிசங்கையைத் தீர்த்து அவன் விரோதியைப்போக்கின அந்த சீலமறியவுரியார் நித்யஸூரிகளிறே. எம்பிரான். அச்செயலாலே என்னை யெழுதிக்கொண்டவன். அதவா, "உம்பராளியெம்பிரான்" என்று - அச்செயலாலே ப்ரயோஜநாந்தர பரரான தேவாகளையும், அநந்ய ப்ரயோஜநரான அஸ்மதாதிகளையுமொக்க எழுதிக்கொண்டவனென்றுமாம். "உரம்பொருதசரக்துரந்த - எம்பிரான்" என்று — முன்புமஹாராஜர்க்கு உதவினதும் தமக்கு உதவிற்றாக நினைத்திருக்கிறார். வரங்குறிப்பில் வைத்தவர்க்கலாது. இப்படிப்பட்ட தசரதாத்மஜனுடைய ச்ரேஷ்டமான திருவுள்ளத்தாலே விஷயீகரிக்கப்பட்டவர்களுக் கல்லது. ச்ரேஷ்டமாகையாவது—பரஸம்ருத்த்யேக ப்ரயோஜநமா யிருக்கை. வானமாளிலும். ஜ்ஞாநாதிகராய் சதுர்த்தசபுவநங்களுக்கும் நிர்வாஹகரான ப்ரஹ்மாதிகளாயிருந்தாலும். நிரம்பு நீடுபோகம். குறைவற்று நித்யமான போகம். அதாவது-பரமபக்தி கார்யமாய் பரிபூர்ணமாய் விசததமமான நித்யாநுபவம். எத்திறத்தும் யார்க்கு மில்லையே. அநந்யப்ரயோஜநர்க்குமில்லை. கர்மாத்யுபாயங்களை அநுஷ்டிக்கவுமாம், ஸித்தோபாய பரிக்ரஹம் பண்ணவுமாம், அவன் ப்ரஸாதமொழிய மோக்ஷஸித்தியில்லை. ஜ்ஞாநாதிகராய் அநந்ய ப்ரயோஜநராகவுமாம்; அகிஞ்சநராய் அநந்யப்ரயோஜந ராகவுமாம்; அவன் ப்ரஸாதமே மோக்ஷஸாதநமென்கை. விரோதிநிரஸந சீலனான தசரதாத்மஜன் ப்ரஸந்நரானார்க்கல்லது ப்ரஹ்மருத்ராதிகளுடைய அதிகாரத்திலே நின்றார்க்கும் நித்யமானமோக்ஷத்தை ப்ராபிக்க விரகில்லையென்றதாய்த்து. ... ... ... ... ... எசு.

அ. எழுபத்துநான்காம்பாட்டு. ஆச்ரயணீயனுடைய ப்ரஸாதமே மோக்ஷஸாதநமாகில், முமுக்ஷுவான இவ்வதிகாரிக்கு ப்ரஸாதகமான கர்த்தவ்யமேதென்னில்; ஸ்ரீவாமநனுடைய திருவடிகளிலே தலைசாய்த்தல், க்ஷீராப்திநாதனுடைய சீலத்துக்கு வாசகமான திருநாமத்தை வாயாலே சொல்லுதல் செய்யவே, புருஷார்த்த ஸித்தியுண்டென்கிறார்.

மூ.—அறிந்தறிந்துவாமன னடியிணைவணங்கினால்
செறிந்தெழுந்தஞானமோடு செல்வமுஞ்சிறந்திடும்
மறிந்தெழுந்ததெண்டிரையுண் மன்னுமாலைவாழ்த்தினால்
பறிந்தெழுந்துதீவினைகள் பற்றறுதல்பான்மையே. எச.

ப-ரை — வாமனன்—வாமநாவதாரம் செய்தருளினவனுடைய, அடி இணை—திருவடிகளை, (சாஸ்த்ர ச்ரவணத்தாலும் ஆசார்யோபதேசத்தாலும்,) அறிந்து அறிந்து—அவனேப்ராப்யமும் ப்ராபகமுமென்று அத்யவஸித்து, வணங்கினால்—ஆச்ரயித்தால், செறிந்து எழுந்த ஞானமோடு— "ஸர்வேச்வரனுக்கே அநந்யார்ஹசேஷம் இவ்வாத்மா" என்கிற ஜ்ஞாநத்தோடே, செல்வமும்—கைங்கர்யோபகரணமான பக்தியும், சிறந்திடும்—குறைவறவுண்டாம்; மறிந்து—பரம்பி, எழுந்து—கிளர்ந்து, தெள்—தெளிந்த, திரையுள்—அலைகளையுடைய க்ஷீராப்தியிலே, மன்னு—நித்யவாஸம் பண்ணுகிற, மாலை—ஆச்ரிதவத்ஸலனு

டைய வாத்ஸல்யவாசியான திருநாமத்தை, வாழ்த்தினல்—வாயாலே சொன்னல், தீ வினை கள்—பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்களான பாபங்கள், பறிந்து—இத்தைவிட்டுப் பறிந்து, எழுந்து—மேலேகிளர்ந்து, பற்று அறுதல்—வாஸனையோடே போம்படி பண்ணுகை, பான்மையே—ஸ்வபாவமேயாகு மென்கிறர்.

வ்யா. அறிந்தறிந்து வாமனனடியிணை வணங்கினல். தன்னுடைமையை லபிக்கைக்குத் தான் அர்த்தியாய்வந்தவன் திருவடிகளை, "ப்ராப்யமும் ப்ராபகமு மதுவே" என்று அத்யவஸித்து, அத்திருவடிகளிலே ந்யஸ்தபாரனுனல். "வாமனனடியிணை" என்று—வரையாதே யெல்லார் தலையிலும் திருவடிகளை வைக்கையாலே ஸர்வஸுலபனானவன் திருவடிகளென்றுமாம். "அறிந்தறிந்து" என்றது—சாஸ்த்ரச்ரவணத்தாலும், ஆசார்யோபதேசத்தாலு மென்றுமாம். இது "அன்று பாரளந்த பாதபோதையொன்றி" என்று கீழ்ச் சொன்னதினுடைய விவரணம். செறிந்தெழுந்தஞானமோடு செல்வமும் சிறந்திடும். ப்ரத்யக்ஷஸமானாகாரமாய் ஸாக்ஷாத்காரபர்யந்தமான ஸர்வேச்வரனுக்கே அநந்யார்ஹசேஷபூதன் இவ்வாத்மாவென்கிற ஜ்ஞாநமும், அதடியாக கைங்கர்யோபகரணமான பக்தியும் குறைவறவுண்டாம். சிறப்பு—மிகுதி. அதுகைங்கர்யத்துக்கும் விரோதிநிவ்ருத்திக்கு முபலக்ஷணம். நிர்த்தோஷனுக்கிறே கைங்கர்யோபகரணமான பக்தியுண்டாவது. ப்ரீதிகாரிதமிறே கைங்கர்யம். "தனமாயதானே கைகூடும்" என்று வைஷ்ணவனுக்கு ஐச்வர்யம் பக்தியாகையாலே, அந்த பக்தியை இங்கு "செல்வம்" என்கிறது. மறிந்தெழுந்து தெண்டிரையுள் மன்னுமாலைவாழ்த்தினல். பாம்பிக்கிளர்ந்து தெளிந்ததிரைகளையுடைய க்ஷீராப்தியிலே நித்யவாஸம்பண்ணுகிற ஆச்ரிதவத்ஸலனுடைய வாத்ஸல்யவாசியான திருநாமத்தைவாயாலே சொன்னல். மறிதல் - விரிதல். பறிந்தெழுந்து தீவினைகள் பற்றறுதல். பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்களாய் ஸ்வாச்ரயத்திலே வேர்விழுந்தவை அவற்றை விட்டுப்பறிந்துபோய் மறுவலிடாதபடி வாஸனையோடேபோம்படி பண்ணுகை. பான்மையே. அவன் ஓரேற்றம் செய்தானாகவன்றிக்கே ப்ரக்ருதியாயிருக்கை. இதுவும் (க) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்கிறபடியே கைங்கர்யத்துக்கும் உபலக்ஷணம். ... ... ... ... ... எச.

அ. எழுபத்தைந்தாம்பாட்டு. இப்படி அவனை ஆச்ரயித்து அவனுடைய கடாக்ஷத்தாலே ப்ரதிபந்தகநிரஸந பூர்வகமாக அவனைப் பெறுகையொழிய உபாயாந்தரங்களிலே யிழிந்து ஆச்ரயிப்பாருடைய அருமையை யருளிச்செய்கிறர் - மேலேழுபாட்டாலே; இதில் முதற்பாட்டில் - கர்மயோகமே தொடங்கி பரமபக்தி பர்யந்தமாக ஸாதிக்கு மவர்களுடைய துஷ்கரதையை அருளிச்செய்கிறர்.

மூ.—ஒன்றிநின்றுநற்றவஞ்செய் தூழியூழிதோறெலாம்
நின்றுநின்றவன்குணங்க ளுள்ளியுள்ளந்தூயராய்ச்
சென்றுசென்றுதேவதேவ ரும்பரும்பரும்பராய்
அன்றியெங்கள்செங்கண்மாலை யாவர்காணவல்லரே. எரு.

ப-ரை.—(விஷயாந்தரங்களினின்றும்மீட்டமநஸ்ஸோடேகூட,)ஒன்றிநின்று—பொருந்திநின்று, நல் தவம் செய்து—யஜ்ஞ தாந தபஸ் கர்மங்களாகிற நல்லதபஸ்ஸுகளைப் பண்ணி, ஊழி ஊழி தோறு எலாம்—ப்ரளயகாலங்களிலெல்லாம், நின்றுநின்றவன்—க்ரமத்

(க) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"

தாலே பரமபாவநனை ஸர்வேச்வரனுடைய, குணங்கள்—குணங்களை, உள்ளி—அநுஸந்தித்து, உள்ளம் தூயர் ஆய்-பரிசுத்தாந்தக்கரணராய், சென்று சென்று-அநவரதபாவனையளவும் சென்று, தேவதேவர்—நித்யஸூரிகளளவிலேசெல்ல, உம்பர் உம்பர் உம்பர் ஆய் அன்றி—ஸோபாநக்ரமத்தாலே பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திரூபத்தாலே உத்கர்ஷராய்ப் பெறுவதொழிய, எங்கள் செங்கண்மாலை—எங்களுடைய புண்டரீகாக்ஷனை, யாவர் காண வல்லர்—காணவல்லாரார்.

வ்யா. ஒன்றிநின்று. (க) "[illegible]" என்கிறபடியே விஷயாந்தரங்களிலே மண்டி அவற்றில் நின்றும் மீட்க அரிதான நெஞ்சை பகவத் விஷயத்தில் உத்தேச்ய புத்தியாலே மீட்ட, அம்மநஸ்ஸோடே பகவத்விஷயத்திலே ஒன்றிநின்று. நல்தவம் செய்து. தபஸ்ஸென்று - (உ) "[illegible]" என்றும், (ந) "[illegible]" என்றும்சொல்லுகிற கர்மங்களுக்கும் உபலக்ஷணம். "நற்றவம்" என்று - ஜீவபரயாதாத்ம்யஞ்ஞாந பூர்வகமாகவும் த்ரிவிதபரித்யாக பூர்வகமாகவு மநுஷ்டிக்கும் கர்மயோகத்தைச் சொல்லுகிறது. ஊழியூழி தோறெலாம். புதுப்புடைவையிலழுக்குக் கழற்றுமாப்போலே அந்தகர்மத்தாலே விரோதி பாபம் போமிடத்தில் (ச) "[illegible]" இத்யாதிப்படியே காலதைர்க்க்யத்தைச் சொல்லுகிறது. நின்றுநின்றவன் குணங்களுள்ளி. க்ரமத்தாலே பரமபாவநனாயிருந்துள்ளவனுடைய குணங்களையநுஸந்தித்து. இத்தால் - விவேகவிமோகாதி ஸாதநஸப்தகங்களி லப்யாஸத்தைச் சொல்லுகிறது. க்ரமத்தாலே அநவரத பாவனையும் சொல்லுகிறது. உள்ளம் தூயராய். உத்தமான கர்மயோகத்தாலும் பகவத்குணப்யாஸத்தாலும், (ரு) "[illegible]" (சு) "[illegible]" என்றும் சொல்லுகிறபடியே பரிசுத்தாந்தக்கரணராய். சென்று சென்று. (எ)"[illegible]" என்றும் (அ) "[illegible]" என்றும் சொல்லுகிறபடியே க்ரமத்தாலே அநவரதபாவனை யளவும் சென்று. தேவதேவரும்பரும்பரும்பராயன்றி. ஸூரிகளளவிலேசெல்ல ஸோபாநக்ரமத்தாலே பரபக்திபரஜ்ஞாந பரமபக்திரூபத்தாலே உத்கர்ஷராய்ப் பெறுவதொழிய. எங்கள் செங்கண்மாலை. சரணாகதவத்ஸலனை புண்டரீகாக்ஷனை. "எங்கள்" என்று — மற்றுள்ள ஆழ்வார்களையுங் கூட்டிக்கொள்ளுகிறாரென்னுதல். தம்மையேபற்றிவர்த்திக்கும் சரணாகத ஸமூஹத்தைக்கூட்டிக் கொள்ளுகிறாரென்னுதல். "செங்கண்மால்" என்றது— (கூ) "[illegible]" என்கிறபடியே ருசியேதொடங்கி பரமபக்திபர்யந்தமாக அத்தலையில் விசேஷ கடாக்ஷத்தாலே ஸித்தியென்று தோற்றுகைக்காக. யாவர்காணவல்லரே. நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே எங்களுக்கு அவன்காட்ட நாங்கள் கண்டாப்போலே. யாவர்காணவல்லார். "உம்பரும்பரும்பராய் - மேலேமேலே போயல்லது, தேவதேவர் - எங்கள் செங்கண்மால்" என்று கூட்டுவது. ... ... ... எடு.

---

(க) "சஞ்சலம்ஹிமநக்ருஷ்ண" (உ) "யஜ்ஞதாநேநதபஸாநாசகேந" (ந) "யஜ்ஞோதாநம்தபக் கர்மநத்யாஜ்யம் கார்யமேவதத்" (ச) "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" (ரு) "மநஸாதுவிசுத்தேந" (சு) "மநஸாக்ராஹ்ய" (எ) "த்ருவாநுஸ்ம்ருதி" (அ) "நிதித்யாஸிதவ்ய" (கூ) "ஜிதந்தே புண்டரீகாக்ஷ"

அ. எழுபத்தாறும்பாட்டு. த்ரவ்யார்ஜநாதிக்லேசமென்ன, பரஹிம்ஸாதி துரிதமென்ன, இவற்றையுடைத்தாய், இந்த்ரிய வ்யாபாரரூபமான கர்மயோகத்தில் காட்டில் இந்த்ரியோபரதிரூபமான ஜ்ஞாநயோகத்திலே ப்ரதமத்திலே இழியுமவர்களுடைய துஷ்கரதையை அருளிச்செய்கிறார்.

மூ.—புன்புலவழியடைத் தரக்கிலச்சினைசெய்து
நன்புலவழிதிறந்து ஞானநற்சுடர்கொளீஇ
என்பிலேள்கிநெஞ்சுருகி யுள்கனிந்தெழுந்ததோர்
அன்பிலன்றியாழியானை யாவர்காணவல்லரே. எசு.

ப-ரை.— புல் - க்ஷுத்ரவிஷயங்களைப்பற்றிப்போருகிற, புலம் வழி - இந்த்ரிய மார்க்கத்தை, அடைத்து - நிரோதித்து, அரக்கு இலச்சினைசெய்து - அரக்கு முத்திரையிட்டு, நல் - விலக்ஷணவிஷயத்தில், புலம் வழி - இந்த்ரிய மார்க்கத்தை, திறந்து - ப்ரகாசிப்பித்து, நல் - நன்றான, ஞானம் சுடர் — ஜ்ஞாநப்ரபையை, கொளீஇ — மிகவுண்டாக்கி, என்பில எள்கி — எலும்பிலே கட்டுப்படி சரீரம் சிதிலமாய், நெஞ்சு உருகி — மநஸ்தத்வம் த்ரவீபூதமாய், உள் கனிந்து - உள்ளே பக்வமாய், எழுந்தது ஓர் - பக்திரூபேண ஆவிர்பூதமானதொரு, அன்பில் அன்றி — ப்ரேமத்தாலல்லது, ஆழியானை — திருவாழியைத்திருக்கையிலே யுடையனான ஸர்வேச்வரனை, யாவர் காண வல்லர் — காணவல்லாரார்.

வ்யா. புன்புலவழியடைத்து. க்ஷுத்ரவிஷயங்களைப் பற்றிப் போருகிற இந்த்ரிய மார்க்கத்தை நிரோதித்து. விஷயங்களுக்குப் புல்லிமையாவது - அல்பமாய் அஸ்திரமாய் அபோக்யமாயிருக்கையும், வகுத்தவிஷயத்திலே வைமுக்யத்தைப் பண்ணுகையும். தத்விஷயமான இந்த்ரியபதத்தை நிரோதிக்கையாவது - விஷயங்களிலே சாபலத்தைப் பண்ணி செதுகளையும் தன்வழியிலே ஆகர்ஷிக்கும் இந்த்ரியங்களை ப்ரத்யாஹாரத்தாலே மீட்கை. அரக்கிலச்சினைசெய்து. சப்தாதிவிஷயங்களினுடைய க்ஷுத்ரதையை அநுஸந்தித்து வாஸனையும் அநுவர்த்தியாதபடி பண்ணி. (௧) "[illegible]" என்று ஜ்ஞாநாதிகர்களையும் வாஸனை நலியுமிறே; அதுவும்பிறவாதபடி பண்ணி. நன்புலவழிதிறந்து. விலக்ஷணவிஷயத்தில் இந்த்ரியமார்க்கத்தை ப்ரகாசிப்பித்து. இவ்வாத்மாவுக்கு போக்யமாய் (௨) "[illegible]" என்கிறபடியே ஸாதநமேயன்றியே தொடங்கியிருக்கும் பகவத்விஷயமே இந்த்ரியங்களுக்கு விஷயமாகவேண்கை. ஞானநற்சுடர்கொளீஇ. நன்றான ஜ்ஞாநப்ரபையை மிகவுமுண்டாக்கி ஈச்வரனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை ஜ்ஞாநத்துக்கு விஷயமாம்படி பண்ணி. என்பிலேள்கி. எலும்பிலே கட்ட சரீரம் சிதிலமாய் [illegible] கல் - இறங்கல். நெஞ்சுருகி. மநஸ்தத்வம்த்ரவீபூதமாய். கீழ்ச்சொன்ன ஜ்ஞாநம் பாகத்தபலவத்தாம்படி வாஸனைபண்ணி. உள்கனிந்தெழுந்ததோ ரன்பிலன்றி. உள்ளே பக்வமாய், பரபக்திரூபேண ஆவிர்பூதமான ப்ரேமத்தாலேயல்லது பெறவிரகில்லை. ஆழியானையாவர் காணவல்லரே. "எங்கள்செங்கண்மால்" என்று - கீழ்ச்சொன்ன ஸ்தாநத்திலே "ஆழியானை" என்கிறார். "கைகழலாநேமியான் நம்மேல் வினைகடிவான்" என்னும்படியே விஷயாந்தரப்ராவண்ய ஹேதுவான பாபத்தையும் பகவத்வைமுக்ய ஹேதுவாயிருக்கிற பாபத்தையும் கையில் திருவாழியாலே இருதுண்டமாக வெட்டி, கையும் திரு

(௧) "[illegible]". (௨) "[illegible]"

வாழியும் சேர்ந்த சேர்த்தியைக்காட்டி ஸ்வவிஷயமான பக்தியை வர்த்திப்பித்தவனை நான் கண்டாப்போலே யாவர்காணவல்லார். இந்த்ரியங்களுக்கு விஷயாந்தர ப்ராவண்யத்தைத் தவிர்த்து, பகவத்விஷயமே விஷயமாக்கி, தத்விஷயஜ்ஞாநம் பக்திரூபாபந்நஜ்ஞாநமாய். அதுபரபக்த்யாதிகளாய்ப் பழுத்தாலல்லது ஸர்வேச்வரனை லபிக்கவிரகில்லையாய்த்து. எசு.

அ. எழுபத்தேழாம்பாட்டு. கர்மஜ்ஞாநங்களை ஸஹகாரமாகக்கொண்டு ப்ரவ்ருத்தமான பக்தியாலே பகவல்லாபத்தைச்சொல்லிற்று-கீழ்; ஸர்வாந்தர்யாமியாய் ஜகத்காரணபூதனான ஸர்வேச்வரனை அஷ்டாங்க ப்ரணாமபூர்வகத் திருமந்த்ரத்தைக்கொண்டு பஜிக்குமவர்கள்ளிட்டவழக்கு பரமபதமென்கிறார். இப்பாட்டுமுதலாக இதிஹாஸபுராணப்ரக்ரியையாலே பகவத்பஜநத்தை அருளிச்செய்கிறார்.

மூ.—எட்டுமெட்டுமெட்டுமா யொரேழுமேழுமேழுமாய்
எட்டுமூன்றுமொன்றுமாகி நின்றவாதிதேவனை
எட்டினாயபேதமோ டிறைஞ்சிநின்றவன்பெயர்
எட்டெழுத்துமோதுவார்கள் வல்லர்வானமாளவே. எஎ.

ப-ரை.— எட்டும் எட்டும் எட்டும் ஆய் - இருபத்துநாலு தத்வங்களுக்கும் அந்தராத்மாவாய் நின்று ஸத்தையை நோக்குமவனாய், ஒரு—அத்விதீயமான, ஏழும்—ஸப்தத்வீபங்களுக்கும், ( அவற்றுக்காதாரமான, ) ஏழும்—ஸப்தகுலபர்வதங்களுக்கும், ( அந்த த்வீபங்களுக்கு அவச்சேதகங்களான, ) ஏழும ஆய்—ஸப்தஸமுத்ரங்களுமாய், எட்டும் மூன்றும் ஒன்றும் ஆகி நின்ற—த்வாதசாதித்யர்களுக்கும் அந்தராத்மாவாய் நின்ற, ஆதிதேவனை—ஸர்வஸமாச்ரயணீயனானவனை, எட்டின் ஆய பேதமோடு இறைஞ்சி— அஷ்டாங்கப்ரணாமத்தைப் பண்ணி,நின்று—அவ்வழியாலே ஆச்ரயித்து நின்று, அவன் பெயர் எட்டு எழுத்தும்—அவன் திருநாமமான திருவஷ்டாக்ஷரத்தை, ஓதுவார்கள் — வாயாலே உச்சரிக்குமவர்கள், வானம் ஆள வல்லர்-பரமபதத்தைத் தாங்களிட்டவழக்காம்படி நிர்வஹிக்க ஸமர்த்தராவர்கள்.

வ்யா. எட்டுமெட்டுமெட்டுமாய். சதுர்விம்சதி தத்வங்களுக்கு மாத்மாவாய் நின்று ஸத்தையை நோக்குமவன். இந்த ஸாமாநாதிகரண்யம் சரீராத்ம பாவத்தாலே சொல்லுகிறது. இத்தால்—அண்டகாரணமான ப்ராக்ருதஸ்ருஷ்டியைச்சொல்லுகிறது. ஒரேழுமேழுமேழுமாய். ஸப்தத்வீபங்களும், அவற்றுக்கு தாரகமானஸப்தகுலபர்வதங்களும், அந்தத்வீபங்களுக்கு அவச்சேதகங்களான ஸப்தஸமுத்ரங்களுமாய். அண்டாந்தர்வர்த்திகளான ஸகல லோகங்களுக்கு முபலக்ஷணம். ஸ்தலசராரும் ஜலசராரும் பார்வதேயருமான சேதநரை நினைக்கிறது. எட்டுமூன்று மொன்றுமாகிநின்ற. த்வாதசாதித்யர்களுக்கும் அந்தராத்மாவாய் நின்ற. இது-ஆராத்ய தேவதைகளுக்கு முபலக்ஷணம்.(க)"அக்நௌப்ராஸ்தாஹுதி:ஸம்யக்." ஆதிதேவனை. ஸூக்ஷ்ம சிதசித்வஸ்துசரீரனாயும் ஸ்தூலசிதசித்வஸ்து சரீரனாயும் கார்ய காரண மிரண்டுமாய்க்கொண்டு ஸர்வஸமாச்ரயணீயனானவனை. எட்டினாயபேதமோடிறைஞ்சி நின்று. அஷ்டாங்க ப்ரணாமத்தைப்பண்ணி அம்முகத்தாலே ஆச்ரயித்து நின்று. ப்ரணாமத்துக்கு அஷ்டாங்கதையாவது - பக்நாபிமாநனாய் விழுகையும், மநோபுத்திகளுக்கு ஈச்வரனை

(க) " அக்நௌப்ராஸ்தாஹுதிஸ்ஸம்யக். "

[illegible]யாகையும், பதத்வயகாத்வயங்களும் கூர்மவத்பூமியிலே பொருந்துகையும். (க) "[illegible] | [illegible]" என்னக்கடவதிறே. அவன்பேய ரெட்டெழுத்து மோதுவார்கள். கீழ்ச்சொன்ன [illegible]தார்த்மபாவத்துக்கு வாசகமான மந்த்ராந்தரங்களிற்காட்டில் திருவஷ்டாக்ஷரத்தை வாயாலே உச்சரிக்குமவர்கள். வல்லர்வானமாளவே. அர்த்தத்தை மநஸ்ஸாலே அநுஸந்தித்தும், வாயாலே சப்தத்தை உச்சரித்தும், சாரீரமான ப்ரணாமத்தைப்பண்ணியும், இப்படி மநோவாக்காயங்களினாலே பஜிக்குமவர்கள் இட்டவழக்கு பரமபதமென்கை. (உ) "[illegible]" என்றும், (ங) "[illegible]" என்றும்—ஜகத்காரணவஸ்துவை நாராயணனென்னக்கடவதிறே. ... ... ... எஎ.

அ. எழுபத்தெட்டாம்பாட்டு. உபாஸநத்துக்கு சுபாச்ரயம் வேண்டாவோ வென்ன; கார்யரூபமான ஜகத்திலே ஆச்ரிதார்த்தமாக வந்து கண்வளர்ந்தருளுகிற க்ஷீராப்திநாதனை சுபாச்ரயமாகப்பற்றி மந்த்ர ரஹஸ்யத்தாலே முறையறிந்து ஆச்ரயித்து இடைவிடாத ப்ரேமயுக்தயுடையராயிருக்குமவர்கள் பரமபதத்தையாளுகை நிச்சிதமென்கிறார்.

மூ.—சோர்விலாதகாதலால் தொடக்கறுமனத்தராய்
நீரராவணைக்கிடந்த நின்மலனலங்கழல்
ஆர்வமோடிறைஞ்சிநின் றவன்பெயரெட்டெழுத்தும்
வாரமாகவோதுவார்கள் வல்லர்வானமாளவே. எஅ,

ப-ரை.— சோர்வு இலாத-விஷயாந்தரங்களால் அபஹ்ருதமாகாத, காதலால்—ஆசையாலே, (பகவத் ஸம்ருத்திமாறாதே செல்லுகையாலே,) தொடக்கறு—விச்சேதமில்லாத, மனத்தர் ஆய்—மநஸ்ஸையுடையராய், நீர்—க்ஷீராப்தியிலே, அரவு அணை—திருவநந்தாழ்வான்மேலே, கிடந்த-கண்வளர்ந்தருளுமவனாய், நின்மலன்-ஹேயப்ரத்யநீகனுடைய, நலம் கழல்—ருசிஜநகமான திருவடிகளை, ஆர்வமோடு—ப்ரேமயுக்தனாய்க்கொண்டு, இறைஞ்சி நின்று—ஆச்ரயித்து நின்று, அவன் பெயர்—அவன் திருநாமமான, எட்டு எழுத்தும்—திருவஷ்டாக்ஷரத்தையும், வாரம் ஆக ஓதுவார்கள்-அன்பினாலே சொல்லுமவர்கள், வானம் [illegible]வல்லர்—பரமபதத்துக்கு நிர்வாஹகராகைக்கு ஸமர்த்தராவரென்கிறார்.

வ்யா. சோர்விலாதகாதலால். ஸர்வகாலமும் விஷயாந்தரங்களால் அபஹ்ருதமாகாத ப்ரேமத்தை யுடையராகையாலே. அதாவது - ப்ரேமாதிசயத்தாலே தத்ஸம்ச்லேஷ விச்லேஷைகஸுகதுக்கராகை. தொடக்கறுமனத்தராய். பகவத்ஸம்ருத்தி ஸந்ததிரூபேண செல்லாநின்றால் விச்சேதமில்லாத நெஞ்சையுடையராய். (ச) "[illegible]" (ரு) "[illegible]" என்கிறவளவைச் சொல்லுகிறது. நீரராவணைக்கிடந்த நின்மலனலங்கழல். இப்படி ப்ரேமத்தை விளைக்கும் விலக்ஷணவிஷயமான சுபாச்ரயத்தைச் சொல்லுகிறது. நீரராவணைக்கிடந்த. க்ஷீராப்தியிலே திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்

(க) "மநோபுத்த்யபிமாநேந ஸஹந்யஸ்ய தராதலே | கூர்மவச்சதுர: பாதாந் சிரஸ்த்ரைவபஞ்சமம்" (உ) "ஆபோநாரா இதிப்ரோக்தா:" (ங) "நாராஜ்ஜாதாநிதத்வாநி" (ச) "ஸத்வசுத்தௌ த்ருவாஸ்ம்ருதி:" (ரு) "ஸ்ம்ருதிலம்பே ஸர்வக்ரந்தீநாம் விப்ரமோக்ஷ:"

தருளுகிற. இத்தால் – நீருமத்தாமைக்கு அதின்மேலே திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையனுகையாலே ஸௌகுமார்யமும், ஆச்ரித ஸம்ச்லேஷைக ஸ்வபாவதவமும், அர்த்தித்வநிரபேக்ஷமாக ஆச்ரிதாநுக்ரஹத்தாலே கண்வளர்ந்தருளுகையாலே ஸௌலப்யாதிகளையும் சொல்லுகிறது. நின்மலன் நலங்கழல். பஜநவிரோதிபாபங்களைப் போக்கும் ஹேயப்ரத்யநீகனுடைய ருசிஜநகமான திருவடிகளை. ஆர்வமோடிறைஞ்சிநின்று. ப்ரேமயுக்தராய்க்கொண்டு ஆசரயித்துநின்று. இத்தால்—(க) "நாஸ்த்யக்ருத: க்ருதேந" என்கிறபடியே ஸம்ஸாரம் அநித்யம், ஈச்வரன் நித்யன் என்று ஆச்ரயிக்குமளவன்றியே, நிரதிசயபோக்யனென்கிறப்ரேமத்தாலே ஆச்ரயிக்கை. அவன்பெய ரெட்டெழுத்தும். க்ஷீராப்திநாதன் திருநாமமான திருவஷ்டாக்ஷரத்தையும். (உ) "வஷ நாராயண ஸ்ரீமாந்" என்றும், "நாராயணனே நமக்கே பறைதருவான்" என்றும், (ங) "ஸா நாராயணோ தேவ:" என்றும்–தர்மிபுக்கவிடமெங்கும் இத்திருநாமம் ப்ரதமாபிதாநமாயிருக்குமென்கை. வாரமாக ஓதுவார்கள் வல்லர் வானமாளவே. (ச) "நமோ நாராயணாயேதி மந்த்ர: ஸர்வார்த்தஸாதக:" என்கிறபடியே தந்நிஷ்டராய்க்கொண்டு சொல்லுமவர்கள், பரமபதத்துக்கு நிர்வாஹகராக வல்லரென்கிறார். நீராரவணைக்கிடந்த நின்மலன் நலங்கழல் ஆர்வமோடிறைஞ்சிநின்று— சோர்விலாத காதலால் தொடக்கறாமனத்தராய் — அவன் பெயரெட்டெழுத்தும் வாரமாக ஓதுவார்கள் வல்லர்வானமாளவே" என்றந்வயம். ... ... ... எஅ.

அ. எழுபத்தொன்பதாம்பாட்டு. ச்வேதத்வீப வாஸிகளையொழிந்த ஸம்ஸாரிகளுக்கு அதுநிலமோவென்ன; அவதாரகந்த(கூ)மான க்ஷீராப்தியில்நின்றும் தன்மேன்மைபாராதே தசரதாத்மஜபாவத்தைப் பண்ணி ஸுலபனானவன் திருவடிகளிலே அவதாரரஹஸ்யஜ்ஞாநமடியான பக்தியையுடையவர்களுக்கல்லது முக்தராக விரகுண்டோ வென்கிறார்.

மூ.—பத்திநேறுபெத்துமா யோரேழிநேறுடோரொன்பதாய்
பத்திநுன்றிசைக்கணின்ற நாடுபெற்றநன்மையாய்
பத்திநுயதோற்றமோ டோராற்றன்மிக்கவாதிபால்
பத்தராமவர்க்கலாது முத்திமுற்றலாகுமே. எகூ.

ப–ரை.— பத்திநேறு—பத்து திக்குக்களுக்கும், (அத்திக்குக்களிலே வஸிக்கிற,) பத்தும் ஆய்—தசாத்யக்ஷருக்கும் நிர்வாஹகனாய், ஒரு—அத்விதீயமான, ஏழிநேறு—ஸப்தஸ்வரத்துக்கும், ஒன்பது ஆய்—நாட்யரஸமொன்பதுக்கும் நிர்வாஹகனாய், பத்து நான்கு திசைக்கண் நின்றநாடு—பதினான்கு வகைப்பட்ட லோகங்களுக்கு, பெற்ற–ப்ரயோஜநமான, நன்மை—ஸப்தாதிவிஷயங்களெல்லாம், ஆய்–தான் ஆகைக்காக, பத்திநுய தோற்றமோடு—தசாவதாரஞ்செய்தருளி, (ஸம்ஸாரிகள்பண்ணும்,) ஒரு—அத்விதீயமான, ஆற்றல்மிக்க—பரிபவத்தைப் பொறுத்து ரக்ஷிக்கும் மிக்கக்ஷமையை யுடையனாய், (ஸம்ஸாரிகள் ருசிபிறந்தவன்று ஆச்ரயிக்கைக்காக,) ஆதிபால்—முன்னமே அவதரித்து நிற்பவன் விஷயத்தில், (அவன்பண்ணின உபகாரத்தையறிந்து,) பத்தர் ஆமவர்க்கு அலாது–பக்தராமவர்களுக்கல்லது, முத்தி முற்றல் ஆகுமே—மோக்ஷபலம் பெறக்கூடுமோ.

(க) "நாஸ்த்யக்ருத: க்ருதேந" (உ) "ஏஷநாராயணச்ஸ்ரீமாந்" (ங) "பவாந்நாராயணோதேவ:" (ச) "நமோநாராயணாயேதிமந்த்ரஸ் ஸர்வார்த்தஸாதக:"

வ்யா. பத்தினோடேபத்துமாய். தசதிக்குக்களுக்கும், அத்திக்குக்களிலே வ்யவஸ்திதரான தசாத்யக்ஷருக்கும் நிர்வாஹகராய். அவர்களாகிறார் - இந்த்ராதி திக்பாலகர்களெண்மரும், ஊர்த்வலோகங்களுக்கு மேலெல்லையான ஸத்யலோகத்துக்கு நிர்வாஹகனான ப்ரஹ்மாவும், அதோலோகத்துக்குக் கீழெல்லையிலே தாரகனான அநந்தனும். ஒரேழினோடோரோன்பதாய். அத்விதீயமான ஸப்தஸ்வரமும், நாட்யரஸமொன்பதும். அவையாகிறன — இசைகளேழும், (௧) "நிஷாதர்ஷபகாந்தார ஷட்ஜமத்யமதைவதா꞉ । பஞ்சமஶ்சேத்யமீ ஸப்த" என்கிறபடியே; (௨) "ஶ்ருங்காரஹாஸ்யகருணாவீரரௌத்ரபயாநகா꞉ । பீபத்ஸாத்புதஶாந்தாஶ்ச நவ நாட்யரஸா꞉ ஸ்ம்ருதா꞉" என்கிறபடியே நாட்யரஸங்களும். இவை சப்தாதிவிஷயங்களுக்கு முபலக்ஷணம். இத்தால் - கீழ்ச்சொன்ன தசாத்யக்ஷரோடு அவர்களுக்கு நிர்வாஹகரான சேதநரோடு வாசியற எல்லார்க்கும் போக்யமான சப்தாதிகளுக்கும் நிர்வாஹகனென்கை. பத்தினன் திசைக்கண்நின்ற நாடுபெற்ற நன்மையாய். பதினுவகைப்பட்டிருந்துள்ள லோகங்களுக்கு பரயோஜநமான சப்தாதிவிஷயங்களெல்லாம் அவர்களுக்குத தானேயாகைக்காக, (௩) "ஏஷாதிக்" என்கிறபடியே, "திசை" என்று - ப்ரகாரவாசி. "பத்தினன் திசைக் கணின்றநாடு" என்று - "பத்தினோடு பத்துமாய்" என்கிறவிடத்தை அநுபாஷிக்கிறார். "பெற்றநன்மை" என்று — "ஏழினோடோரொன்பதாய்" என்றவிடத்தை அநுபாஷிக்கிறார். "ஆய்" என்று - ஆகைக்காக வென்றபடி. "உயிர்முதலா முற்றுமாய்" என்னககடவதிறே. (௪) "ஸர்வாரஸ꞉" என்கிற தானே சேதநர்க்கு போக்யனாகைக்காக வென்கை. பத்தினுயதோற்றமோடோராற்றல்மிக்க வாதிபால். தசப்ராதுர்ப்பாவத்தாலே ஆவிர்ப்பவித்து, ஸம்ஸாரிகள் பண்ணும் பரிபவத்தைப் பொறுத்து ரக்ஷிக்கும் பூர்வஜன்பக்கலிலே. தோற்றமாவது - அதீந்த்ரியனான தன்னை சக்ஷுர்விஷயமாக்குகை. ஆற்றல் - பொறை. பூர்வஜனாகையாவது - ஸம்ஸாரிகளுக்கு ருசிபிறந்தவன்று ஆசாயணீயரானநாம் தூரஸ்தராகவொண்ணாதென்று முற்கலே அவதரித்து நிற்கை. பத்தராமவர்க்கலாது. (௫) "ஜந்மகர்மசமே திவ்யமேவம் யோ வேத்தி தத்வத꞉" என்கிறபடியே அவன்பண்ணின உபகாரத்தை உள்ளபடி அறிந்து அதிலே ஸக்தராயிருக்குமவர் களுக்கல்லது. முத்திமுற்றலாகுமே. மோக்ஷபலப்பக்வமாகைக்குவிரகில்லை. (௬) "த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதிமாமேதி" என்கிறபடியே விரோதிநிவர்த்தி பூர்வகமான பகவல்லாபமுண்டாக விரகில்லையென்கிறார். ... ... எக.

அ. என்பதாம்பாட்டு. அவதார ரஹஸ்யஜ்ஞாந மடியான ப்ரேமம் மோக்ஷஸாதநமென்றது - கீழ்; இதில் - அவதாரவிசேஷமான க்ர்ஷ்ணனுடைய ஆசிரிதவிரோதி நிரஸநசீலத்தை அநுவதித்து, அவன் திருவடிகளிலே ஆசையுடையார்களல்லது நித்யஸூரிகளோடு ஒருகோவையாய் அநுபவிக்கைக்கு விரகில்லையென்கிறார்.

---

(௧) "நிஷாதர்ஷபகாந்தார ஷட்ஜமத்யமதைவதா꞉ । பஞ்சமஶ்சேத்யமீ ஸப்த"

(௨) "ஶ்ருங்காரஹாஸ்யகருணாவீரரௌத்ரபயாநகா꞉ । பீபத்ஸாத்புதஶாந்தாஶ்ச நவ நாட்யரஸா꞉ ஸ்ம்ருதா꞉" (௩) "ஏஷாதிக்" (௪) "ஸர்வரஸ꞉" (௫) "ஜந்மகர்மசமே திவ்யமேவம்யோவேத்திதத்வத꞉" (௬) "த்யக்த்வாதேஹம்புநர்ஜந்மநைதிமாமேதி"

மூ.—வாசியாகிநேசமின்றி வந்தெதிர்ந்ததேனுகன்
நாசமாகிநாளுலப்ப நன்மைசேர்பனங்கனிக்கு
வீசிமேனிமிர்ந்ததோளி னில்லையாக்கினாய்கழற்
காசையாமவர்க்கலா லமரராகலாகுமே. அ0.

ப-ரை.— நன்மை சேர்—அழகிதான, பனை கனிக்கு—பனம்பழம் உதிருகைக்கீடாக, வாசி ஆகி—வாஜிவேஷத்தை யுடையனாய், நேசம் இன்றி—அபிமுகனாகையன்றிக்கே, வந்து எதிர்ந்த—வந்தெதிர்ந்த, தேனுகன்—தேநுகாஸுரனை, நாசம் ஆகி—ம்ருதப்ராயனாக்கி, நாள் உலப்ப—ஆயுஸ்ஸு முடிக்கைக்காக, வீசி—சுற்றியெறிந்து, (அத்தாலே,) மேல் நிமிர்ந்த—எதிரியைக்காட்டிலும் விஞ்சின, தோளின்—தோள்வலியாலே, இல்லை ஆக்கினாய் கழற்கு—அவனையழியச்செய்த உன் திருவடிகளிலே, ஆசை ஆமவர்க்கு அலால்—ப்ரேமமுடையார்க்கல்லது, அமரர் ஆகல் ஆகுமே—நித்யஸூரிகளோடு ஸதர்சராய் தேவரீரை அநுபவிக்கப்போமோ.

வ்யா. வாசியாகிநேசமின்றி வந்தெதிர்ந்த தேனுகன். காலயவநாதிகளைப்போலே ஸ்வரூபேணவந்து தோற்றாதே வாஜிவேஷத்திலேவந்து தோற்றினானாய்த்து - க்ருஷ்ணன் அவதாநம்பண்ணி மேல்விழுகைக்காக. நேசமின்றி வருகையாவது - "மருண்டுமான்கணங்கள் மேய்கைமறந்து மேய்ந்தபுல்லும் கடைவாய்வழிசோர" என்று — க்ருஷ்ணசேஷ்டிதங்களாலே திர்யக்குக்களும் ப்ரேமபரவசமாய்ச் செல்லாநிற்க, துஷ்ப்ரக்ருதியாகையாலே அத்துறையில் இழியாதொழிகை. எதிர்ந்துவருகையாவது - ஆதரமில்லையானாலு முபேக்ஷகனாகலாமிறே; அதுவுமின்றிக்கே பாதகனாய்வருகை. நாசமாகிநாளுலப்ப. இப்படிப்பட்ட தேநுகனை ம்ருதப்ராயனாக்கி ஆயுஸ்ஸை முடிக்கைக்காக. நாசம் - துன்பம். நன்மைசேர்பனங்கனிக்கு வீசி. தர்சநீயமாய்ப் பழுத்துநின்ற பனம்பழமுதிரும்படி, பனைத்தலையிலே சுழற்றியெறிந்து. (க) "க்ருஹீத்வா ப்ரமணேநைவ ஸோம்பரே கதஜீவிதம் । தஸ்மிந்நேவ ஸ சிக்ஷேப வேகேந த்ருணராஜநி ॥ தத: பலாந்யநேகாநி தாலாக்ராந் நிபதந் க்ஷிதௌ । ப்ருதிவ்யாம் பாதயாமாஸ மஹாவாதோ கநாநிவ" என்னக்கடவதிறே. மேல்நிமிர்ந்ததோளில்லையாக்கினாய்கழற்கு. எதிரியளவன்றிக்கே விஞ்சினதோள்வலியாலே அவனையழியச்செய்த உன் திருவடிகளுக்கு ஸங்கல்பத்தாலே யழித்தல், ஆயுதத்தாலேயழித்தலன்றிக்கே, கைதொட்டுத் தோள்வலியாலே அழியச்செய்தபடி. ஆசையாமவர்க்கலாலமரராகலாகுமே. உன்னுடைய விரோதிநிரஸந சீலதையை அநுஸந்தித்து உன்பக்கலிலே ப்ரேமமுடையார்க் கல்லது நித்யஸூரிகளோடு ஸதர்சராய் தேவரீரை அநுபவிக்கப போமோ வென்கிறார். அ0.

அ. எண்பத்தோராம்பாட்டு. வ்யூஹவிபவங்கள் தேசகால விப்ரகர்ஷத்தாலே நிலமன்றென்னவேண்டாதபடி பிற்பாடரிழவாமைக்குத் திருமலையிலேவந்து நின்றருளினான், அவன் திருவடிகளையாச்ரயித்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோளென்று உபதேசத்தைத் தலைக்கட்டுகிறார்.

---

(க) "க்ருஹீத்வாப்ரமணேநைவஸோம்பரேகதஜீவிதம் । தஸ்மிந்நேவஸசிக்ஷேப தேநுகந்த்ருணராஜநி । ததபலாந்யநேகாநிதாலாக்ராந்நிபதந்க்ஷௌ । ப்ருதிவ்யாம்பாதயாமாஸ மஹாவாதோகநாநிவ"

மூ.—கடைந்தபாற்கடற்கிடந்து காலநேமியைக்கடிந்
துடைந்தவாலிதந்தனுக் குதவவந்திராமனாய்
மிடைந்தவேழ்மரங்களு மடங்கவெய்துவேங்கடம்
அடைந்தமாலபாதமே யடைந்துநாளுமுய்மினோ. ௪௯.

ப-ரை.— பால் கடல்—க்ஷீராப்தியிலே, (ஆர்த்தரக்ஷணத்துக்காக,) கிடந்து—கண் வளர்ந்தருளியும், காலநேமியை—காலநேமியாகிற அஸுரனை, கடிந்து—வென்று, உடைந்த—(பகைவனைப்பெறுக நாம என்னராஜ்யம்பண்ணுகிறோமென்று நெஞ்சழிந்த,) வாலிதந் தனுக்கு உதவ, வாலியின் தம்பியாகிய மஹாராஜருக்குண்டான ஆபத்தைத் தீர்க்கைக்காக, இராமன் ஆய் வந்து—சக்ரவர்த்தி திருமகனாய்த் திருவவதரித்து, மிடைந்த—இலக்குக்குறிக்க வொண்ணாதபடி நெருங்கிநிற்கிற, ஏழ் மரங்களும்—மராமரங்களேழையும், அடங்க—கிரிஸாதலங்களையுமடங்க, எய்து—துளைத்து, வேங்கடம் அடைந்த—திருமலையை ஆச்ரயித்து நிற்கிற, மால பாதமே—வ்யாமுக்தனுடைய திருவடிகளையே, நாளும்— நாள்தோறும், அடைந்து—அநந்யப்ரயோஜநரா யாச்ரயித்து, உய்மின்—உஜ்ஜீவிக்கப் பாருங்கோள்.

வ்யா. கடைந்தபாற்கடல்கிடந்து. துர்வாஸசசாபத்தாலே இந்த்ராதிகளுக்குவந்த ஆபத்தை, கடலைக்கடைந்து பரிஹரித்தது, இன்னம் ஆபத்துக்களிலே ப்ரஹ்மாதிகள வாரது பேக்ஷிக்கலாம்படி அதிலே கண்வளர்ந்தருளி. காலநேமியைக்கடிந்து. அத்தேவதைகளை புஜபலத்தாலே நலிந்தகாலநேமியாகிற அஸுரனைவென்று. கடத்தல் - வெல்லுதி. உடைந்த வாலி தந்தனுக்குதவவந் திராமனாய். வலியாலேயுடைந்த தம்பி தனக்கு தன்தம்பி. ப்ரஹ் மாதிகளைவல்லாத திர்யக்குக்களுடைய ரக்ஷணத்துக்காக சக்ரவர்த்திதிருமகனாய் வந்தவ தரித்து. தேவதாந்தர ஸ்பர்சத்தாலே ஸ்வரூபமழிந்தவாலிகளுக்கு, (௧) "[illegible]" என்கிறபடியே ஸ்வஹஸ்தவத்தாலே மோக்ஷப்ரதானம் பண்ணுகைக்காக தசரதாத்மஜனாய்வந்து. உடைதல் - அழிதல். அதவா, தனக்கு துஷ்ப்ராபமான ரிச்யமூகத்திலே பகையான மஹாராஜரிருக்கையாலே, "பகையினைப்பெறுக நாம் என்ன ராஜ்யம் பண்ணுகிறோம்" என்று நெஞ்சழிந்தவாலியாலே மஹாராஜர்க்குப் பிறந்த ஆபத் தைத் தீர்க்கைக்காக வந்தென்றுமாம். உடைந்தவாலிதந்தனுக்கு. "தம்பி தனக்கு. மலை க்கு 'அ' அசையாம், 'தம்பி' என்றதை 'தன்' என்று கடைக்குறைத்ததாய்க் கிடக்கிறது" என்று ஒருதமிழன். மிடைந்தவேழ்மரங்களுமடங்கவெய்து ஆபத்திலே ரக்ஷிக்கவாக்கொண்ட ரக்ஷணத்திலே அதிசங்கைபண்ணின மஹாராஜர் விச்வஸிக்கைக்காக இலக்குக்குறிக்க வொண்ணாதபடி மிடைந்துநிற்கிற மராமரங்களேழையும். அநுகூலமான கிரிஸாதலங்களை யும் படங்கத்துளைத்தது. வாலி, ஸ்வபலபரீக்ஷை பண்ணுவது ஒரு மராமரத்தையிலேயாக இருக்க, மஹாராஜருடைய அதிசங்கையை ஸவாஸனமாகப் போக்குகைக்காக ஏழென்று பேர்பெற்றதைப் எய்தாராய்த்தது. வேங்கடமடைந்த மாலபாதமே யடைந்து. பரயோஜ னாக்காரர்க்கு முகங்கொடுத்த சீலமும், அவதாரத்தில தாழ்ந்தார்க்கு முகங்கொடுத்த சீல மும், பிற்பாடரானவர்க ளிழவாமைக்குத் திருமலையை யாச்ரயித்துநிற்கிற வ்யாமுக்தன் திருவடிகளை அநந்யப்ரயோஜநரா யாச்ரயித்து நாளுமுய்மினோ. "நாளும - அடைந்துய் மின்" என்றுமாம். கைங்கர்யமென்றும உஜ்ஜீவநமென்றும — பர்யாயம். "சுடரடி தொழுதெழு" என்னக்கடவதிறே. ஆச்ரிதர்க்குத் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஆச்ரயணீயஸ்தலம்; திருவேங்கடமுடையானுக்கு ஆச்ரயணீயஸ்தலம் திருமலை. ... ௪௯

(௧) "[illegible]"

அ. எண்பத்திரண்டாம்பாட்டு. இதுக்கு முன்பு பரோபதேசம் பண்ணினாராய், மேல் ஈச்வரனைக்குறித்து தேவரீர் திருவடிகளிலே பரமபக்தர் நித்யஸுகிகளென்கிறார். இதுக்கபு - பிறர்க்கு ஸாதநமாகத் தாமுபதேசித்தபக்தி தமக்கு ஸ்வயம் ப்ரயோஜநமாகை யாலே, தமக்கு ஃலித்தபடியைப் பேசுகிறார். இப்பபக்திதான் ஸாதகனுக்கு உபாயத்தில் மேலில்லையாய், பரபக்தனுக்கு பராப்யதிலே முதலடியாயிருக்குமிறே. இதில் முதற்பாட்டில் - மநுஷ்யத்வே பரத்வத்தையும் அவதாரகந்தமான க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளுகிற நீர்மையையும் அநுஸந்தித்து, தேவரீர் திருவடிகளிலே ப்ரவணரானார்க்கு ஸர்வதேசத்திலும ஸுகமேயாமென்கிறார்.

மூ.—எத்திறத்துமொத்துநின் றுயர்ந்துயர்ந்தபெற்றியோய்
முத்திறத்துமூரிநீ ரராவணைத்துயின்றநின்
பத்துறுத்தசிந்தையோடு நின்றுபாசம்விட்டவர்க்
கெத்திறத்துமின்பமிங்கு மங்குமெங்குமாகுமே. அ௨.

ப-ரை.— எத்திறத்தும— தேவமநுஷ்யதிர்யக் ஸ்தாவரங்களாகிற நான்குஜாதிகளிலும், ஒத்து நின்று—ஸஜாதியனுப் அவதரித்து, உயர்ந்து—அஜஹத்ஸ்வபாவனுகையால் வந்த உத்கர்ஷத்தையும, உயர்ந்த-குணதிக்யத்தால்வந்த உத்கர்ஷத்தையும், பெற்றியோய்—ஸ்வபாவமாகவுடையவனே, முத்திறத்து நீர்— மூன்றுவகைப்பட்ட நீரையுடையகடலை, மூரி-இடமாகக்கொண்டு, ( அந்நீர உறுத்தாமைக்காக, ) அரவு அணை-திருவனந்தாழ்வான் மேலே, துயின்ற—கண்வளாந்தருளின, நின்—தேவரீர திருவடிகளிலே, பத்து உறுத்த—பக்திமிகுந்த, சிந்தையோடு நின்று—மநோரதத்தோடே நின்று, பாசம் விட்டவர்க்கு—இதரவிஷயஸங்கம் விட்டவர்களுக்கு, இங்கும்—சரீரத்தோடே யிருக்குமிருப்பிலும், அங்கும்—பரமபதத்திலிருக்கு மிருப்பிலும், எங்கும்—உத்க்ரமணதசையிலும் அர்ச்சிராதி மார்க்கத்திலும். எத்திறத்தும்— ஆகிய இவ்வவஸ்தைகளிலெல்லாம், இன்பம் ஆகும்—ஸுகமேயாயிருக்கும.

வ்யா. எத்திறத்துமொத்து நின்றுயர்ந்துயர்ந்த பெற்றியோய். தேவஜாதியிலும் மநுஷ்யஜாதியிலும் திர்யக்ஜாதியிலும் ஸ்தாவரஜாதியிலும் ஸஜாதியனுபவதரித்து, அஜ்ஜாதியிற் காட்டில் அஜஹத்ஸ்வபாவனுகையாலேவந்த உத்கர்ஷத்தையும், (க) “ ஸஉ ஶ்ரேயாந் பவதிஜாயமாநஃ ” என்கிறபடியே குணதிக்யத்தால்வந்த வுத்கர்ஷத்தையும் ஸ்வபாவமாகவுடையவனே. பெற்றி - இயல்வு. திறம் - திரள். ப்ரஹ்மருத்ரமத்யா (ஃப)ர) வதாரத்தோடு மதஸ்யாவதாரத்தோடு வாசியற ஸஜாதீயபாவத்தில் புரையறுகையும், அதிமாநுஷ சேஷ்டிதங்களாலே ஸர்வாதிகத்வம் தோற்றுகையும், தாத்பஸாரத்யங்களாலே குணதிக்பம் தோற்றியிருக்கையும். முத்திறத்துமூரி நீரராவணைத் துயின்ற. அவதாரத்தில் சொன்னமேன்மைக்கும் நீர்மைக்கும் ஊற்றுய்,மூன்றுவகைப்பட்ட நீரையுடைத்தான கடலையிடமாகக்கொண்டு அந்நீருறுத்தாமைக்குத் திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளின. முத்திறத்துநீர் — ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலம் இவை. மூரி - இடம். நின்பத்துறுத்தசிந்தையோடு நின்று பாசம் விட்டவர்க்கு. உன் திருவடிகளிலே பக்திமிக்க மநோரதத்தோடே நின்று, இதரவிஷ

(க) “ ஸ உச்ரேயாந்பவதிஜாயமாநஃ ”

யத்தில் ஸங்கத்தைவிட்டவர்களுக்கு. "பத்து" என்று - பக்தி. உறுதல்—அழுந்தல். அதாவது-மிகுதி. ஆசிரிதபரித்ராணார்த்தமாக அவதரித்த அவதாரத்தின் மேன்மையையும் நீர்மையையும் அதுக்கூற்றானஸௌலப்யத்திலே கண்வளர்ந்தருளுகிற நீர்மையையும் அநுஸந்தித்து பாபக்தியுக்தராய், அப்பக்திபாரவச்யத்தாலே இதரவிஷயங்களிலே வைராக்யத்தையுடையாயிருக்கிறவர்களுக்கென்கை. எத்திறத்துமின்பமிங்குமங்குமெங்குமாகுமே. சரீரத்தோடேயிருக்குமிருப்பிலும், பரமபதத்திலிருக்குமிருப்பிலும், உத்க்ரமணதசையிலும், அர்ச்சிராதிமார்க்கமென்கிற அவஸ்தாவிசேஷங்களிலும் ஸுகமேயாயிருக்கும். எத்திறத்துமின்பமான ஸர்வேச்வரனை உன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளையநுபவித்து, பரகாயபேதங்களிலும் த்வதநுபவத்தால் வந்த ஸுகமேயல்லதில்லை. விஷயாந்தரபாரவச்யம் எங்ஙனுமாகிலும் துக்கமேயானவோபாதி பகவத்பாரவச்யம் எங்ஙனுமாகிலும் ஸுகமேயாயிருக்குமென்கை. ... ... ... ... ... ... ... அ௨.

அ. எண்பத்துமூன்றாம்பாட்டு. (க) "அநந்தக்லேசபாஜநம்" என்கிறபடியே துக்கப்ரசுரமான இஸ்ஸம்ஸாரத்திலே ஸுகமுண்டாகக் கூடுமோவென்னில்; ப்ராப்திதசையில் ஸுகமும், ஸம்ஸாரத்தே யிருந்துவைத்து தேவரீர் திருவடிகளில் விச்சேதமில்லாத ப்ரேமத்தால பிறக்கும் ஸுகத்துக்குப போராதென்கிறார்.

மூ.—மட்டுலாவுதண்டுழா யலங்கலாய்புலன்கழல்
விட்டுவீள்விலாதபோகம் விண்ணினண்ணியேறினும்
எட்டினோடிரண்டெனுங் கயிற்றினின்மனந்தனைக்
கட்டிவீடிலாதுவைத்த காதலின்பமாகுமே. அ௩.

ப-ரை.— மட்டு உலாவு—தேன்மாறுத, தண்—குளிர்ந்த, துழாய் அலங்கலாய்—திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனானவனே, புலன் கழல்—தர்சநீயமான தேவரீர் திருவடிகளை, விட்டு-, வீள்வு இலாத போகம்-அழிவில்லாத போகத்தை, விண்ணில் ஏறி நண்ணினும் பரமபதத்திலே யேறிக் கிட்டினாலும், எட்டினோடு— இரண்டு எனும் கயிற்றினால்— பக்தியென்கிற கயிற்றாலே, மனந்தனை—ஸர்வேந்த்ரியங்களுக்கும் ப்ரதாநமான மநஸ்ஸை, கட்டி—விஷயங்களில் போகாதபடி பந்தித்து, வீடு இலாது-விச்சேதமில்லாதபடி, வைத்த-தேவரீர் திருவடிகளிலேவைத்த, காதல்-ப்ரேமமானது, (ஸுகத்துக்கு ஸாதநமாயிருக்கையன்றிக்கே,) இன்பம் ஆகும்—அதுதானே ஸுகமாயிருக்கும்.

வ்யா. மட்டுலாவுதண்டுழாயலங்கலாய். தேன்மாறுத செவ்வித்திருத்துழாய் மாலையாலே யலங்க்ருதனானவனே. இத்தால் - திருத்துழாயோட்டை ஸம்பந்தத்தாலே ஸர்வாதிகவஸ்து வென்னுமிடமும், உபயவிபூதி நிர்வஹணத்துக்கிட்ட தனிமாலை யென்னுமிடமும், ஒப்பனையழகும் சொல்லிற்றாய்த்து. புலன்கழல் விட்டுவீள்விலாத போகம். தர்சநீயமாய் நித்யஸூரிகளுக்கு ஸதாதர்சநீயமுமான தேவரீர் திருவடிகளைவிட்டு, வேறுபோக்கில்லாத போகத்தை. புலன்கழல் - புலப்படும் திருவடிகளை. விண்ணில்நண்ணியேறினும். பரமபதத்தேயேறிக்கிட்டினும். எட்டினோடிரண்டெனுங் கயிற்றினால். எட்டுமிரண்டும்கூடி — பத்தாய், அத்தை பக்தியென்கிறது. பகவத்பக்தியில் தமக்குள்ள கௌரவாதிசயத்தாலே

(க) "அநந்தக்லேசபாஜநம்"

மறைத்துச்சொல்லுகிருர். " கயிறு " என்று — பாதகமென்றபடி. மனந்தனைக்கட்டி. ஸர்வேந்த்ரியங்களுக்கும் ப்ரதாநமான மநஸ்ஸை விஷயாந்தரங்களில் போகாதபடி பந்தித்து. வீடிலாதுவைத்தகாதலின்பமாகுமே. விச்சேதமில்லாதபடி தேவரீர் திருவடிகளிலே வைத்த ப்ரேமம், ஸுகத்துக்கு ஸாதநமாயிருக்கை யன்றிக்கே தானே ஸுகமாயிருக்கும். அரு.

அ. எண்பத்துநான்காம்பாட்டு. "வீடிலாதுவைத்த காதலின்பமாகும்" என்று — ப்ரஸ்துதமானபக்தி தம்பக்கல் காணுமையாலும், தமமை பரக்ருதியோடேயிருக்கக் காண்கையாலும், ஈச்வரன் ஸ்வதந்த்ரனாகையாலும், அவன் நினைவாலே பெறுகையாலும், என் திறத்தில என்னுதன், தன் திருவடிகளிலே பரமபக்தியுக்தனும்படிபண்ண நினைத்திருக்கிறுனோ, நித்யஸம்ஸாரியாய்ப்போக நினைத்திருக்கிறுனோ, திருவுள்ளத்தில் நினைத்திருக்கிறதேதனேனென்கிறுர்.

மூ.—பின்பிறக்கவைத்தனன்கொ லன்றிநின்றுதன் கழற்
கன்புறைக்கவைத்தநா ளறிந்தனன்கொலாழியான்
தன்திறத்தோரன்பிலா வறிவிலாதநாயினேன்
என்திறத்திலென்கொலெம்பி ரான்குறிப்பில்வைத்ததே. அச.

ப-ரை — (இந்தசரீராவஸாநத்துக்குமேலே,) பின் பிறக்க வைத்தனன் கொல்— இன்னமும் சிலசரீரபரிக்ரஹம்பண்ணும்படியாக நினைத்திருக்கிறுனோ; அன்றி-அன்றிக்கே, நின்று-இடைவீடில்லாமல், தன்கழற்கு-தன் திருவடிகளுக்கு, அன்பு-அன்பை, உறைக்க வைத்தநாள் அறிந்தனன்கொல்—உறைக்கவைத்து அநுபவிக்கும்நாள் எனக்குண்டாம்படி நினைத்திருக்கிறுனோ; ஆழியான் தன் திறத்து—ஸர்வாதிகத்வஸூசகமான திருவாழியை யுடையனுனவனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளிலே, ஓர் அன்பு இலா—ப்ரேமகந்தமில்லாதவனும், ஓர் அறிவு இலாத—ஜ்ஞாநலேசமுமில்லாதவனும், நாயினேன்—ஹேயனுன, என் திறத்தில்—என் விஷயத்திலே, எம்பிரான்—எனக்கு உபகாரகனுன ஸர்வேசவரன், குறிப்பில் வைத்தது என்கொல்—திருவுள்ளத்தில் கொண்டிருக்கிறது என்னே.

வ்யா. பின் பிறக்கவைத்தனன்கொல். இந்த சரீராவஸாநத்துக்குமேலே இன்னமும் சில சரீரபரிக்ரஹம்பண்ணும்படியாக என்னை நினைத்திருக்கிறுனோ. அன்றிக்கே, பின்பு இறக்கவைத்தனன்கொல். தன்பக்கலிலே ஜ்ஞாநம்பிறந்தபின்பும் தன்னை விஸ்மரித்து நசிக்க நினைத்திருக்கிறுனோ. நித்யமான ஆத்மாவுக்கு பகவத் ஜ்ஞாநலாபாலாபங்களாயிறே ஸத ஸத்பாவஹேதுக்கள். (க) " [illegible] " என்னக்கடவதிறே. அன்றி. அன்றிக்கே. நின்று தன்கழற்கன்புறைக்கவைத்தநாளறிந்தனன் கோல். விச்சேதமில்லாதபடி தன் திருவடிகளுக்கு அன்பையுறைக்கவைத்து அநுபவிக்கும்நாள் எனக்குண்டாம்படி நினைத்திருக்கிறுனோ. அன்புறைக்கையாவது - பரமபக்தியுக்தனுகை. வைத்தநுபவிக்கும் நாளென்கிறது - ஒருதேசவிசேஷத்தி லநுபவத்தை. இத்தால் - இச்சேதநனுக்கு ஜந்மமும் விஸ்ம்ருதியும் விநாசமும் பக்தியில்லாமை; உஜ்ஜீவநம் பரமபக்தியுக்தனுகை யென்றதாய்த்து. ஜந்மமாகி

(க) " அஸத் ப்ரஹ்மேதி வேதசேத் - அஸந்நேவஸபவதி, அஸ்திப்ரஹ்மேதிசேத் வேத, ஸந்தமேநந்ததோ விதுரிதி "

தது—விஷயாந்தர ப்ராவண்யமேறது. விஸ்மர்தியாகிறது—விஷயாந்தர ப்ராவண்யகார்யமா கையாலே ஆத்மாவுக்கு உபயமுமவிநாசமிறே. ஆழியான்றன்திறத்து. ஸர்வாதிகனான தன் னிடையாட்டத்து. ஓரன்பிலாவறிவிலாதநாயினேன். அவன் ஸ்வரூப ரூபகுணவிபூதிகளில் பரிபக்தமின்றிக்கே, அதுக்கடியான ஜ்ஞாநலேசமுமின்றிக்கே, நீசனானநான். ப்ரேம மின்றிக்கே, அதில்லையென்கிற அறிவுமில்லாதவென்றபடியாம். “நாயினேன்” என்கிறது. திறந்துகிடந்த வாசல்கள்தோறும்நுழைந்து திரிகையும், எல்லாராலும் பரிபூதனாகையும், உகந்து தொட்டார்க்கும் ஸ்நாநம்பண்ணவேண்டும்படி அமேத்ய யதார்த்தமாகையும். என் திறத்தில். ஸம்ஸாரிகளைப்போலே விமுகனாதல், முமுக்ஷுவைப்போலே போகபரவனாதலன் றிக்கேயிருக்கிற என்னிடையாட்டத்தில. எம்பிரான குறிப்பில்வைத்தது என்கொல். என் நாதன் திருவுள்ளத்தில் கொண்டிருக்கிறதென்னோ “பிறந்தபினமறந்திலேன்” என்கிற ஜ்ஞாநத்தையும், “நடந்தகால்கள்நொந்தவோ” என்கிற பரோபக்தியையும உபாயமென்றிருக் கிறிலர், ஈச்வரன் நினைவே தமக்கு உபாயமென்றிருக்கிறார் “வரந்தரும திருக்குறிப்பில வைத்ததாகில்” என்று—ஸாமாந்யேநவுபாயமாகச்சொல்லுவதுமதுவே, தமக்கு உபாயமாக விசேஷித்துச்சொல்லுவதுமதுவே. இப்பாட்டால—என்னுடைய பூர்வவ்ருத்தத்தைப் பார் த்து உபேக்ஷிக்க நினைத்திருக்கிறானோ, இத்தலையில் விநாசம் தன்னிழவாம்படியான குடல்து டக்கை நினைத்து உஜ்ஜீவிப்பிக்க நினைத்திருக்கிறானோ வென்றதாய்த்து. ... ௮௬.

அ. எண்பத்தைந்தாம்பாட்டு. என்னை இப்ப்ரக்ருதியோடே வைத்தபோதே தேவரீர் நினைவு இன்னதென்றறிகிலேன், முந்துற முன்னம உனபாஸாதத்தாலே திருவடிகளில்பிறந்த ருசியைமாற்றி இதரவிஷய ப்ராவண்யத்தைத் தொழியவேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

மூ.—நச்சராவணைக்கிடந்த நாதபாதபோதினில்
வைத்தசிந்தைவாங்குவித்து நீங்குவிக்கநீயினம்
மெய்த்தன்வல்லையாதலா லறிந்தனன்நின்மாயமே
உய்த்துநின்மயக்கினில் மயக்கலென்னைமாயனே. ௮௫.

ப—ரை.— (உகவாதார்க்குக் கிட்டவொண்ணாதபடி,) நச்சு—விஷத்தையுமிழுகிற, அரவு அணை—திருவனந்தாழ்வானாகிற திருப்பள்ளியிலே, கிடந்த—கண்வளர்ந்தருளுகிற, நாத—ஸர்வேச்வரனே, பாதம்—தேவரீருடைய திருவடிகளாகிற, போதினில்—புஷ்பத் திலே, வைத்த—வைக்கப்பட்ட, சிந்தை—மநஸ்ஸை, வாங்குவித்து—அவைகளினின்றும மீளும்படி பண்ணி, (நெடுங்காலம் அகன்றிருந்தது போராமே,) இன்னம் நீங்குவிக்க— இன்னும் அகலும்படி பண்ணுகைக்கு, நீ—ஸர்வசக்தியான நீ, மெய்த்தன் வல்லை—மெய்யே ஸமர்த்தன்; ஆதலால்—ஆகையாலே, அறிந்தனன்—உன்னை ஸ்வதந்த்ரனென்று அறிந்து கொண்டேன்; மாயனே—ஆச்சர்யமான சேஷ்டிதங்களை யுடையவனே, நின் மாயம்—தேவ ரீரிட்டவழக்கான ப்ரக்ருதியோடே, உய்த்து—நித்யஸம்ச்லிஷ்டனும்படி பண்ணி, நின்—உன க்கு பரிகரமான, மயக்கினில்—சப்தாதிவிஷயங்களிலே மூட்டி, என்னை—உன்னைப்பார்த்திரு க்கிறவென்னை, மயக்கல்—அறிவுகெடுக்கப்பாராதொழியவேணும்.

வ்யா. நச்சராவணைக்கிடந்தநாத. உகவாதார்க்குக் கிட்டவொண்ணாதபடி விஷத்தை உமிழுகிற திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனே. நீ உகந்தாரை நித்யகைங்கர்யம் கொள்ளும் ஸ்வதந்த்ரனென்றபடி. பாதபோதினில்வைத்தசிந்தை. உன் திருவடிகளாகிற செவ்விப்பூவிலே வ்யவஸ்திதமான மநஸ்ஸை. ப்ராப்தமுமாய் நிரதிசய

போக்யமுமா யிருந்துள்ள திருவடிகளிலே பொருந்தின மநஸ்ஸை யென்கை. வாங்குவித்து. திருவடிகளில்நின்றும மீளும்படி பண்ணி. (க) "நிவேசிதாத்மா கயசந்த்ருஷ்டி" என்று மநஸ்ஸையும் விமுகமாம்படி பண்ணி. நீங்குவிக்கரீயினம் மெய்த்தன்வல்லே. நெடுங் காலம அகன்று போராமே யின்னமகலும்படி பண்ணவல்ல ஸர்வசக்தியான நீமெய்யேவல்லே. ஆதலாலறிந்தனன். ஒருத்தனைக் கேள்விகொண்டு கார்யம் செய்யவேண்டாதபடி வஸ்துவை வஸ்த்வந்தரமாக்கவல்ல சக்திையுடையை யாகையாலே உன்னை ஸ்வதந்த்ரனென் றறிந்து கொண்டேன். நின்மாயமேயுய்த்து நின்மயக்கினில்மயக்கல். உமக்குச செய்யவேண்டுவ தென் னென்ன; (உ) "மமமாயா" என்கிறபடியே தேவரீரிட்டவழக்கான ப்ரக்ருதியோடே நித்யஸம்ஸ்ருஷ்டனும்படி பண்ணி, உனக்கு பரிகரமான சப்தாதிவிஷயங்களிலே மூட்டி என்னை யறிவுகெடுக்கப் பாராதொழியவேணும். சேதநரை யறிவுகெடுக்குமவையாகையாலே "மயக்கு" என்று - சப்தாதிவிஷயங்களைச் சொல்லுகிறது. என்னை. உன்பக்கலிலே ந்யஸ்தபரனாய் உன்கைபார்த்திருக்கிற வென்னை. மாயனே. நம்மை யொழியச் செல்லாதாரை சப்தாதிகளிலேமூட்டி யறிவுகெடுப்போமோ, ஸ்வதந்த்ரனாயன்றோ நாம் அங்ஙன் செய்வ தென்ன, ஆச்சர்யமான சேஷ்டிதங்களையுடையவனே. (ங) "உபாஸநசேஷாணாம் ஸாரதுர்யம் நாதி" என்கிறபடியே ப்ரஹ்லாதனை ஹிரண்யனோக்கப் பண்ணவல்லே, ப்ராதிகூல்யத்தில் வ்யவஸ்திதனான சிசுபாலனுக்கு ஸாயுஜ்யப்ரதனாகவும் வல்லே, இதுவன்றோ தேவரீருடைய ஸ்வாதந்த்ர்ய மென்கிறார். ... ... ... ... ... அறு.

அ. என்பத்தாறும்பாட்டு. உம்மை நம்பக்கல்நின்றும்கற்றி ப்ரக்ருதிவச்யராக்குவோமாக நம்பக்கலிலே அதிசங்கை பண்ணுவானென்னென்ன; விரோதிநிரஸனமார்த்தனான நீ என்பரக்ருதிஸம்பந்தத்தைப் பறுத்து என்னுடைய ஜன்மத்தைத் தொழித்தால் அதிசங்கை பண்ணுகேதே செய்வதென னென்கிறார்.

மூ.—சாடுபோதனை சலங்கலந்தபொய்கைவாய்
ஆடரவின்வனமிடர் நடம்பயின் றநாதனே
கோடுநீடுகையசெய்ய பாதநாளுமுள்ளினல்
வீடனாகமெய்செயாத வண்ணமென்கொல்கண்ணனே. அகூ.

ப-ரை.— சாடு—சகடாஸுரன் முடியும்படி., சாடு—உதைத்த, பாதனே—திருவடிகளை யுடையனாய், (விஷமேமிகக,) சலம கலந்த—அக்ரோடே யமுனாஜலமும் கலந்திருந்துள்ள, பொய்கைவாய்—பொய்கையிலே, ஆடு—வர்த்திக்கிற, அரவின்—காளியனுடைய, வன—திண்ணிதான, மிடர்—பிடரியிலே, நடம் பயின்ற—நர்த்தநம் செய்தவனாய், நாதனே—எங்களுக்கு வகுத்தஸ்வாமியாய், நீடு—ஸர்வகாலத்திலும், கோடு—ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, கைய—திருக்கையிலே யுடையவனாய், கண்ணனே—ஆச்ரிதஸுலபனானவனே, செய்ய—அழகிதான, பாதம்—உன் திருவடித்தாமரைகளை, நாளும்—ஸர்வகாலமும், உள்ளினல்—அநுஸந்தித்தால், வீடன் ஆக—ப்ரக்ருதிஸம்பந்தமற்றுத் திருவடிகளைப் பெறுமவனாகை, மெய் செயாத வண்ணம்-மெய்செய்யாதொழிகின்ற ப்ரகாரம,என்கொல்-ஏன்னோவென்கிறார்.

(க) "நிவேசிதாத்மா கதமப்யதிஷ்டத்" (உ) "மமமாயா"
(ங) "உபாஸநசேஷாணாம்ஸாரதுர்யம்"

வ்யா. சாபோபோதனே. சகடாஸுரன் முடியும்படி திருவடிகளை நிமிர்த்தவனே. அநுகூலர்க்கு உத்தேச்யமான திருவடிகளையாய்த்து ப்ரதிகூலர்க்கு நாசகரமாய்த்து. இதிறே வஸ்துஸ்வபாவம். "விடமுமமுதமுமாய்" என்னக்கடவதிறே. இத்தால் — விரோதிநிரஸநத்தில் உனக்கு வருத்தமுண்டாய்த் தானிழக்கிறேனோ வென்கை. சலங்கலந்த பொய்கைவாய். விஷமேபராசமாய் அத்தோடே யமுநாஜலமும் மிச்ரமாயிருந்துள்ள பொய்கையிலே. (க) "தஸ்யாச்வாஸமஹாபீமம் விஷாக்நிஸ்ஸ்ரிதவாரிணம் । ஹ்ரதம்காளியநாகஸ்ய ததர்சேதி விபீஷணம்" என்னக்கடவதிறே. அடரவின்வன்பிடர் நடம்பயின்ற. அப்பொய்கையிலே வர்த்திக்கிற காளியனுடைய திண்ணிய பிடரியிலே நின்று ஸஞ்சரிக்கிற ஸஞ்சாரம் வல்லரா டிறைப்போலே யிருக்கை. "அடரவு" என்று - க்ரோதத்தாலே யாடுகிற அரவென்றுமாம். "ஆடல்" என்று - நடையாட்டமும், கூத்தும். நாதனே. வருத்த வ்யாபியானவனே. விரோதிநிரஸந முகபபாகைக்கடியான ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. இத்தால் - என்விரோதியைப் போக்குகைக்கு உகப்பில்லாமே யிழக்கிறேனோ, ஸம்பந்தமில்லாமே யிழக்கிறேனோவென்கை. பகவத்ஸமாச்ரயணத்துக்கும் அநுபவத்துக்குமாக ஸ்ருஷ்டமான சரீரத்திலே அஹங்காரமேசமுண்டானல் அது நிரஸநீயமென்று தோற்றுகைக்காக, சகடாஸுரநிரஸநத்தை யருளிச்செய்தார். தனக்கு போக்யமான ஆத்மாவுக்கு, விஷயஸங்கம்போலே நிரஸநீயம் தேஹஸம்பந்தமென்று தோற்றுகைக்காகக் காளியமர்த்தநத்தை யருளிச்செய்தார். அநுகூலமாகவைத்த தொன்றிறே சகடம், உபஜீவ்யமாயிருப்ப தொன்றிறே யமுநாஜலம். கோபீஜேகைய ஸர்வகாலமும் திருகைக்கு நிருபகமென்னும் படி அத்தைப்பிரியாத ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யுடையவனே. என்விரோதியைப் போக்குகைக்கு உன்கையில் பரிகரமில்லாமே யிழக்கிறேனோ,என்கையில் பரிகாரமுண்டாயிழக்கிறேனோ வென்கை. செய்யபாதம் நாளுமுள்ளினல். உன்திருமேனிக்கு பரபாகமாய் ஆகர்ஷகமான திருவடிகளை ஸர்வகாலமும் அபாச்ரயமாக அநுஸந்தித்தால். இத்தால்—நான் அங்பரனாய்த் தானிழக்கிறேனோ வென்கை. வீடஞ்கமெய்செயாத வண்ணமேன்கொல் இப்படி சக்தனாயிருக்க, ப்ரக்ருதி ஸம்பந்தமற்றுத் திருவடிகளைப் பெறுமவனாக மெய்செய்யா தொழிகிற ப்ரகாரமென்னோ. மெய்செய்கையாவது - விஷயீகாரமாத்ரத்திலே, "முடியாததென்னெனக்கேலினி" என்னப்பண்ணுதல், ஜ்ஞாநலாபத்தாலே, "யாவர்நிகரகல்வானத்தே" என்னப்பண்ணுதல் செய்யுமிவ்வளவுகளாலேவந்த ஆச்வாஸமொழிய தேஹஸம்பந்தத்தை அறுக்கையும், நித்யஸூரிகள் பரிமாற்றத்தைப் பண்ணித் தருகையும். கண்ணனே. ஸம்ஸாரிகளுக்கு இச்சையே தொடங்கி பரபக்தி பர்யந்தமாக எல்லா அவஸ்தைகளையு முண்டாக்கி முக்தராக்குகையன்றோ அவதாரத்துக்குபலம்,அநுபாவ்யமாயிருப்பதொரு கர்மசேஷமுண்டாயோ அவதரித்தது; ஆக, நீர் நம்பக்கலிலே அதிசங்கை பண்ணுகைக்கு ஹேதுவென்னென்ன; நீ சக்தனாய்வைத்து என்னபிமதஞ் செய்யாமைக்கு ஹேதுவைச சொல்லலாகாதோ நான் அதிசங்கைபண்ணினதுக்கு ஹேதுசொல்லும்படி யென்கிறார். ... அக.

அ. எண்பத்தேழாம்பாட்டு. "செய்யபாதம் நாளுமுள்ளினல்" என்று நீயே எனக்கு அபாச்ரயமென்கையாலே நம்மையொழியவுமக்கு வேறொரு பற்றில்லையோவென்ன, அபாச்ரயமாக ஸம்பாவனையுள்ள ப்ரஹ்ம ருத்ரர்கள் ஸ்வாதிகாரஸித்திக்கு தேவரீர் கைபார்த்

(க) "தஸ்யாச்வாஸமஹாபீமம் விஷாக்நிஸ்ஸ்ரிதவாரிணம் । ஹ்ரதம்காளியநாகஸ்ய ததர்சேதி விபீஷணம்"

திருக்கும்படியாய் இழிந்தபின்பு, ஸர்வாதிகரான தேவரீரையொழிய வேறொரு பற்றையு டையே னல்லேனென்று தம்முடைய அதிகாரத்துக்கு அபேக்ஷிதமான அநந்யகதித்வ க்யா பநம பண்ணுகிறார் மேல்.

மூ.—நெற்றிபெற்றகண்ணன்விண்ணி ஞதனோடுபோதின்மேல்
நற்றவத்தநாதனோடு மற்றுமுள்ளவானவர்
கற்றபெற்றியால்வணங்கு பாதநாதவேதநின்
பற்றலாலோர்பற்றுமற்ற துற்றிலேனுரைக்கிலே.　　௮எ.

ப-ரை.— நெற்றி பெற்ற கண்ணன்—நெற்றியிலே கண்ணையுடையனான ருத்ரனும், விண்ணின் நாதனோடு— ஸ்வர்க்கத்துக்கு நிர்வாஹகனான இந்த்ரனும், போதின் மேல்— திருநாபிகமலத்தைப பிறப்பிடமாகவுடையனாய், நல் தவத்த நாதனோடு—ஒருவராலும் செய்ய முடியாத தபஸ்ஸைப்பண்ணுகையாலே பதினான்கு உலகங்களுக்கும் ஸ்ரஷ்டாவாய் அவற்றுக்கு நாதனான சதுர்முகனும், மற்றும் உள்ள வானவர்— ஹவிர்ப்பாகபுக்குக்களான மற்ற தேவதைகளும், கற்ற பெற்றியால்—தந்தாம்கற்ற ப்ரகாரங்களாலே, வணங்கு—ஆச்ரயிக்கும், பாத- திருவடிகளையுடையனாய்,நாத வேத—ஸர்வலோகநாதனாக வேதப்ரதிபாத்யனானவனே, உரைக்கில்—உண்மைசொல்லபபுகில், நின் பற்று அலால்—உன்திருவடிகளை அபாச்ரயமாயிருக்குமதொழிய,மற்று ஓர் பற்று அது—வேறோர் அபாச்ரயத்தை,உற்றிலேன்- உடையே னல்லேன்.

வ்யா. நெற்றிபெற்றகண்ணன். நெற்றியிலே கண்ணையுடைய ருத்ரன். தன்னுடைய சக்த்யதிசயத்துக்கு ப்ரகாசகமாகையாலே லலாட நேத்ரத்தைத் தனக்குப்பேறாக நினைத்திருக்கிறானொருத்தன். விண்ணின்நாதனோடு போதின்மேல் நற்றவத்தநாதனோடு மற்றுமுள்ளவானவர். ஸ்வர்கத்துக்கு நிர்வாஹகனான இந்த்ரனோடே, திருநாபிகமலத்தைப பிறப்பாகவும் ஸ்தாநமாகவுமுடையனாய் துஷ்கரமான தபஸ்ஸாலே சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவுமாய் அதுக்கு நிர்வாஹகனுமான ப்ரஹ்மாவோடே, ஹவிர்ப்பாகபுக்குக்களான ஸகலதேவதைகள். ஸப்ரதிபந்ந க்ஷேத்ரஜ்ஞரான தேவர்களோடும் இந்த்ரனோடுங்கூட ப்ரஹ்மருத்ரர்களைச் சொல்லிற்று அவர்களோ பாதி இவர்களும் க்ஷேத்ரஜ்ஞரென்று தோற்றுகைக்காக. கற்றபெற்றியால் வணங்குபாத. தாந்தாங்கற்ற ப்ரகாரங்களாலே ஆச்ரயிக்கும் திருவடிகளையுடையவனே. கற்றப்ரகாரங்களென்கையாலும், ஆச்ரயணத்தைச் சொல்லுகையாலும் - இவர்களுடைய சாஸ்த்ரவச்யதையையும் ஜ்ஞாநசக்திகளுடைய வைஷம்யங்களையும் சொல்லுகிறது. நாதவேத. நாதனாக வேதப்ரதிபாத்யனானவனே. தேவர்களுடைய ஆச்ரயணத்துக்கடியான ஸம்பந்தத்தைச்சொல்லுகிறது. (க) “[illegible]” (உ) “[illegible]” என்னக்கடவதிறே. நின்பற்றலாலோர்பற்று மற்றதுற்றிலேன். உன் திருவடிகளே அபாச்ரயமாகவிருக்குமதொழிய எனக்கு வேறொரு அபாச்ரயஸ்பர்சமில்லை. உறுதல் - தீண்டுதல். உரைக்கிலே. தேவதாந்தர ஸ்பர்சமில்லையென்று சொல்லுகையும எனக்கு வத்யமென்கை.

அ. என்பத்தெட்டாம்பாட்டு. ப்ரஹ்மருத்ராதிகளுடைய அதிகாரம் ஈச்வரனாலே யென்றார்-கீழ்; இதில் - அவர்கள் தங்களாபந்நிவ்ருத்திக்கு தேவரீர் கைபார்த்திருக்கும்படி பரமோதாரரான தேவரீரையொழிய வேறொருவரை தேவதையாக மதிப்பனோவென்கிறார்.

(க) “ தமீச்வராணாம்பரமம் மஹேச்வரம் ”. (உ) “ பதிம்விச்வஸ்ய ”

மூ.—வெள்ளைவேலைவெற்புநாட்டி வெள்ளெயிற்றராவளாய்
அள்ளலாய்க்கடைந்தவன் றருவரைக்கோராமையாய்
உள்ளநோய்கள்தீர்மருந்து வானவர்க்களித்தவெம்
வள்ளலாரையன்றிமற்றோர் தெய்வநானமதிப்பனே. அஅ.

ப-ரை.—வெள்ளை வேலை—வெளுத்தகடலான க்ஷீராப்தியிலே, வெற்பு நாட்டி—மந்தரபர்வதத்தைநாட்டி, வெள் - வெளுத்த, எயிறு - தந்தபங்க்தியைக்காட்டுகிற, அரவு—வாஸுகியாகிறபாம்பை, அளாய்—சுற்றி, அள்ளலால்—திரைகள் எதிரேவந்து செறியும்படி, கடைந்த அன்று-மதநம்பண்ணின அக்காலத்திலே, அரு வரைக்கு-அரிதான அம்மலை அமிழ்ந்தாதபடி முதுகிலேநின்று சுழலுகைக்கு, ஓர்—அத்விதீயமான, ஆமை ஆய்—ஆமையாய் தரித்து, வானவர்க்கு உள்ள நோய்கள—இந்த்ராதி தேவர்களுக்குண்டான துரிதங்களை, தீர்-தீர்க்கத்தக்க, மருந்து—அம்ருதத்தை, அளித்த—அவர்களுக்குக்கொடுத்தருளுகையாலே, எம் வள்ளலாரை அன்றி - எனக்கு ஔதார்யத்தை ப்ரகாசிப்பித்தவனையொழிய, நான்—அநந்ய ப்ரயோஜநனும் அநந்யசரணனுமான நான், மற்று ஓர்தெய்வம் - வேறொருதேவதையை, மதிப்பனே—ஆச்ரயணீயமாகமதிப்பேனோ.

வ்யா. வெள்ளைவேலைவெற்புநாட்டி. வெளுத்தகடலிலே மந்தரபர்வதத்தைநாட்டி. காளமேக நிபச்யாமனானதான் க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளும்போதை அந்த ப்ரபாக ரஸம் அநந்யப்ரயோஜநர்க்கு அநுபாவ்யமாயிருக்க, அத்தைக்குலைத்து ப்ரயோஜநாந்தர பரர்க்காக அக்கடலிலே கொடுபுக்கு மந்தரத்தைநாட்டி. வெள்ளெயிற்றராவளாய். வெளுத்த தந்தபங்க்தியைக்காட்டுகிற வாஸுகியை அதிலேசுற்றி. தனனை மந்தரபர்வதத்திலே சுற்றி வலிக்கப்புக்கவளவிலே தன் பலஹாநிதோற்றப் பல்காட்டுகிற வாஸுகிக்கு பலாதாநத்தைப் பண்ணி அந்த மந்தரத்திலேசுற்றி. (க) “தேஜஸா நாகராஜாநம் ததாப்யாயித வாஸுகிம்” என்னக்கடவதிறே. எயிறு - பல்லு. அரவு - பாம்பு. அளாய் - அளாவி — சுற்றி. அள்ளலாய்க்கடைந்தவன்று. (உ) “க்ஷுப்யே யாதோமஹோததி:” என்கிறபடியே அம்மஹார்ணவத்தை, “கடல்மாறுசுழன்றழைக்கின்றவொலி” என்னும்படி திரைகள் எதிரேவந்து செறியும்படி கடைந்தவன்று. அள்ளல்—செறிவு. “அன்று” என்கிறது— ஈச்வராபிமாநிகளான ஸகலதேவதைகளும் தங்களாபந்நிவ்ருத்திக்கு அவன் கைபார்த்திருந்தவன்றென்கை. அருவரைக்கோராமையாய். அம்மந்தரம் ஆழங்கால்படாமே தன்முதுகிலேநின்று சுழலும்படி அத்விதீயமான ஆமையாய்தரித்து. அஜ்ஞாதியிலே அநந்யதமனுமென்றுமாம். (ங) “க்ஷீரோதமத்யே பகவாந் கூர்மரூபீ ஸ்வயம் ஹரி: । மந்தராத்ரேரதிஷ்டாநம் ப்ரமதோ பூந் மஹாமுநே” என்னக்கடவதிறே. உள்ளநோய்கள். “ஈச்வரோஹம்” என்றிருக்கிறவர்களுக்கு ஒருப்ராஹ்மணசாப மாத்ரத்தாலே தன்னையும் தன்விபூதியையும் அஸ்ரீ ப்ரவேசிக்கையும், அத்தாலே ஸத்வம் குடிபோகையும், அத்தாலே ஜ்ஞாநஹாநியும் பலஹாநியும், அந்த பலஹாநியாலே வந்த அஸுரபரிபவமும், இவற்றால்வந்த து:கபரம்பரைகளும் நோய்களிறே. தீர்மருந்துவானவர்க்களித்த. இவர்கள் துரிதங்கள்போக அம்ருதத்தை

(க) “தேஜஸாநாகராஜாநம் ததாப்யாயிதவாஸுகிம்” (உ) “அப்ரமேயோமஹோததி:”
(ங.) “க்ஷீரோதமத்யே பகவாந் கூர்மரூபீஸ்வயம்ஹரி: । மந்தராத்ரேரதிஷ்டாநம் ப்ரமதோ பூந்மஹாமுநே”

யும் பிராட்டியுடைய விசேஷகடாக்ஷத்தையும் கொடுத்த, அம்ர்தப்ரதாநத்தாலே பலத்தை யும், பிராட்டியுடைய விசேஷகடாக்ஷத்தாலே ஐச்வர்யத்தையும் கொடுத்தானென்கை. (க) "[illegible]" என்னக்கடவ திறே. எம்வள்ளலாரையன்றி மற்றோர்தெய்வம் நான்மதிப்பனே. (உ) "[illegible]" என்கிற ஔதார்யத்தை எனக்கு ப்ரகாசிப்பித்தவனையொழிய அநந்யப்ரயோஜநனாய் அநந்யசரணனாயிருந்துள்ள நான் வேறொருதைவத்தை ஆச்ரயணீயமாக நினைப்பனோ.

அ. என்பத்தொன்பதாம்பாட்டு. ப்ரஹ்மாதிகளையும் மேன்மைகுலையாதபடி நின்று ரக்ஷித்தவளவன்றிக்கே, (ங) "[illegible]" என்கிறபடியே பாண்டவர்களுக்கு தூத்யஸாரத்யங்களைப் பண்ணித்தாழநின்று ஸத்யஸங்கல்ப னாய்க்கொண்டு அவர்கள் விரோதிவர்க்கத்தை அழியச்செய்து ராஜ்யத்தைக் கொடுத்த உன்னையொழிய வேறொருதைவமுண்டென்று நான் நினைத்திருப்பனோ வென்கிறார்.

மூ.—பார்மிகுத்தபாரமுன் னொழிச்சுவானருச்சுனன்
தேர்மிகுத்துமாயமாக்கி நின்றுகொன்றுவென்றிசேர்
மாரதர்க்குவான்கொடுத்து வையமைவர்பாலதாம்
சீர்மிகுத்தநின்னலாலோர் தெய்வநான்மதிப்பனே. அ௯.

ப—ரை.— பார்—எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ளும்பூமி, (என்னால் ஸஹிக்க வொண்ணாதென்று சொன்ன,) மிகுத்த பாரம்—மிக்கபாரத்தை, முன்—தான் முற்பாடனாய்நின்று, $ ஒழிச்சுவான்-அத்தைத்தவிர்ப்பிக்கைக்காக, அருச்சுனன்-அர்ஜுநனுடைய, தேர்—தேரை, மிகுத்து—பார்த்தபார்த்த இடமெல்லாம்நடத்தி, மாயம் ஆக்கி—பகலையிரவாக்குவது முதலிய ஆச்சர்யங்களையுண்டாக்கி, நின்று-முகம் தோற்றாமே நின்று, கொன்று-எதிரிகளைக்கொன்று, வென்றி சேர்-தங்களுக்கு வெற்றியுண்டாவதாக நினைத்திருந்த, மாரதர்க்கு—மஹாரதரான துர்யோதநாதிகளுக்கு, வான் கொடுத்து—வீரஸ்வர்க்கத்தைக்கொடுத்து, வையம்-பூமியை,ஐவர் பாலது ஆம்-பாண்டவர்கள் பக்கலிலேயாம்படி, சீர் மிகுத்த-புகழ்மிகுந்த, நின் அலால்—உன்னையொழிய, நான்—நீ ஆச்ரிதபக்ஷபாதியென்றறிந்தநான், ஓர் தெய்வம்—வேறொருதைவத்தை, மதிப்பனே—ஆச்ரயணீயமாக நினைப்பேனோ வென்கிறார். [$ 'ஒழிச்சுவான்' என்றது—'ஒழித்துவான்' என்பதற்குப் போலியாம்.]

வ்யா. பார்மிகுத்தபாரம். ஸர்வம்ஸஹையான பூமி தன்னால் பொறுக்கவொண்ணாதென்று சொன்ன மிக்கபாரத்தை. (ச) "[illegible]" என்று தொடங்கி, (ரு) "[illegible]" முன்னொழிச்சுவா னருச்சுனன் தேர்மிகுத்து.

(க) "பீதேம்ர்தே பலிபிர்த்தேவைர்த்தைத்ய சமூஸ்ததா || வத்யமாநாததோதேவா ஹரிவக்ஷஸ்தலஸ்தயா | லக்ஷ்ம்யாமைத்ரேயஸஹஸா பராங்நிர்வர்திமாகதாஃ" (உ) "உதாராஸ்ஸர்வ ஏவைதே" (ங) "க்ர்ஷ்ணாச்ரயாஃக்ர்ஷ்ணபலாஃ க்ர்ஷ்ணநாதாச்சபாண்டவாஃ" (ச) "காலநேமிஹதோயோஸௌ" (ரு) "ததாந்யேசமஹாவீர்யா நர்பாணும்பவநேஷுதே- ஸமுத்பந்நா துராத்மாநஸ்தாந்நஸங்க்யாதுமுத்ஸஹே"

சான் முற்பாடனாய் அதனைத் தவிர்ப்பிக்கைக்காக அர்ஜுநனுடைய தேரைப் பார்த்தஸாரதியாய் இடையில்லாமல் நடத்தி. அர்ஜுநனுக்குத் தான் முற்பாடனாகையாவது - (க) "விஸ்ருஜ்ய ஸசரம் சாபம்" என்று இருந்த அர்ஜுநனை (உ) "கரிஷ்யே வசநந் தவ" என்னப்பண்ணுகையும், யுத்தமத்யத்தில் விஜயபரிகரங்களில் உத்க்ருஷ்டபரிகரமான தேரொன்றுமொழிந்த மதித்துப்படி தேரை நடத்துகையும். ஆயுதமெடுக்கக் கடவதன்றென்று ப்ரதிஜ்ஞை பண்ணுகையாலே ஸாரத்ய வேஷத்திலே அதிகரித்துத் தேரைக்கொண்டே விஜயவ்யாபாரங்களையெல்லாம் பண்ணித் தலைக்கட்டி. மாயமாக்கி. ஆச்சர்யங்களை யுண்டாக்கி. அதாவது - பகலை இரவாக்குகையும், "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுக்கையும்; ஆச்ரிதார்த்தமாகக் காலவ்யவஸ்தையையும் தன் ஸ்வபாவ வ்யவஸ்தையையும் அழித்தானென்கை. நின்றுகொன்று. அர்ஜுநன் செய்தானென்னும்படி முகந்தோற்றாமே நின்று எதிரிகளைக் கொன்று. வென்றிசேர் மாரதர்க்கு வான்கொடுத்து நாம் யுத்தோந்முகரானவன்று விஜயமும் நம்மது, அத்தாலே பூமியும் நம்மதாகக் கடவதென்றிருந்த மஹாரதரான துர்யோதநாதிகளென்ன, அவர்களுக்குத் துணையாய்வந்த த்ரோணாதிகளென்ன, இவர்களுக்கு வீரஸ்வர்க்கத்தைக் கொடுத்து. வையமைவர்பாலதாம் சீர்மிகுத்த நின்னலால். அவர்களுக்கு "ஒருபதந்யாஸமுங்கொடோம், ஸகலமும் எங்களதாக வேணும்" என்றிருந்த பூமியைப் பாண்டவர்கள் பக்கலிலே யாம்படி புகழ்மிகுத்த நின்னையொழிய. சீர் - புகழ். பாண்டவர்கள் விஜயிகளாய்ப் பூமியை ஸகலம் போகிப்பித்தானென்னும்படி புகழ்மிகுத்த வென்னுதல்; "ஆச்ரிதபக்ஷபாதி" என்னும் தன்புகழை மிகுத்தானென்னுதல். ஓர்தெய்வம் நான் மதிப்பனே. ஆச்ரிதபக்ஷபாதியென்றறிந்த நான் வேறொரு தைவத்தை ஆச்ரயணீயமாக நினைப்பேனோ. ... ... ௮௯.

அ. தொண்ணூறாம்பாட்டு. உன்னையொழிந்தாரொருவரை ஆச்ரயணீயரென்றிரேனென்று தம்முடைய அநந்யகதித்வம் சொன்னார் - கீழ்; இப்பாட்டில் - ஆச்ரயணீயர் தேவரீரேயானாலும் தேவரீரை லபிக்கைக்கு தேவரீர் திருவடிகளையொழிய என்பக்கல் உபாயமென்று சொல்லலாவதில்லையென்று தம்முடைய ஆகிஞ்சந்யத்தை யருளிச்செய்கிறார்.

மூ.—குலங்களாயவீரிரண்டி லொன்றிலும்பிறந்திலேன்
நலங்களாயநற்கலைகள் $ நாலிலும்நவின்றிலேன்
புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேன்புனிதநின்
இலங்குபாதமன்றிமற்றோர் பற்றிலேனெம்மீசனே. ௯0.

ப-ரை.— பொறியிலேன் — கண்டகண்ட விஷயங்களிலே விழுந்தும் ஸ்வதந்த்ரமாயிந்த்ரியங்களுக்கு வசப்பட்டு நடக்குமவனாய், புலன்கள் ஐந்தும் வென்றிலேன் — பஞ்சேந்த்ரியங்களையும் நானிட்டவழக்காய் நடத்த சக்தியற்றவனாய், நலங்களாய — சேதநருடைய ருசிக்கநுகூலமாக நல்வழி போகைக்குடலாய், நல் கலைகள் நாலிலும் — மோக்ஷஸாதநங்களைச் சொல்லும் நான்கு வேதங்களிலும், நவின்றிலேன் — அப்யஸிக்கப் பெற்றிலேனாய், குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் — நான்கு வர்ணங்களில் ஒரு வர்ணத்திலும், பிறந்திலேன் — பிறவாதவனாயிருக்கின்றேன்; புனித — ஸ்வஸ்பர்சத்தாலே யாவரையும் சுத்தராக்கவல்ல சுத்தியோகமுடையவனாய், எம் ஈசனே — அநந்யகதிகளான எங்களுக்கு நிர்வாஹகனானவனே, நின் — தேவரீருடைய, இலங்கு — விளங்கா நின்றுள்ள, பாதம் அன்றி — திருவடிகளையொழிய, மற்று ஓர் பற்று இலேன் — வேறொரு ஜீவனோபாயத்தை யுடையேனல்லேனென்கிறார்.

---

(க) "விஸ்ருஜ்ய ஸசரஞ்சாபம்" (உ) "கரிஷ்யே வசநந் தவ" $ (பா) "நாலினும்."

வ்யா. குலங்களாயவித்யாதி. இப்பாட்டு "போற்றிலேன்" என்கிற பதந்தொடங்கிக் கீழ்நோக்கிக் காரணபரம்பரையாலேயும், பாடக்ரமத்தாலே கார்யபரம்பரைபாலேயும் இரண்டுமுகமாக நிர்வஹிக்கும்படி போரும். நம்மை லபிக்கைக்கு உமக்குடைய பக்கனுள்ளதென்னென்ன; ஸம்ஸாரபீஜமான சப்தாதிவிஷயங்களிலே அகப்பட்டு நின்றேன், இதிறே என்பக்கலுள்ளது. "போற்றி" என்று - சப்தாதிவிஷயங்களைச் சொல்லுகிறது, வறள்நாற்றத்தைக் காட்டி அகப்படுத்திக்கொள்ளுமதாகையாலும், அகப்பட்டால் பின்பு புறப்படவிரகற்றிருக்கையாலும், விநாசத்தோடே தலைக்கட்டுகையாலும். சப்தாதிவிஷயங்களை புருஷார்த்தமென்று அநுஷ்டாநமபண்ணுகிற ஸம்ஸாரத்திலே இது அகப்படத் தகாதென்றறிந்த நீர் அவ்விஷயங்களிலே இந்த்ரியங்கள் போகாமே நோக்கமாட்டிற்றிலீரோவென்ன; புலன்களைந்தும் வென்றிலேன். இந்த்ரியங்கள் ஸ்வவசத்திலே யென்னைக்கொண்டுபோக அவையிட்ட வழக்காய்த்திரிந்தே னித்தனைபோக்கி அவற்றிலே ஓரிந்த்ரியத்தை நியமிக்க க்ஷமனாய்த்திலேன். (க) "இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:" என்னக்கடவதிறே. (உ) "யஜ்ஞோ ...வேநஷ்டி" என்றும், (ங) "ஸாங்கோபாங்க உபாஸக:" என்று மித்யாதிகளாலே வேதங்கள் இந்த்ரியஜயத்துக்கு வழிசொல்லாநின்றன, அவ்வேதங்களிலே யிழியபாட்டிற்றிலீரோ வென்ன; நலங்களாய நற்கலைகள் நாலிலும் நவின்றிலேன். நலங்களாயகலைகளாவது—(ச) "த்ரைகுண்யவிஷயா வேதா:" என்கிறபடியே சேதநருடைய குணாநுகூலமாக நின்றநின்ற நிலைகளிலே நல்வழிபோக்கும்படி மாதாபித்ர்சதங்களிற் காட்டிலும் வத்ஸலதரங்களாகை. நற்கலைகளாவது-மோக்ஷதத் ஸாதநங்களிலே நோக்கையுடைத்தாகை. இப்படிப்பட்ட நாலுவேதங்களிலும் இசிலிகைப் பெற்றிலேன். நவிலுதல் - பயிலுதல். கலை - வேதம். ப்ரதமத்திலே அத்யயநம் பண்ணினுக்கிறே ததபலமான அநுஷ்டாநம், அதிறே இந்த்ரியஜயத்துக்கு ஸாதநம். ஆக இப்படி இந்த்ரியஜயத்தில் நான் தூரஸ்தனென்கை. இந்த இந்த்ரியஜயத்துக்கு ப்ரதமஸாதநமான அத்யயநாதிகளில் இழியாதொழிவானென்னென்னில்; குலங்களாயவீரிரண்டி லொன்றிலும் பிறந்திலேன். உபேக்ஷையாலே இழியாதொழிந்தேனல்லேன், அயோக்யனகையாலே யிழியப்பெற்றிலேன். அத்யயநம் த்ரைவர்ணிகாதிகாரமிறே. சதுர்த்தவர்ணத்திலே ஜநித்தவனுக்கும் பாகயஜ்ஞாத் யதிகாரமுண்டு, த்ரைவர்ணிக சுச்ரூஷணத்திலே அதிகாரமுண்டு, அத்தாலே விரோதிபாபம்போகையாலே இந்த்ரியஜயத்துக்கு ஸாதநமாகலாம், அந்நாலுவர்ணத்திலும் பிறக்கப்பெற்றிலேன். இவ்வுத்க்ருஷ்ட வர்ணத்திலே ரிஷிபுத்ரராய்த்திருவவதரித்த விவர் நாலுவர்ணத்திலே பிறந்திலேனென்பானென்னென்னில்; யதுகுலத்திலே அவதரித்தக்ருஷ்ணன் வளர்ந்தருளின கோபகுலத்தையே தனக்குக் குலமாக நினைத்திருந்தாப்போலே, இவரும் வளர்ந்தருளினபடியை நினைத்தருளிச் செய்கிறார். (ரு) "கோபாலகோ யாதவம் வம்சம் ...க்ஷ்யதி" என்று அவதரித்த குலம் கோபகுலம, ரக்ஷ்யகுலம் யதுகுலமாகச் சொல்லாநின்றதிறே. (சு) "ஸபித்ராய ஸ்வபோஷக:" என்னக்கடவதிறே. அதவா, நாலுவர்ணத்திலும் எனக் கன்வயமில்லாதபடியாலே த்ரைவர்ணிகர்க்கே விஹிதமான அத்யயநத்துக்கு அயோக்யனேனேன், அத்யயநம் பண்ணப்பெறாமையாலே வேதார்த்தஜ்ஞாநமில்லையாய், அதின்பலமான வேதார்த்தாநுஷ்டாந மில்லாமை

(க) "இந்த்ரியாணிப்ரமாதீநி ஹரந்திப்ரஸபம்மந:" (உ) "தர்மேணபாபமபநுததி" (ங) "சாங்கோபாங்க உபாஸக:" (ச) "த்ரைகுண்யவிஷயாவேதா:" (ரு) "கோபாலோ யாதவம் வம்சம்மக்ருமப்யுத்தரிஷ்யதி" (சு) "ஸபித்ராயஸ்வபோஷக:"

யாலே இந்த்ரியஜயம் பண்ணப்பெற்றிலேன். அஜிதேந்த்ரியனாகையாலே விஷயங்களின் கையிலே அகப்பட்டுநின்றேனென்கிறாரென்னவுமாம். ஸம்ஸாரபீஜமான விஷயாந்தர ப்ராவண்யமொழிய உம்முடைய பக்கலொருமுதலில்லையாகில், உமக்கு உஜ்ஜீவந ஹேதுவாக நீர் நினைத்திருந்ததென்னென்ன; புனித. விஷயாந்தரப்ராவண்யத்தாலே அசுத்தராய்த் தந்தாம் பக்கல்சுத்திஹேதுவின்றிக்கேயிருக்கும் குறைவாளரையும் ஸ்வஸ்பர்சத்தாலே சுத்தராக்க வல்ல சுத்தியையுடையவனல்லையோ. அதாவது - உத்க்ருஷ்ட ஜந்மமென்ன, வேதஸ்பர்சமென்ன, வேதார்த்தாநுஷ்டாநமென்ன, இவற்றினுடைய ஸ்தாநத்திலே பகவதநுக்ரஹம் நின்று விஷயாந்தர ப்ராவண்யத்தைத் தவிர்த்ததுதருகை. நின்னிலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலேன். இருட்டு மிக்கதனையும் விளக்கொளி வீறுபெறுமாப்போலே, குறைவாளர்க்கு முகங்கொடுக்கையாலே விளங்காநின்றுள்ள திருவடிகளையொழிய வேறு ஜீவநோபாயத்தை யுடையேனல்லேன். எம்மீசனே. வேறுமுதலின்றிக்கே அகதிகளான எங்களுக்கு நிர்வாஹகனானவனே. ... ... ... ... ... ... கூ0.

அ. தொண்ணூற்றோராம்பாட்டு. (க) "ஶாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி" என்று பேறு உம்மதானால் உம்முடைய விரோதிநிவ்ருத்திக்கு நீரேகடவீராகவேண்டாவோ, "நின்னிலங்கு பாதமன்றி மற்றோர்பற்றிலேன்" என்கிறதெத்தாலேயென்ன; ப்ராப்யத்தாலே. அதென்னென்னில்; அசோகவநிகையிலேயிருந்த பிராட்டி தேவரீரைலபிக்கைக்கு ராக்ஷஸவதத்திலே அவள்யத்நம் பண்ணுமன்றன்றோ நான் என்னுடைய விரோதியைப்போக்குகைக்குயத்நம்பண்ணுவது, ஆனபின்பு அநந்யகதியாய் அகிஞ்சநனான என்னை ஸ்வரக்ஷணத்திலேமூட்டி அகற்றுதொழியவேணுமென்கிறார்.

மூ.—பண்ணுலாவுமென்மொழிப் படைத்தடங்கணாள்பொருட்
டெண்ணிலாவரக்கரை நெருப்பினால்நெருக்கினாய்
கண்ணலாலோர்கண்ணிலேன் கலந்தசுற்றம்மற்றிலேன்
எண்ணிலாதமாயநின்னை யென்னுள்நீக்கலென்றுமே. கூக.

ப—தை.— பண் உலாவு—பண்ணோடே சேர்ந்து, மெல்—ம்ருதுவான, மொழி—பேச்சையுடையளாய், படை—வாள்போலே ஒளியையும், தடம்—வைசால்யத்தையு முடைத்தான, கண்ணாள் பொருட்டு—திருக்கண்களை யுடையளான ஸ்ரீஜநகராஜன்திருமகள் நிமித்தமாக, எண் இலா—அஸங்க்யாதரான, அரக்கரை—ராக்ஷஸர்களை, நெருப்பினால்—சாரக்நியாலே, நெருக்கினாய்—அழியச்செய்தநீயே, கண் அலால்—எனக்கு நிர்வாஹகனுமல்லது, ஓர் கண் இலேன்—வேறொரு நிர்வாஹகரையுடைத்தாகாதவனாய், கலந்த—நெஞ்சுக்குப் பொருந்தின, சுற்றம்—பந்துவர்க்கத்தை, மற்று இலேன்—வேறேயுடைத்தாகாதவனாயிரா நின்றேன்; எண் இலாத மாய—அஸங்க்யேயமான ஆச்சர்யசக்தியை யுடையவனே, நின்னை—ஸர்வசக்தியா யிருந்துள்ளவுன்னை, என்னுள்—அகிஞ்சநனான என்பக்கல் நின்றும், என்றும்—நான் கலங்கினவன்றும், நீக்கல்—அகற்றுதொழியவேணும்.

வ்யா. பண்ணுலாவுமென்மொழி. பண்ணோடேசேர்ந்த ம்ருதுவான பேச்சையுடையவள். (உ) "மதுரா மதுராலாபா கிமாஹ மம பாமிநீ" என்று சக்ரவர்த்தி திருமகன் வாய்புலத்தும்படியான வார்த்தைப்பாடுடையவளிறே. "பண்ணைவென்றவின்சொல் மங்

(க) "சாஸ்த்ரபலம்ப்ரயோக்தரி" (உ) "மதுராமதுராலாபா கிமாஹமமபாமிநீ"

ளை" என்றவளிறே. படைத்தடங்கணுள் பொருட்டே. வாள்போலே ஒளியையும் இடமுடைமையையு முடைத்தான திருக்கண்களையுடைய ஸ்ரீஜநகராஜன் திருமகள் பொருட்டு. (க) "நஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்" என்று அவர் வ்யதிரேகத்தில் தரிக்கமாட்டாத கண்களிறே. ஆக, எதிர்த்தலையை "அகலகில்லேன்" என்னப்பண்ணும் பேச்சழகையும் கண்ணழகையு முடையவளென்கை. தம்முடைய வெறுமைசொல்ல இழிந்தவர் பிராட்டியுடைய ஏற்றங்களைச் சொல்லுகிறது, நிஷ்க்ருஷ்டமான இவ்வாத்மஸ்வரூபம் பிராட்டியோபாதியும் ஸ்ரீகௌஸ்துபத்தோபாதியும் விலக்ஷணமென்கைக்காக. ஜநகன் பிறந்தபின்பு பிராட்டி அசோகவநிகையிலே யிருந்தாப்போலே, அஸஹ்யமிறே சேதநனுக்கு சரீரவாஸமும். எண்ணிலாவரக்கரை. அவளைப்போலே விரோதிகள் அஸங்க்யாதராகவேணுமோ, அஞ்சாநிலாகாதோ. நெருப்பினால் நெருக்கினாய் கண். சராக்நியாலே அழியச்செய்தநீ எனக்கு நிர்வாஹகனென்னுதல். (உ) "யதாராகவநிர்முக்தச்சர:" என்கிறபடியே சரஸ்தாநீயனான திருவடியையிட்டு லங்கையைதஹித்து, ராக்ஷஸரைக் கண்கலங்கும்படி பண்ணினநீ எனக்கு நிர்வாஹகனென்னுதல். இத்தால் - என்னுடைய விரோதிவர்க்கத்தையும் பஸ்மமாகப் பண்ணவேணுமென்கை. அலாலோர்கண்ணிலேன். (௩) "லோகாநாம்த்வம் பரோதர்ம:" என்கிற தேவரீரையொழிய வேறொரு நிர்வாஹகரையுடையேனல்லேன், "தயரதற்குமகன்றன்னை யன்றிமற்றிலேன்றஞ்சம்" என்கிறார். (௪) "நத்வாகுர்மி தசக்ரீவபஸ்ம" என்று - பிராட்டிக்கு சக்தியுண்டாயிருக்க ப்ராப்தியில்லாதே தவிர்ந்தாள், எனக்கு சக்தியுமில்லை யென்கிறார். கலந்தசுற்றம்மற்றிலேன். நெஞ்சுக்குப்பொருந்தின பந்துவர்க்கத்தை வேறு உடையேனல்லேன். உத்பாதகரான மாதாபிதாக்கள் தைவம் ரக்ஷிக்கிறதென்று காட்டிலேவிட்டுப் போனார்கள், வளர்த்தவர்களை (ரு) "பிதரம் மாதரம் தாராந்" என்கிறபடியே நான்விட்டேன். (௬) "ப்ராதா பர்த்தாச பந்துச்ச பிதாச மமராகவ:" என்கிறபடியே ஸர்வவிதபந்துவும் தேவரீரே யென்கிறார். பிராட்டிக்குத் தனியிருப்பிலே திருவடிவந்து முகங்காட்டினார், அப்படியே யிருப்பதொரு குளிர்ந்தவிழியும் தேவரீரை யொழிய எனக்கில்லை யென்கிறார். ஜநககுலத்தில் பிறந்த ஆபிஜாத்யமுண்டு அவளுக்கு. "குலங்களாயவீரிரண்டி லொன்றிலும் பிறந்திலேன்" என்றீரே நீரென்ன; எண்ணிலாதமாய. அஸங்க்யேயமான ஆச்சர்யசக்தியையுடையவனல்லையோ. இத்தால் - நிஹீநஜந்மாவாய் சாஸ்த்ராதிகாரியுமன்றிக்கே யிருந்துள்ள பக்ஷிக்கு மோக்ஷங்கொடுத்த சக்தியன்றோ தேவரீருடைய சக்தியென்கை. ராவணன் குறியழியாதே யிருக்க இக்கரையிலே அவன்தம்பியை லங்காராஜ்யத்துக்கு அபிஷேகம் பண்ணிற்று அவன் ஜந்மம்பார்த்தோ. (எ) "அபிஜ்ஞோராஜதர்மாணாம்" என்கிறபடியே அவன் ஜ்ஞாநாதிகனன்றோவென்ன; * அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றிற்று ஜ்ஞாநாஜ்ஞாநங்களில் உள்மானம் புறமானம் பார்த்தோ. நின்னையென்னுள் நீக்கல். ஸாவசக்தியாயிருந்துள்ள வுன்னை, அகிஞ்சநனாயிருந்துள்ள என்பக்கல்நின்றும், க்ஷுத்ரமான உபாயாந்தரங்களைக் காட்டியகற்றாதொழியவேணும். என்றுமே. நான்கலங்கினவன்றும் என்னை விடாதொழியவேணும். ... ... ... ... ... ... கூக.

(க) "நஜீவேயம் க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணாம்" (உ) "யதாராகவநிர்முக்தச்சர:" (௩) "லோகாநாம்த்வம்பரோதர்ம:" (௪) "நத்வாகுர்மி தசக்ரீவபஸ்ம" (ரு) "பிதரம்மாதரம்தாராந்" (௬) "ப்ராதா பர்த்தாச பந்துச்ச பிதாச மமராகவ:" (எ) "அபிஜ்ஞோராஜதர்மாணாம்"

அ. தொண்ணூற்றிரண்டாம்பாட்டு. "நின்னையென்னுள் நீக்கல்" என்றீர், நாம் உம்மையகலாதொழிகைக்கு நம்மளவிலே நீர்செய்ததென், நாம உமக்குச்செய்யவேண்டுவ தென்னென்ன; நிருபாதிகசரண்யரான தேவரீர்திருவடிகளிலே ப்ரவணனான என்னை "உன்னுடையகார்யம் எனக்கு ப(ஹ)ரம், நீ பயப்படவேண்டா" என்று என் பயந்தீர(க) "மாசுச:" என்னவேணுமென்கிறார்.

மூ.—விடைக்குலங்களேழடர்த்து வேன்றிவேற்கண்மாதரார்
கடிக்கலந்ததோள்புணர்ந்த காலியாய! வேலைநீர்
படைத்தடைத்ததிற்கிடந்து முனகடைந்தநின்றனக்
கடைக்கலம்புகுர்தவென்னை யஞ்சலென்னவேண்டுமே. கூஉ.

ப-ரை.— முன்-முதல் முதலில், வேலைநீர் படைத்து-ஏகார்ணவத்தை ஸ்ருஷ்டித்து, அதிலே கிடந்து—க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளி, (அடைக்கலம்புகுந்த இந்த்ராதி தேவர்களுக்காக,) கடைந்து—அத்தைககடைந்து (அம்ருதத்தைக்கொடுத்து,) (ராவணாதிகளால குடியிருப்பிழந்த தேவர்கள நிலைநிற்கைக்காக,) அடைத்து-ஸேதுபந்தம்பண்ணி, குலம்-நாநாவர்ணமான, விடை ஏழ் அடர்த்து-ரிஷபங்களேழையும ஊட்டியாக நெரித்து, (ஸர்வரையும் கண்களாலே தோற்பிக்கும தேவரீரையும,) வென்றி-வென்றிகொள்ளத்தக்கதாய், வேல்—வேல்போன்ற, கண-நோக்கையுடையளான, மாதரார்-நப்பின்னைப்பிராட்டியுடைய, கடி கலந்த-பரிமளிதமான, தோள் புணர்ந்த-தோளையநுபவித்தவனாய், (அவளுக்குப்ரியமாக,) காலி-பசுக்களை மேய்க்குமவனான, ஆய-இடையனே, நின்றனக்கு-தேவரீர் திருவடிகளை, அடைக்கலம் புகுந்த என்னை—சரணமாகப்பற்றினவென்னை, அஞ்சல் என்னவேண்டும—பயப்படாதே கொள்ளென்று ஒருவார்த்தை யருளிச்செய்யவேணும.

வ்யா. விடைக்குலமித்யாதி. "முன்-வேலைநீர்படைத்து அதிற்கிடந்து-கடைந்து-அடைத்து-விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேல்கண் மாதரார் கடிக்கலந்ததோள் புணர்ந்த காலியாய-நின்றனக்கடைக்கலம் புகுந்தவென்னை அஞ்சலென்னவேண்டும்" என்றந்வயம். முன்வேலைநீர்படைத்து. (உ) "அப ஏவ ஸஸர்ஜாதௌ" என்கிறபடியே ஏகார்ணவ ஸ்ருஷ்டியைப்பண்ணி. "வேலைநீர்" என்று-எல்லையான கடலென்னுதல்; திரைக்கிளர்த்தியை யுடைத்தான கடலென்னுதல். "வேலை" என்று-எல்லையும், திரையும். "நீர்" என்று-கடல். அதில்கிடந்து. அதிலேகிடந்து. ஸ்ருஷ்டமான ஜகத்திலே சேதநர்க்கு ஆசரயணருசிபிறந்தவன்று சரண்யரானநாம் தூரஸ்தராகவொண்ணாதென்று க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளி. கடைந்து. அக்கிடை பலித்து தேவர்கள் ஐசவர்யத்தை யிழந்து, (ங) "சரணம் த்வாமநுப்ராப்தாஸ் ஸமஸ்தா தேவதாகணா:" என்கிறபடியே சரணம்புகுர; அவர்கள் இழந்தவற்றை, கடலைக்கடைந்து அக்கடலிலே யுண்டாக்கிக்கொடுத்தவ னென்கை. அடைத்து. அந்த தேவதைகளைக் குடியிருப்பழியும்படி அதிக்ரமத்திலே நடந்த ராவணாதி கண்டக நிரஸநார்த்தமாக, தசரதாத்மஜனாய் வந்தவதரித்து லவணார்ணவத்தை யடைத்து. விடைக்குலமித்யாதி. ப்ரஹ்மாதிகளுக்கு சரண்யனாய் அவர்களாபத்திலே உதவினவளவன்

(க) "மாசுச:" (உ) "அபஏவஸஸர்ஜாதௌ" (ங) சரணம்த்வாமநுப்ராப்தாஸ் ஸமஸ்தாதேவதாகணா:"

றிக்கே, தாழ்ந்தார்க்கு முகம்கொடுக்கைக்காக கோபஸஜாதீயனாய்வந்தவதரித்து ரக்ஷித்தபடி சொல்லுகிறது மேல்; விடைக்குலங்களேழடர்த்து. விடையேழடர்த்தென்னுதல், விடைக் குலமடர்த்தென்னுதல் செய்யாதே இப்படி சொல்லுகிறது - (க) "சாதுர்வர்ண்யம்மயாஸ்ரு ஷ்டம்" என்கிறபடியே கோஜாதியிலும் வர்ணபேதமுண்டாகையாலே. நாநாவர்ணமான ரிஷபங்களேழையுமடர்த்து. நப்பின்னைப்பிராட்டியோட்டை போகத்துக்கு இடைச்சுவரா கையாலே நாநாஸ்வபாவங்களான விடையேழையு மூட்டியாக நெரித்து. குலம்-வர்ணம். "குலங்களாய வீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்" என்றாரிறே. வென்றிவேல்கண் மாத ரார் கடிக்கலந்ததோள்புணர்ந்த காலியாய. (உ) "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" என்றும், "தூதுசெய்கண்கள்" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வரையும் கண்களாலே தோற்பிக்கும் தேவரீரையும் தோற்பிக்கவல்ல நோக்கையுடைய நப்பின்னைப்பிராட்டியுடைய பரிமளிதமான தோளையநுபவித்தது, அவளுக்குப்ரியமாக ரக்ஷகாபேக்ஷையுடைய பசுக்களுடைய ரக்ஷணமே ப்ரயோஜநமாயிருக்குமவனே. (ங) "ஸர்வகந்தஃ" என்கிற அவன் திருமேனியையும் பரி மளிதமாக்கும் தோளென்கை. (ச) "யுவதிச்ச குமாரிணீ" என்கிறபடியே ஸ்வஸத்ர் சமான பருவத்தை யுடையவளாகையாலே செவ்வியையுடைய தோளென்னவுமாம். வென்றி வேல்கண். வென்றியை விளைக்கும் வேல்போலே நோக்கையுடைய கண். "கடி" என்று செவ்வியும், நாற்றமும். நின்றனக்கடைக்கலம் புகுந்தவென்னை. (ரு) "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" (சு) "முமுக்ஷுர்வை சரணமஹம்ப்ரபத்யே" என்று - ஜகத்காரண வஸ்து சரண்யமென்னுமிடம் ச்ருதிஸித்தம். (எ) "சரணம்த்வாமநுப்ராப்தாஃ" என்றும், (அ) "லோகாநாம்த்வம்பரோதர்மஃ" என்றும் - வ்யூஹவிபவங்களில் சரண்யதை ஆப்த வாக்யஸித்தம். அங்ஙனன்றிக்கே, (கூ) "மாமேகம்சரணம்வ்ரஜ" என்று தேவரீர் திருவடிகளிலே ப்ரவணனான என்னை. என்னை. அநந்யசரணனான என்னை. அடைக்கலம்பு குநுகையாவது - என்கார்யம் தேவரீர்க்கே பரமென்று பற்றுகை. (ம) "தவைவாஸ்மிஹிபாஃ" என்னக்கடவதிறே. அஞ்சலென்னவேண்டுமே. தேவரீர் பூர்த்தியையும் என் சிறுமையையும் இடைச்சுவரான விரோதியின் கநத்தையும் பார்த்து நானஞ்சாதபடி (கக) "மாசுசஃ" என்று ஒருவார்த்தை அருளிச்செய்யவேணும். (கஉ) "மாமேகம்சர ணம்வ்ரஜ" என்றதேவரீர்க்கு, (கங) "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என் கை அரிதோ. ... ... ... ... ... ... கூஉ.

அ. தொண்ணூற்றுமூன்றும்பாட்டு. "அடைக்கலம் புகுந்தவென்னை யஞ்சலென்ன வேண்டும்" என்று - பயங்கெட (கக) "மாசுசஃ" என்னவேணுமென்றீர் — கீழ், இவ்வளவே அமையுமேயென்ன; உபாயாந்தரங்களைக் காட்டி என்னை அகற்றுதொழிகைக்

(க) "சாதுர்வர்ண்யம்மயாஸ்ரஷ்டம்" (உ) "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" (ங) "ஸர்வகந்தஃ" (ச) "யுவதிச்ச குமாரிணீ" (ரு) "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" (சு) "முமுக்ஷுர்வை சரணமஹம்ப்ரபத்யே" (எ) "சரணம்த்வாமநுப்ராப்தாஃ" (அ) "லோகாநாம்த்வம்பரோதர்மஃ" (கூ) "மாமேகம்சரணம்வ்ரஜ" (ம) "தவைவாஸ்மிஹிபாஃ" (கக) "மாசுசஃ" (கஉ) "மாமேகம்சரணம்வ்ரஜ" (கங) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"

ளாகச்சொன்ன வார்த்தையன்றோவது, தேவரீருடைய நிரதிசய போக்யதையைக்கண்டு அநுபவிக்க ஆசைப்படுகிறவெனக்கு விஷயாந்தர நிவ்ருத்திபூர்வகமாக 'தேவரீரையே நான் அநுபவிக்கும்படி என்பக்கலிலே இரங்கியருளவேணுமென்று பெரியபெருமாள் திருவடிகளிலநுபவத்தை யபேக்ஷிக்கிறார்.

மூ.—சுரும்பரங்குதண்டுழாய் துதைந்தலர்ந்தபாதமே
விரும்பிநின்றிறைஞ்சவேற் கிரங்கரங்கவாணனே
கரும்பிருந்தகட்டியே கடற்கிடந்தகண்ணனே
இரும்பரங்கவெஞ்சரந் துரந்தவில்லிராமனே. ௯௫

ப-ரை.— கரும்புஇருந்த கட்டியே—ஸ்வாபாவிகமான ரஸத்தையுடைய கன்னல்போலே நிரதிசயபோக்யனானவனாய், கடல் கிடந்த கண்ணனே—திருப்பாற்கடலிலே அபேக்ஷா நிரபேக்ஷனாகக் கண்வளர்ந்தருளுமவனாய், இரும்பு அரங்க—இரும்புபோன்ற சத்ருக்கள் சரீரத்திலே யழுந்தும்படி, வெம் சரம்—க்ரூரமான அம்புகளை, துரந்த—விட்ட, வில் இராமனே—வில்லையுடைய தசரதாத்மஜனாய், அரங்கம் வாணனே—கோயிலுக்கு நிர்வாஹகனாய்க் கொண்டு கண்வளர்ந்தருளுமவனாய், சுரும்பு—வண்டுகளானவை, அரங்கு—படிந்த, தண்—குளிர்ந்த, துழாய்—திருத்துழாய்த்தாரானது, துதைந்து—நெருங்கி, அலர்ந்த—விகஸியாநின்றுள்ள, பாதமே—திருவடிகளிலே, விரும்பிநின்று—அநுபவருசிபிறந்து, இறைஞ்சுவேற்கு—அநுபவிக்கையிலே யிழிந்தவென் விஷயத்திலே, இரங்கு—க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

வ்யா. சுரும்பரங்குதண்டுழாய் துதைந்தலர்ந்தபாதமே. வண்டுபடிந்து சாமஹராமான திருத்துழாய்த் தாரானது அலர்ந்துவருகிற திருவடிகளையே. இதனால்—திருத்துழாயோட்டை ஸம்பந்தத்தாலே ஸர்வாதிக வஸ்துவென்னு மிடத்தையும், திருவடிகளோட்டைச் சேர்த்தியாலே திருத்துழாய்க்குச செவ்வியும் விகாஸமுமுண்டாகையாலே, திருவடிகளோடே சேர்ந்தார்க்கு செவ்வியும் விகாஸமுமுண்டாமென்னு மிடத்தையும், திருத்துழாயாலே அலங்க்ருதமாயிருக்கையாலே நிரதிசயபோக்யமென்னு மிடத்தையும் சொல்லிற்று. விரும்பிநின்றிறைஞ்சுவேற்கிரங்கு. அநுபவருசிபிறந்து அநுபவிக்கையிலே யிழிந்தவெனக்கு இரங்கு. இவன் நாசகரமான விஷயாந்தரத்தில்நின்றும் மீளுவான், நிரதிசயபோக்யமான நம்மை யநுபவிப்பானென்று க்ருபைபண்ணியருளவேணும். தேவரீர்க்கு ஒருஇரக்கமாத்ரம், அது இவ்வாத்மாவுக்கு உஜ்ஜீவநம்; ஆனபின்பு இத்தனையும் செய்தருளவேணும். அரங்கவாணனே. கோயிலுக்கு நிர்வாஹகனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிறவனே. தந்தாம்பக்கல் முதலின்றிக்கேயிருக்க அநுபவத்திலே யிழிந்தவர்களுக்கு, தேவரீரழகாலே விஷயாந்தரப்ராவண்யத்தைத் தவிர்த்து, 'தேவரீர்பக்கல் ஆதரத்தைப்பிறப்பித்து அநுபவிப்பிக்கைக்காகவன்றோ கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. "போதரே யென்று சொல்லிப்புந்தியில்புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்த வழகன்" என்னக்கடவதிறே. கரும்பிருந்தகட்டியே. இவர்க்கு ருசிபிறப்பித்த வுபாத்யாயனைச் சொல்லுகிறது. கோதுண்டாதல் கழிக்குமம்சமுண்டாதலின்றிக்கே ஸர்வதோமுகமாய் ஸாரஸ்யத்தையுடைத்தாய், பாகவிசேஷத்தால் வந்த ஸாரஸ்யமன்றிக்கே ஸ்வாபாவிகமான ஸாரஸ்யத்தையுடைத்தாயிருப்பதொரு கன்னல்போலே நிரதிசயபோக்யனானவனே. கடல்கிடந்தகண்ணனே. பெரியபெருமாளுடைய கந்த (௯௫) த்தை

சொல்லுகிறது. திருப்பாற்கடலிலே அபேக்ஷாநிரபேக்ஷமாகக் கண்வளர்ந்தருளுகிற ஸௌலப்யத்தை யுடையவனே ப்ரஹ்மாவுக்கு க்ஷீராப்திநாதன் உகந்தருளினபடியாலே அங்குத்தை ஸௌலப்யமும வடிவழகும பெரியபெருமாள்பக்கலிலே பரத்யபிஜ்ஞை பண்ணலாம் படியிறே யிருப்பது. இரும்பரங்க வெஞ்சரந்துரந்த வில்லிராமனே. எதிரிகள சரீரத்திலே அழுந்தும்படி தீப்தபாவக ஸங்காசமான அமபுகளைவிட்ட வில்லையுடைய தசரதாத்மஜனே. இத்தால் - " நஞ்சீசவகனர் மருவிய பெரியகோயில் " என்கிறபடியே சக்ரவர்த்தி திருமகனுடைய வீரமும் அபிராமதையும் பெரியபெருமாள் பக்கலிலே அநுபவிக்கலாயிருக்கை. (௧) " ஸேவ்யஸ்ஸம் ஸேவதாம் ஸதா பஸ்யதாம் ஸ்ரீரங்கம் ... " என்னக்கடவதிறே. ப்ராப்யராப் ஸங்கிஹிதராய் நிரதிசய போக்யபூதராய் விரோதிநிரஸந சீலராய் தேவரிருக்க இத்தலையில் குறையுண்டாயிருக்க நான் இழக்கவேண்டுகிறதென்? இரங்கி யருளவேணுமென்கை. " கரும்பிருந்தகட்டியே - கடல்கிடந்தகண்ணனே - இரும்பரங்க வெஞ்சரந்துரந்த வில்லிராமனே - அரங்கவாணனே - சுரும்பரங்கு தண்டுழாய் துதைந்தலர்ந்த பாதமேவிரும்பி நின்று இறைஞ்சுவேற்கிரங்கு " என்றந்வயம். ... ... ... ... ௩௩.

அ. தொண்ணூற்றுநான்காம்பாட்டு. த்வதநுபவ விரோதிகளைப் போக்கவும், அதுக்கதுகூலங்களானவற்றை யுண்டாக்கவும், அநுபவந்தன்னை அவிச்சிந்நமாக்கவும் வேணுமென்றபேக்ஷிக்க ப்ராப்தமாயிருக்க, " இரங்கு ", என்று — இவ்வளவபேக்ஷிக்க வமையுமோ வென்ன; உனக்கு ப்ரகாரமாயிருக்குமதொழிய ஸ்வதந்த்ரமாயிருப்பதொரு பதார்த்தமில்லாமையாலே என்னபிமதஸித்திக்கு உன்னிரக்கமே யமையுமென்கிறார்.

> மூ.—ஊனின்மேயவாவிநீ யுறக்கமோடுணர்ச்சிநீ
> ஆனின்மேயவைந்துநீ யவற்றுணின்றதூய்மைநீ
> வானினோடுமண்ணுநீ வளங்கடற்பயனுநீ
> யானுநீயதன்றியெம் பிரானுநீயிராமனே. ௩௪.

ப-ரை.— உறக்கமோடு—தமோகுணப்பிபவத்தால்வந்த நித்ரையும், உணர்ச்சியோடு—ஸத்வகுணகார்யமான உணர்த்தியும், நீ—உன் அதீநமாயிரா நின்றது; வளம்—கண்டார்க்கு ஆகர்ஷகமான, கடல் பயனும்—கடலிலுண்டாகும் அம்ருதமும் ரத்நாதிகளும், நீ—உன்அதீநமாயிரா நின்றது; ஆனில் மேய ஐந்தும்—பசுக்களிடத்திலுண்டாகும் சுத்திகரமான பஞ்சகவ்யமும், நீ—நீயிட்டவழக்காயிரா நின்றது; அவற்றுள் நின்ற தூய்மை—அந்தபஞ்சகவ்யங்களுக் குண்டான சுத்தியும், நீ—உன் அதீநம்; வானினோடு—நிராலம்பநமான ஆகாசத்திலே வாய்வாதிகள் ஸஞ்சரிக்கிறதும், மண்ணும்—நீரிலேகிடக்கிற பூமிகரையாதே ஸகலாதார பூதையாகிறதும், நீ—உன்னாலே ; யானும்—பத்தனை நானும், நீ—உனக்குப்ரகாரபூதன்; அது அன்றி—அதொழிய, இராமன்—சக்ரவர்த்தி திருமகனான நீயே, எம்பிரான்—அகிஞ்சநரான எங்களுக்குஸ்வாமி.

வ்யா. உறக்கமோடுணர்ச்சி நீ - வளங்கடல் பயனும் நீ - ஆனில்மேயவைந்தும் நீ, அவற்றுள் நின்ற தூய்மைநீ — ஊனில்மேயவாவிநீ — வானினோடு மண்ணும் நீ — யானும்நீ, அதன்றி யெம்பிரானும்நீ இராமனே என்றந்வயம். உறக்கமோடுணர்ச்சிநீ. தமோகுணப்பிபவத்தால் வந்த நித்ரையும், ஸத்வகுணகார்யமான உணர்த்தியு முன்னதீநம். இத்தால்—

(௧) " மேகசயாமம் மஹாபாஹும் ஸர்வஸத்வமநோஹரம் "

சேதநர்க்கு விஷயப்ராவண்ய ஹேதுவான அஜ்ஞாநமும், பகவத்ப்ராவண்ய ஹேதுவான ஜ்ஞாநமும் நீயிட்டவழக்கென்கை. (க) "அநாதிமாயயாஸுப்த:" என்று அஜ்ஞாநத்தை நித்ரையாகச் சொல்லக்கடவதிறே. வளங்கடல்பயனும்நீ. கண்டார்க்கு ஆகர்ஷகமான கடலில் அம்ர்தமும் ரத்நாதிகளும் உன்ஸங்கல்பாதீநம். இது - ப்ரயோஜநாந்தரங்களுக்கும் உபலக்ஷணம். இத்தால் - உன்பக்கல் ப்ராவண்யத்துக்கு விரோதியாய் அஜ்ஞாநகார்யமான பந்தக பதார்த்தங்களெல்லாம் நீயிட்டவழக்கென்கை. ஆனில்மேயவைந்தும்நீ. பசுக்களில் சுத்திகரமாகச் சொல்லுகிற பஞ்சகவ்யமும் உன்னதீநம். அவற்றுள் நின்றதூய்மைநீ. அந்த பஞ்சகவ்யங்களுக்குண்டான சுத்தியும் உன்ஸங்கல்பாதீநம். பரமபாவநரான தேவரீரோட்டை ப்ரத்யாஸத்தியிறே பதார்த்தங்களுக்கு சுத்திஹேது. கோப்ராஹ்மணர்க்கு பகவத்ஸமாராதநோபகரணங்களாகையாலேயிறே சுத்திஹேதுத்வம். (உ) "ப்ராஹ்மணாநாம்கவாஞ்சைவ குலமேகந்த்விதாக்ர்தம் । அநயத்ரமந்த்ராஸ்திஷ்டந்தி ஹவிரந்யத்ரதிஷ்டதி" என்னக்கடவதிறே. கர்மத்துக்கு சுத்திஹேதுத்வம் பகவத்ஸமாராதநமாகையாலே; ஜ்ஞாநத்துக்கு சுத்திஹேதுத்வம் பகவத்விஷயமாகையாலே. (ங) "க்ஷேத்ரஜ்ஞஸ்யேச்வரஜ்ஞாநாத் விசுத்தி: பரமமதா" என்னக்கடவதிறே. (ச) "பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ" (ரு) "பவித்ராணாம்ஹி கோவிந்த: பவித்ரம்பரமுச்யதே." இத்தால்—அநாதிகாலம் விஷயாந்தர ப்ராவண்யத்தால் வந்த அசுத்திபரிஹாரமான பாவநபதார்த்தங்களும் நீயிட்டவழக் கென்கை. ஊனில்மேய ஆவிநீ. சரீரத்திலே தாரகமாக வர்த்திக்கிற பஞ்சவ்ர்த்தி ப்ராணனும் நீயிட்டவழக்கு. இத்தால் - சரீரஸ்திதியும் சரீரவியோகமும் நீயிட்டவழக்கென்கை. வானிநோடு மண்ணும்நீ. நிராலம்பநமான ஆகாசத்திலே வாய்வாதிகள் ஸஞ்சரிக்கிறதும், நீரிலே கிடக்கிற பூமி கரையாதே ஸகலாதாரபூதையாகிறதும் உன்னாலே. அதவா, பந்தகமான ஸம்ஸாரமும் முக்தப்ராப்யமான நித்யவிபூதியும் நீயிட்டவழக்கென்றுமாம். யானும்நீ. பத்தனான நானும் உனக்கு ப்ரகாரபூதன். இததால் - எனக்குருசியில்லாதவன்றும், (சா) "ததாமிபுத்தியோகந்தம்" என்கிறபடியே என்னுடைய ருசி நீயிட்டவழக்கு. அதன்றி. அதொழிய. எம்பிரானும் நீயிராமனே. நினைத்தார்க்கு நினைத்ததைக் கொடுக்கவல்லவ னென்கைக்கு உதாஹரணம் சொல்லுகிறது. சக்ரவர்த்தி திருமகனான நீயே அகிஞ்சநரான எங்களுக்கு ஸ்வாமி. (எ) "அபிவ்ர்க்ஷா:பரிம்லாநா:" என்கிற படியே - ஸ்தாவரபர்யந்தமாக அழகாலும் சீலத்தாலும் பிரிந்து தரிக்கமாட்டாதபடி பண்ணின நீயே எங்களுக்கு நிர்வாஹகன். (அ) "அலமத்யஹிபுக்த்வேந பரமார்த்தை ரலஞ்சந: । ராஜ்யாயாமிநிர்ப்பார்த்தம் ராமம் ராஜ்யேப்ரதிஷ்டிதம்" [புற்பாமுதலாவித்யாதி.] (கூ) "யாகதிர்யஜ்ஞசீலாநாம்" என்று ஒருபக்ஷிக்கு மோக்ஷங்கொடுத்தவனே எங்களுக்கு நிர்வாஹகன்; * அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றினவனே எங்களுக்கு நிர்வாஹகன்.

---

(க) "அநாதிமாயயாஸுப்த:" (உ) "ப்ராஹ்மணாநாம்கவாஞ்சைவ குலமேகந்த்விதாக்ர்தம் । அநயத்ரமந்த்ராஸ்திஷ்டந்தி ஹவிரந்யத்ரதிஷ்டதி" (ங) "க்ஷேத்ரஜ்ஞஸ்யேச்வரஜ்ஞாநாத் விசுத்தி: பரமமதா" (ச) "பாவநஸ்ஸர்வ லோகாநாம் த்வமேவ" (ரு) "பவித்ராணாம்ஹி கோவிந்த: பவித்ரம்பரமுச்யதே" (சா) "ததாமிபுத்தியோகந்தம்" (எ) "அபிவ்ர்க்ஷா:பரிம்லாநா:" (அ) "அலமத்யஹிபுக்த்வேந பரமார்த்தை ரலஞ்சந: । ராஜ்யாயாமிநிர்ப்பார்த்தம் ராமம் ராஜ்யேப்ரதிஷ்டிதம்" (கூ) "யாகதிர்யஜ்ஞசீலாநாம்"

அ. தொண்ணூற்றைந்தாம்பாட்டு. "எம்பிரானும் நீயிராமனே" என்று—நினைத்தார்க்கு நினைத்தத்தைக் கொடுக்கவல்ல சக்தனுமாய் ஸ்வதந்த்ரனுமான சக்ரவர்த்தி திருமகனை உபாயமென்றார் - கீழ்; இதில்- உபாயத்தில் தமக்குண்டான அத்யவஸாயத்தை யருளிச் செய்கிறார், பாஹ்யவிஷயருசியைத் தவிர்த்து, உன்பக்கலிலே ருசியைப்பிறப்பித்து, கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கும்படி புகுர நிறுத்தினநீ, என்னை உபேக்ஷித்து விஷயாந்தர ப்ரவணனும்படி கைவிட்டாலும் உன்னையொழிய வேறொருகதியில்லையென்று தம்முடைய அத்யவஸாயத்தை யருளிச்செய்கிறார்.

மூ—. அடக்கரும்புலன்களைந் தடக்கியாசையாமவை
துடக்கறுத்துவந்துநின் றொழிற்கணின்றவென்னைநீ
விடக்கருதிமெய்செயாது மிக்கோராசையாக்கிலும்
கடற்கிடந்தநின்னலாலோர் கண்ணிலேனெம்மண்ணலே. கூடு.

ப-ரை.— அடக்க அரு—அடக்கவரிதான, புலன்கள் ஐந்தும்—செவிமுதலிய ஐம்புலன்களையும், அடக்கி—விஷயங்களில் போகாதபடி மீட்டு, ஆசை ஆம் அவை—அவ் விஷயங்களிலுண்டான ருசியை, துடக்கு அறுத்து—வாஸனையோடே போக்கி, வந்து—மோக்ஷேச்சையாலேவந்து, நின் தொழிற்கண் நின்ற என்னை—உன் திருவடிகளிலே கைங்கர்யத்தை அர்த்தித்து நின்றவென்னை, எம் அண்ணலே—எனக்கு நிருபாதிகஸ்வாமியாய், நீ—இந்த்ரிய ஜயமேதொடங்கி இவ்வளவும் புகுரநிறுத்தின நீ, விட கருதி-உபேக்ஷிக்கும்படி நினைத்து, மெய் செயாது—ஆரம்பித்த ஆத்மோஜ்ஜீவநத்தை முடிய நடத்தாதே, மிக்கு ஓர் ஆசை ஆக்கிலும்—விஷயாந்தரங்களில் மிக்கருசியை உண்டுபண்ணினுலும், கடல் கிடந்த நின் அலால்—என்நிமித்தமாகத் திருப்பாற் கடலிலே கண்வளர்ந்தருளின உன்னையொழிய, ஓர் கண் இலேன்—வேறொரு நிர்வாஹகரையுடையேனல்லே னென்கிறார்.

வ்யா. அடக்கரும்புலன்களைந்தடக்கி. ஆசார்யோபதேசத்தாலும் சாஸ்த்ர வாஸனையாலும் இந்த்ரியங்களை நியமிக்கவிழிந்தால் நியமிக்கவரிய ச்ரோத்ராதிகளைந்தையும் ஆகர்ஷகமான தன்வடிவைக்காட்டி விஷயங்களில் போகாதபடி மீட்டு, அவற்றுக்குத் தானே விஷயமாம்படி நியமித்து. ஈச்வரன் வடிவழகைக்காட்டி மீட்டானென்கைக்கு இங்குசப்தமுண்டோ வென்னில்; கீழே-"புலன்களைந்தும் வென்றிலேன் பொறியிலேன்" என்றவராகையாலே இங்குச்சொன்ன இந்த்ரியநியமநம் ஈச்வரனாலே யென்னுமிடம் அர்த்தாத்ஸித்தம். தபோபங்கம் பண்ணவந்த ஊர்வசியை மாத்ருபுத்தியாலே நமஸ்கரித்துநின்ற அர்ஜுநனும், (க) "தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவஸுதுஷ்கரம்" என்னும்படியிறே இந்த்ரியநியமநத்தினருமையிருப்பது. ஆசையாமவை துடக்கறுத்து. அவ்வடிவில் பாவநத்வத்தாலே விஷயங்களில் ருசியை வாஸனையோடே தவிர்த்து. விஷயாந்தரருசிக்கடி பாபமேயிறே. வந்துநின் தொழில்கண்நின்றவென்னை. புருஷார்த்தத்தின் மேலெல்லையிலேவந்து உன் திருவடிகளிலே கைங்கர்யத்தை அர்த்தித்து நின்றவென்னை. நீவிடக்கருதி. இந்த்ரியஜயமேதொடங்கி இவ்வளவும் புகுரநிறுத்தின நீ உபேக்ஷிப்பாயாக நினைத்து. மெய்செயாது. ஆரம்பித்தகார்யத்தை முடியநடத்தாதே. மெய்செய்யாதொழிகையாவது - ஆத்மோஜ்ஜீவநத்தை ஆரம்பித்து தத்விபரீதமாக ஆசரிக்கும் மித்யாவ்யாபாரம். (உ) "அந்யதா ஸங்கல்ப்யாந்யதா சரதீதி மித்யாசாரஸ்ஸ உச்யதே" என்னக்கடவதிறே. மிக்கோராசையாக்கிலும். விஷயாந்தரங்க

(க) "தஸ்யாஹம்நிக்ரஹம் மந்யே வாயோரிவஸுதுஷ்கரம்" (உ) "அந்யதாஸங்கல்ப்யாந்யதாசரதீதி மித்யாசாரஸ்ஸ உச்யதே"

வில் ருசியைப்பிறப்பித்தாயாகிலும். ஸ்வவிஷயத்தில் ருசிக்கு க்ர்ஷிபண்ணினவன் சப்தாதி விஷயங்களில் ருசிக்கு உதபாதனனாகக்கூடாது, அப்படிகூடிணுலும். கடல்கிடந்தநின்னலா லோர்கண்ணிலேன் - நான் அபேக்ஷிபாதிருகக என்னுடைய ஹிதார்த்தமாக தரிபாதவிபூதியிலிருப்பைவிட்டு விலக்ஷணமான ஸம்ஸாரத்திலே திருப்பாறகடலிலே கண்வளர்ந்தருளுகிற வுன்னையொழிய வேறொரு நிர்வாஹகரையுடையேனல்லேன். எம் அண்ணலே. அபேக்ஷாநிரபேக்ஷமாக என்னுடைய ஹிதத்தை ப்ரவர்த்திப்பிக்கைக்கடி எனக்கு நிருபாதிக ஸ்வாமியாகையாலே யென்கிறார். உபேக்ஷித்தாலும் விடமாட்டாமைக்கடி நிருபாதிகஸ்வாமித்வம. அண்ணல் - ஸ்வாமி. ... ... ... ... கூ0.

அ. தொண்ணூற்றுரும்பாட்டு. தம்முடைய வ்யவஸாயத்தைபருளிச்செய்தார் — கீழ்ப்பாட்டில்; இதில் - "அஞ்சலென்னவேண்டுமே" என்றும், "இரங்காங்கவாணனே" என்றும் பலபடியாக அபேக்ஷியாநின்றீர், உமமுடைய ப்ராப்யத்தை நிர்ணயித்துச்சொல்லீரென்ன; நான் ஸம்ஸாரத்தையறுத்து உன் திருவடிகளிலே பொருந்தும்படியாக ப்ரஸாதத்தைப பண்ணியருளவேணுமென்று தம்முடைய ப்ராப்யத்தை ப்ரார்த்திக்கிறார்.

மூ.—வரம்பிலாதமாயமாய வையமேழுமெய்ம்மையே
வரம்பிலூழியேத்திலும் வரம்பிலாதகீர்த்தியாய்
வரம்பிலாதபல்பிறப் பறுத்துவந்துநின்கழல்
பொருந்துமாதிருந்தநீ வரஞ்செய்புண்டரீகனே. கூகூ.

ப-ரை.— வரம்பு இலாத—அளவிறந்தஸ்வரூபத்தையும் அளவிறந்த மஹாதாதிபரிணமங்களையுமுடைத்தான, மாய—ப்ரக்ர்திதத்வத்தை ஸ்வாதீனமாகவுடையனுய், மாய—ஆச்சர்யமான ஜ்ஞாந சக்த்யாதி கல்யாணகுணங்களை யுடையனுய், வையம் ஏழும் - ஸப்த லோகங்களிலுள்ளவர்களும், மெய்ம்மையே—அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு, வரம்பு இல் ஊழி—அஸங்க்யாத மான கல்பங்களெல்லாம, ஏத்திலும்—ஸ்தோத்ரம் பண்ணினுலும், வரம்பு இலாத—எல்லைகாணவொண்ணுத, கீர்த்தியாய்—ரக்ஷகத்வ ப்ரஸித்தியையுடையனுய், புண்டரீகனே-தாமரைமலரையொத்த அவயவங்களை யுடையவனே, வரம்பு இலாத-அளவில்லாத, பல் பிறப்பு அறுத்து—பலவகைப்பட்ட பிறப்பையறுத்து, வந்து—அர்ச்சிராதி மார்க்கத்தாலே ஒருதேச விசேஷத்திலேவந்து, நின் கழல்—ஸுரிபோக்யமான உன்திருவடிகளை, பொருநதும் ஆ—பொருந்தும்படியாக, திருந்த—கைங்கர்ய ஸுகமே ஸுகமாம்படி, நீ—என்னுடைய உஜ்ஜீவநார்த்தமாக ஆள்பார்த்து ஸஞ்சரிக்கிற நீ, வரம் செய்—ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணுமென்கிறார்.

வ்யா. வரம்பிலாதமாய. அளவிறந்த ஸ்வரூபத்தையும் அளவிறந்த மஹதாதிபரிணமங்களையுமுடைத்தான ப்ரக்ர்தி தத்வத்தை ஸ்வாதீநமாகவுடையவனே. மாயை-ப்ரக்ர்தி. (க) "[illegible]" என்னக்கடவதிறே. இத்தால்-பந்தகமான ப்ரக்ர்தி நீயிட்ட வழக்கென்கை. மாய. ஆசசர்யமானஜ்ஞாநசக்த்யாதி கல்யாண குணங்களையுடையவனே. மாயம் - ஆச்சர்யம். இத்தால் - கீழ்ச்சொன்ன ப்ரக்ர்தியிலே பத்தராய் தந்நிவர்த்த்யர்த்தமாக தேவரீரை ஆச்ரயித்த சேதநர்க்கு தத்ஸம்பந்தத்தை யறுத்துக்

(க) "அநந்தஸ்யநதஸ்யாந்தம்ஸங்க்யாநம்வாபிவித்யதே"

கொடுக்கைக்கடியான ஜ்ஞாநசக்த்யாதி குணங்களையுடையவனென்கை. வையமேழும்மேய்ம்மையே வரம்பிலூழியேத்திலும் வரம்பிலாத கீர்த்தியாய். ஸப்தலோகங்களும் ஸ்தோதாக்களாக, தந்தாமுடைய விசேஷத்வத்தை யுணர்ந்து ஸ்வரூபாநுரூபமாக அநந்யபரராய்க்கொண்டு அஸங்க்யாதமான கல்பங்களெல்லாமேத்தினாலும எல்லைகாணவொண்ணாத ரக்ஷகத்வப்ரதையையுடையவனே. இத்தால - அசித்ஸம்ஸர்க்கத்தையறுத்துத் திருவடிகளோடே சேர்த்து ரக்ஷித்துப்போந்த ரக்ஷகத்வ ப்ரதையைப் பரிச்சேதிக்கவொண்ணாதென்கை. (க) "வர்ஷாயுதைர்யஸ்யகுணாநுகந்தும் ... வக்தும்ஸமேதா அபி ஸர்வலோகா: । சதுர்முகாயுர்யதி கோடிவக்த்ர:" வரம்பிலாதபல்பிறப்பறுத்து. நம்மைப்புகழாதே அபேக்ஷிதத்தைச்சொல்லீரென்ன; அஸங்க்யேயமான பலவகைப்பட்ட பிறப்பையறுத்து. பலவகையாவது - தேவதிர்யங் மநுஷ்ய ஸ்தாவரங்கள். அஸங்க்யாதமாவது - ஒருஜாதியிலேபிறக்கும் ஜந்மத்துக்கும தொகையற்றிருக்கை. காலம் அநாதி, ஆத்மா நித்யன், பண்ணிவைக்க வல்ல கர்மங்களுக்கு அவதியில்லாமையாலே கர்மாநுகுணமாகப்பிறக்கவிருக்கிற பிறவிக்குந் தொகையில்லை ஜந்மங்களை அறுத்து. வந்துநின்கழல்பொருந்துமா. ஆசிராதிமார்க்கத்தாலே ஒருதேசவிசேஷத்திலே வந்து, ஸுகரிபோக்யமான திருவடிகளிலே, (உ) "சாயாவாஸத்வமநுகச்சேத்" என்கிறபடியே பார்த்தஸ்திதயநர்ஹமாகப் பொருந்தும்படியாக. திருந்த. (ங) "நோபஜநம் ஸ்மரந்நிதம் சரீரம்" என்கிறபடியே திருவடிகளுக்குப் புறம்பானவற்றை ஸ்மரியாதே கைங்கர்யஸுகமே ஸுகமாம்படி. நீவரஞ்செய். என்னுடைய உஜ்ஜீவநார்த்தமாக * ஆளபார்த்துழிதருகிற நீ ப்ரஸாதத்தைப்பண்ணியருளவேணும். புண்டரீகனே. புண்டரீகாக்ஷனே. புண்டரீகாக்ஷனே!. திருக்கண்களை ப்ரகாசமாயிருக்கையாலே புண்டரீகனென்கிறார். (ச) "விஜ்ஞாநம்யஜ்ஞம்தநுதே" என்னக்கடவதிறே. இத்தால - ப்ரஸாதத்தைப்பண்ணுகையாவது - ஒருவிசேஷகடாக்ஷமென்கை. ... ... ... ... ௬௧.

அ. தொண்ணூற்றேழாம்பாட்டு. "வரஞ்செய்புண்டரீகனே" என்றீரே நீர், நம்முடையவிசேஷகடாக்ஷத்துக்கு உம்முடையபக்கலிலே ஒரு முதல் வேண்டாவோவென்ன; திருமார்விலே பிராட்டியெழுந்தருளியிருக்கத் திருக்கையிலே திவ்யாயுதங்களிருக்க ஒருமுதல் வேணுமோ. அங்ஙனேயொருநிர்ப்பந்தம் தேவரீர்க்குண்டாகில் என் விரோதியைப் போக்கி உன்னைக்கிட்டி யடிமைசெய்கைக்கு ஹேதுவாயிருப்பதொரு உபாயத்தை தேவரீரே தந்தருளவேணுமென்கிறார். அகிஞ்சநனாய் தேவரீரைபார்த்திருக்கிற எனக்கு ப்ராப்யமான கைங்கர்யத்தோடு ததுபாயத்தோடு வாசியற தேவரீரே தந்தருளவேணுமத்தனையன்றோ வென்கிறார்.

மூ.—வெய்யவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்துசீர்க்
கைய! செய்யபோதில்மாது சேருமார்ப! நாதனே!
ஐயிலாயவாக்கைநோ யறுத்துவந்துநின்னடைந்
துய்வதோருபாயநீ யெனக்குநல்கவேண்டுமே. ௬௭.

(க) "வர்ஷாயுதைர்யஸ்யகுணாநுகந்யா வக்தும்ஸமேதாஅபிஸர்வலோகா: । சதுர்முகாயுர்யதிகோடிவக்த்ர:" (உ) "சாயாவாஸத்வமநுகச்சேத்" (ங) "நோபஜநம்ஸ்மரந்நிதம்சரீரம்" (ச) "விஜ்ஞாநம்யஜ்ஞம்தநுதே"

ப-ரை.— வெய்ய-வெவ்விதான, ஆழி-திருவாழியையும், சங்கு-ஸ்ரீபாஞ்சஜந்ய தையும், தண்டு—கௌமோதகியென்னும் கதையையும், வில்லும்—ஸ்ரீசார்ங்கமென்னு திருவில்லையும், வாளும்—நந்தகமென்னும் திருக்குற்றுடைவாளையும், ஏந்து—எப்போது தரித்த, சீர்-அழகிய, கைய-திருக்கைகளையுடையனாய், செய்ய போதில்-சிவந்த தாமரை மலரைப்பிறபபகமாகவுடைய, மாது—பெரியபிராட்டியார், சேரும்—நித்யவாஸம்பண்ணு கிற, மார்ப—திருமார்வையுடையனாய், நாதனே—ஸர்வஸ்வாமியானவனே ; ஐயிலாய—ச்லேஷ்மத்தை பரக்ரியாக வுடைத்தான, ஆக்கை நோய் அறுத்து—சரீரமாகிறநோயை யறுத்து, வந்து—ஒருதேச விசேஷத்திலேவந்து, நின் அடைந்து—நிரதிசயபோக்யனை உன்னை பராபித்து, உய்வது ஓர் உபாயம்—அடிமைசெய்து உஜ்ஜீவிப்பதொருவழியை, நீ- எனக்கு இல்லாதவையெல்லாம் தரக்கடவநீ, எனக்கு-உன்கைபார்த்திருக்கிறவெனக்கு, நல்க வேண்டும்—தந்தருளவேணுமென்கிறார்.

வயா. வெய்யவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்து சீர்க்கைய. கானவே பெதிரிகள் தறைப்படும்படியான ஸ்ரீபஞ்சாயுதங்களையும் அநவரதம் வாத்ஸல்யத்தாலே திருக்கையிலே யேந்தினவனே. வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படி யிருக்கிற கையிலே திவ்யாயுதங்களை யேந்தினவனே யென்றுமாம். திவ்யாயுதங்களை யேந்தினபடியே யிருக்கிறது தேவரீர்க்கு ஒருவிரோதியுண்டாயோ, என்விரோதியைப் போக்குகைக்காக வன்றோவென்கை. " எப்போதுங்கைகழலா நேமியான் நம்மேல்வினைகடிவான் " என்னக்கடவதிறே. செய்யபோதில்மாதுசேருமார்ப. சிவந்த தாமரைப்பூவைப் பிறந்தகமாக வுடையளாயிருக்கை யாலே ஸுகுமாரியாய்த் திருமேனிக்கு பரபாகரூபத்தாலே ஆபரணபூதையான பிராட்டி " அகலகில்லேனிறையும் " என்று சொல்லப்படும் திருமார்வை யுடையவனே. இத்தால்- ஆச்ரயண விரோதிபாபத்தைப் பொறுப்பிக்கைக்குப் பிராட்டி ஸந்நிதியுண்டாயிருக்க, அநுபவவிநாசப்யமாய் பகவத்ப்ராப்தி விரோதிகளை அழியச்செய்கைக்கு பரிகாரமுண்டாயிருக்க, மாதா்பிதா்ஸந்நிதியிலே நோவுபடுவாரைப்போலே, சரீரஸம்பந்தத்தாலே நோவுபடக்கட வேனோ வென்கை. நாதனே. ஸர்வஸ்வாமியானவனே. இத்தால் — இவள் புருஷகாரமாகாதே கையிலே பரிகாரமுமின்றிக்கே யொழிந்தவன்றுதான் ஆருடைமை நோவுபடுகிறது. இப்படியிருக்க, புருஷார்த்தஸித்திக்கு என்தலையிலேயுமோருபாயம் வேணுமென்று தேவரீர்க்கு நிர்ப்பந்தமுண்டாகில் அத்தை தேவரீரே தந்தருளவேணுமென்கிறார் மேல்; ஐயிலாயவாக்கை நோயறுத்து. ச்லேஷ்மத்தை ப்ரக்ரியாகவுடைய சரீரமாகிற நோயையறுத்து. தேஹாத்மாபிமாநிகளுக்கு ப்ரார்த்தநீயமான சரீரம் ஜ்ஞாநம்பிறந்தால் வ்யாதியாயிறேயிருப்பது. " ஏய்ந்ததம்மெய்குந்தமாகவிரும்புவர் " என்னக்கடவதிறே. வந்துநின்னடைந்து. ஒருதேசவிசேஷத்திலேவந்து நிரதிசயபோக்யனை உன்னைப்ராபித்து. உய்வதோருபாயம். அடிமைசெய்து உஜ்ஜீவிப்பதொருவழியை. நீயெனக்கு நல்கவேண்டுமே. ஸ்ரியப்பதியாய் திவ்யாயுதோபேதனாய் எனக்கில்லாதவையெல்லாம் தரக்கடவநீயே, எல்லாவற்றுக்கு முன்னை பார்த்திருக்கிற வெனக்குத் தந்தருளவேணும். நல்குதல்-கொடுத்தல், அதாகிறது-தருதல்.

அ. தொண்ணூற்றெட்டாம்பாட்டு. நம்முடைய விசேஷகடாக்ஷத்துக்கு உம்முடைய தலையிலே ஒருமுதல்வேணுமே, என்னை நீயே தாவேணுமென்னக்கடவீரோவென்று பகவதபிப்ராயமாக ; புருஷார்த்தருசியாலே வந்த ப்ராதிகூல்ய நிவர்த்தியும் புருஷார்த்த ருசியுமே ஆலம்பநமாக நான் ஸம்ஸாரதுரிதத்தைத் தப்பும்படி நீயேபண்ணியருளவேணுமென்கிறார்.

பரமசேஷியாய் விலக்ஷண விக்ரஹோபேதனுய ஸௌலப்யாதி கல்யாணகுணயுக்தனு யிருக்கிற நீயிருக்க எனக்கு இழக்கவேணுமோ, வகுத்த சேஷியாவது, சேஷித்வமட்டந்த மில்லையாகிலும் விடவொண்ணுத வடிவழகையுடையனுவது, இவையிரண்டு மில்லையாகிலும் விடவொண்ணுத நீர்மையையுடையனுவது, இப்படிப்பட்ட தேவரீருள்ளீராயிருக்க எனக்கு ஒரு குறையுண்டோ கதறுகின்றேன் தேவரீருடைய இந்தவைலக்ஷண்யங்களை அநுஸந்தித்து பாதராநுஷ்டானம் பண்ணி பலம்தாழ்த்தாரைப்போலே கூப்பிடா நின்றேன்

ஆருளர்களைகண் நான் இப்படி கூப்பிடாநிற்க தேவரீர் ஆறியிருக்கிறது தேவரீரையொழிய வேறு ரக்ஷகராக நான் எனக்கு ரக்ஷகனுகவோ, என்னளவும் புகுராதில்லாத பிறர் எனக்கு ரக்ஷகராகவோ அம்மா உடைமை நசித்தால் இழவு உடையவனதன்றோ அரங்கமாநகருளானே உடையவனுனைம ஸந்நிஹிதனல்லனென்றுதான ஆறியிருக்கிறேனோ ஸம்ஸாரத்தில நன்மைபெறவேணுமென்று கூப்பிடுவாருமுண்டாகக் கூடுமோ என்னுமநசையாலேயன்றோ கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறது . உகூ

அ முப்பத்தாம்பாட்டு. மனத்தில. பாவிதமான காமாத்யபாயங்களில்லை, வசிருத்ராதிகாரமான த்யாநஸம்ஸீர்த்நாதிகளுமில்லை, அணிலகளுக்குண்டான பாவசுத்தியுமில்லை, ஆனைபிடிபட்ட போது நினைத்த நினைவுமில்லை, புண்யதேசவாஸத்தால வரும நன்மையுமில்லையென்று - கீழ அநுஸந்தித்தாலே, இநநன்மைகளொன்றுமில்லை யாகிலும உம்முடையபக்கல தீமைகளில்லையாகில் உமமால வருமிழவில்லாமையாலே உமமை அங்கீகரித்து உம்முடைய கார்யங்களும் செய்கிறோம், அது இருந்தபடி யெனனென்று பெரியபெருமாள கேட்டருள, நன்மைகளொன்றுமில்லாதவோபாதி தீமைகளொனறு இல்லாததில்லை யென்கிறார் - மேல அநுஸந்தித்தாலே அதில இப்பாட்டில்—ஆநுகூல்ய பாவங்களை அநுபாஷித்துகொண்டு, தம்முடைய பரஸம்ருத்த்யைகப்ரயோஜனதவமாகிற அநாத்மகுணத்தைப் பேசுகிறார்.

மூ —மனத்திலோர் தூய்மையில்லை வாயிலோ ரின்சொலில்லை
சினத்தினால் செற்றம்நோக்கித் தீவிளி விளிவன்வாளா
புனத்துழாய மாலையானே பொன்னிசூழ திருவரங்கா
எனக்கினிக் கதியென்சொல்லா யென்னையா ளுடையகோவே ௩௦

ப-ரை —புனம - தன்னிலத்திற்போலே திருமார்பிலே செவ்விபெறும்படியான, துழாயமாலையானே - திருத்துழாய மாலையையுடையவனாய், பொன்னிசூழ - காவேரியாலே சூழப்பட்ட, திரு அரங்கா - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனாய், என்னை ஆளுடைய கோவே - என்னை அடிமைகொண்ட சேஷியானவனே, மனத்தில் — மனஸ்ஸிலே, ஓர் தூய்மை — காமக்ரோதாதிகள இல்லாமையாகிற தூய்மை, இல்லை — இல்லாதவனாய், வாயில் — வாயிலே, ஓர் இன்சொல இல்லை — பிறர்க்கு ப்ரியமாக வசி (ஷி) யாதவனாய், சினத்தினால - கோபத்தாலே செற்றம்நோக்கி பகைமைதோற்றப்பார்த்து, வாளா - வீணே, தீவிளிவிளிவன் - மிகக் கொடுமையாக வார்த்தைசொல்லாநிற்பன்; இனி — தேவரீரை ரக்ஷகமாகப் பற்றினவிடமும், எனக்கு - இப்படிப்பட்ட க்ஷுத்ரகுணங்களையுடையனான எனக்கு, கதி என் — போக்கடியென்? சொல்லாய — அருளிச்செய்யவேணும

வ்யா மனத்திலோர் தூய்மையில்லை (க) "ந தேவாஸ்ய விசுத்தம்" என்னும (௨) "யே த்வஞ்ஞாநவிமூடசேதஸ:" என்னும மாநஸசுத்தியைப் பெற்றுக்குப பரிகர

(க) "மநஸா துவிசுத்தேந" (௨) "யே அஜ்ஞாநவிமூடசேதஸ:"

அமுபபத்திரங்ாமயபாடடு. ஆாதது நமபசகல விமுகரான ஸமஸாரிகளுக்கும் கூட ஆகாதபடி ஸத்திந்தநீர் ஈப்பக்கல வந்தபடி யெனனெனன, பரதிபங்காரிகளாயி ருபபார் செய்யுமவற்றுக்கோரடைவுண்டோ, என்மௌர்க்யததாலே வந்தேனென்கிறார்.

மூ—ஆர்த்துவண டலம்புஞ்சோலை யணிதிரு வரங்கநதன்னுள
காாத்திர ளனையமேனிக கண்ணனே யுனனைக்காணும்
மார்க்கமொன் றறியமாட்டா மனிசரில துரிசனய
மூர்க்கனேனை வநதுநின்றேன மூர்க்கனேன மூர்ககனேனே. ௩௨

ப-ரை— வண்டு—மதுபாநம பணண இழிநதவணடுகள், ஆாதது—சபதித்துக் கொண்டு, அலமபும—அலைபா நிற்கிற, சோலை—பொழிலகளையுடைத்தாய, அணி—ஸம ஸாரததுககு ஆபரணம் போனற, திரு அரஙகம தனனுள—கோயிலிலே கண்வளர்ந்தருளு மவனுய், கார் திரள அனைய—மேகஸமூஹ நதையொத்த, மேணி—திருமேனியை யுடைய னுய், கண்ணனே—ஆசரிதஸுலபனுனவனே, உன்னை காணுமமார்க்கம் ஒன்று—உன்னைப பெறுகைக்கு ஒருபாயம, அறியமாடடா—அறியமாடடாதவனுய், மனிசரில—மநுஷ்யர்க ளுக்குள, துரிசனுய—கர்த்ரிமனுய, மூாககனேன்—பிடிததது விட மாடடாத தண்ணியனுன நாள், வந்துநின்றேன—, மூர்க்கனேன மூாககனேனே—மிகவும மூர்க்ககுணமுடையே னுயிரா நின்றேனெனறு தமமுடைய நிஹீநதையை அருளிசசெயகிறா

வயா ஆாத்துவண்டலம்புஞ்சோலை. திருசசோலையில் மதுவைப்பாநம் பண்ண இழிநத வண்டுகளானவை, அபிநிவேசததாலே பரிச்சேதித்திழிய வறியாதே யிழிந்து கழுதநதே கட்டளைபாகபபருகி, புககமது இருந்தவிடததிலிருக்க வொட்டாமையாலே ஆர்த் துக கொளளாநிறகும முகதா பகவதநுபவஜநிதஹாஷத்துககுப போக்குவீடாக ஸாம காநப் பணணுமாபபோலே ஒரு தேசவிசேஷத்திலே பகவதநுபவததாலே முக்தாத்கு பிறககும விகாரடி திாயக்குககளுக்கும் பிறக்கும்படியா யாயததுக கோயிலின போக்யதை யிருப்பது (க) “ஹாவு ஹாவு ஹாவு அஹமந்நமஹமந்நம்” எனறு - மதுவைப பருகி மது தமக்குள்ள, ஹர்ஷததுக்குப் போககுவிடடுபபாடுவார், ஆடுவார், ஒருவரையொரு வர் சுமபபார், ஒருவரையொருவர் பொகடுவாராணர்களிறே, இவர் தமமுடைய ஸத்தை யுணடாகைககுக கூபபிடுகிறார்; இவை ப்ரீதிககுப போக்குவீடாகக கூப்பிடுகிறன வண் டலம்புஞ் சோலை. மதுபாநம் பணண இழிந்தவண்டுகள மதுவின்மிகுதியாலே பாளயத்தி லகபபடடலைகிற மார்க்கணடேயனைப போலேயும, கிணணகத்தி லகப்பட்ட திருசசோலை போலேயும அலையாநிறகுமாய்த்து அலம்பல - தளும்பல

அணிதிருவரங்கந்தனனுள ஸமஸாரததுக் காபரணம்போலேயாய்ததுக் கோயிலிருப் பது லீலாவிபூதிக்கு நாயகனொருவனுண்டே யாகிலும் கோயிலிலேவந்து ஸந்நிஹிதனல்லா தபோது தாலிகட்டாஸ்த்ரீகளபோலே யாய்தது லீலாவிபூதியிருப்பது. சோலையணிதிருவரங் கம். சோலையை ஆபரணமாகவுடைய கோயிலெனனவுமாம. கார்த்திரளனையமேனி. மதுவெள் ளத்தைக்கண்டு கடலெனறு ப்ரமித்து, மேகஸமூஹஙகள் கழுத்தே கட்டளையாகப பருகி, மெ கிழ்ந்து போகமாடடாதே அவை உள்ளே புகுந்து சாய்ந்தாப்போலேயாய்த்துப்பெரியபெரு

(க) “காயநதிகேசித் ப்ராணமநதிகேசித் ந்ர்த்யநதிகேசித்.”

௩௩—மெய்யெயெல்லாம் போகவிட்டு விரிகுழலாரிற் பட்டு
பொய்யெல்லாம் பொதிந்துகொண்ட போழ்க்கனேன் வந்துநின்றேன்
ஐயனே யரங்கனே யுன்னருளென்னு மாசைதன்னால
பொய்யனேன் வந்துநின்றேன் பொய்யனேன் பொய்யனேனே ௩௩

ப-ரை — மெய் எல்லாம்—மெய்யான நினைவையும் மெய்யானசொலலையும் மெய்யான செயலையும், போகவிட்டு—கைசோரவிட்டு, விரி—விரிக்கப்பட்ட, குழலாரில் பட்டு—கூந்தலையுடைய ஸ்திரீகள்வலையிலே அகப்பட்டு, பொய் எல்லாம்—பொய்யென்று பேர்பெற்றவை யெல்லாவற்றையும், பொதிந்துகொண்ட—நிறைத்துக் கொண்டவனாய், போழ்க்கனேன்—அடைவுகேடனான நான், வந்து நின்றேன் — நிலஜ்ஜனுபலந்து நின்றேன், ஐயனே—எனக்கு ஸ்வாமியாய், அரங்கனே—கோயிலிலேவந்து சந்நிதிபண்ணியிருக்குமவனே உன் அருள் என்னும் ஆசைதன்னால—உனக்ருபையில் எனக்குண்டான ஆசையாலே, வந்து நின்றேன்—வந்தேன். (நான் எப்படிப்பட்டவனென்றால,) பொய்யனேன் பொய்யனேன் பொய்யனேன—எல்லாப்படியாலும் பொய்யனாகவேயிரா நின்றேனென்கிறார்.

வ்யா மெய்யெயெல்லாம் மெய்யாகிறது - பூதஹிதமாய யதார்த்தமாயிருக்குமர்த்தமாய்த்து கீழ்ச்சொன்ன நன்மைசொல்லாவற்றுக்கும் ப்ரதமசிலையாய்த்து ஸத்யமாயிருப்பது (க) "ஸத்யமூலமிதம் ஸர்வம்" என்னக்கடவதிறே. ஐம்பலர்த்தத்தால் துஷ்ப்ய நினைக்கைகுகன், "பகவத்விஷயத்திலே அநாதரித்தாரில் பொய்சொல்லகடவரில்லைகாண்" என்று-தன்னை பக்ஷிக்க நின்றது ப்ராஹ்மணனாகக்ஷஸ்ஸைக குறித்துச் சொன்னிறே பகவத்விஷயத்திலே நாலடிவர நிற்கையாலே. எல்லாம் இவைதான் பலவகையாயிருப்பது மானஸமாக நினைப்பதும் மெய்யாய, அத்தோடே சேரச்சொல்லுவதும் மெய்யாய், செய்வதும் மெய்யாயிருக்கை பர்துவாயிருப்பா ரொருவனுக்கு மெய்யைச் சொல்லிப் புறம்புள்ளார்க்கு அஸத்யனாயிருக்கவும் கூடுமிறே, அதுவுமில்லை; இவையெல்லாம் நானிருக்கிற நாட்டிலும் நடையாடாதபடி வாஸனையோடே போகவிட்டேனென்கிறார். தன்னோடே பரிமாறினாபக்கலிலே மெய்யிருக்குமாகில் தன்பக்கலிலே வந்து பொய்க்கூடுமென்று அவர்கள்பக்கலிலும்மெய்நடையாடாதபடி பண்ணினேனென்கிறார். மெய்களை அஜ்ஞாநகையாலே பொய்யோடும் செலலும்;மெய்கொண்டே நடக்க வேண்டும் தேவரீர் திருவடிகளிலேயிறே அபத்தனாயது நீர் இப்படி மெய்யை கொண்டுபோகவிட்டுக்கு வாஸனை பண்ணிற்று எங்கேயென்ன; விரிகுழலாரில்பட்டு உனகோஷ்டிக்குப் பொய்யானாப்போலேயிறே இவர்கள் கோஷ்டிக்கு மெய்யாகாதபடி ஸத்யனாயிருக்குமவனுக்கு ஸதீகளோடொரு க்ஷணகாலமும ஸம்ஸர்கமாக்காயாய்த்து இருப்பது. விரிகுழலாரில் மயிர்முடித்திருக்கில "இதொரு மயிர்முடியே! மாலைசுற்றின விரகே!" என்று அதிலே வித்தனாயிருக்கும், விரித்திருக்கில "ஒழுக்காக மயிரைவிரித்துப் போகட்டபடியே!" என்று அதிலே வித்தனாயிருக்கும "என்னையுன்செய்கை நைவிக்கும்" என்று—பகவத்விஷயத்தில ஸாத்விகர் படுமதெல்லாம படுமாய்த்து பட்டு வலையிலே யகப்பட்ட சில பதார்த்தங்களைப்போலே தன்னால மீளவொண்ணாதபடி யகப்படுகை ஆசார்யோபதேசத்தாலே வருந்தவிஷயத்தில் * பனிமருங்குழல்களைக் கண்ணாலேகாணுகிற்க, செஞ்சுஸ்த்ரீகள்பரகவிலேயாமபடியிறே அழுக்கப்பாடிருப்பது

(க) "ஸத்யமூலமிதம் ஸர்வம்"

பொய்யெல்லாம் பொதிந்துகொண்ட. மெய்யைப்புடைவிழித்தாப்போலே பொ ளைக் கட்டுவித்தேன். பகவத்விஷயமெய்ஸ்வர்ககம பொய்பகை மெய்யாக்குமாப்போலே த்து - இவ்விஷயப ஸம்யகை அஸத்யாக்கும்படி எல்லாம் மெய்க்குச்செல்லனவை னெல்லாம் இதுக்கு முன்பிறே "பொய்" என்று போபெறுதையெல்லாவற்றை தப்போடே சேர்த்துக்கொண்டாராயதது பொதிந்துகொண்ட அவற்றிலொன்றுஞ் சோ ரபு பொதிந்துகொண்டேன. காட்டா ரதாமயிமத விஷயங்களுகளுக் கார்த்திகைக்கு பொய்சொல்லவேண்டினால, அவர்களும் என்பக்கலிலேவந்து கேட்டுப்போம்படி பொதி கொண்டேன் எட்டுப்புரியுககட்டினாய்த்து. போழ்க்கனேன் வந்துநின்றேன எனனே. லந்தித்தால் பொய்யனன்றே, அவகுதனைக்காகாரவனென்று மீளவிறே யடுப்பது, ளைறையனுகையாலே நிலஜ்ஜனாய் வந்துகொடுநின்றேன நின்றேன் ஸாதாராஷடாகட ளிபலத்துக்கு அவ்ஸாபதிகஷாய நிற்பாரைப்போலே வந்துநின்றேன். போழ்க்கனே போழ்க்கமை - பண்ணுறை - கதிருர்யதை

இப்படிப்பட்ட நீ சாதமாத்யுபெதர்சேரும் நம்பக்கலிலேவருவானென, விசி லாபககல் போகிறனன,ஐயனே என்னுலறிந்துக்கொள்ளவொண்ணாத நிருபாதிக ஸம பபூபாக வந்தேன எத்தனையேனும அதிதியிலே கைவளர்ந்த ப்ரஜைகளுக்கும் யாதாயி களிருக்குமிடத்தில, பிறர்காணுதபடி புழைககடையாலேவந்துபுகுராலாயபடி பிறே பாட ருப்பது. அரங்கனே. நம்மை "நிருபாதிகபந்து" என்றறிந்தது சாஸ்த்ர வாஸனைய யோ, ஆசார்யோபதேசத்தாலேயோ வென்ன, அவற்றாலன்று, கோயிலிலேவந்து க ளர்ந்தருளுகிறபடியைக் கண்டறிந்தேன்

நித்யவிபூதியிலிருப்பைக் காற்கடைசகொண்டு, அநபிமதமான ஸம்ஸாரத்திலே ஸாரிகளுடைய உஜ்ஜீவநமே ப்ரயோஜநமாகக் கண்வளர்ந்தருளுகிறபடியாலே, இஜ்ஜ களில் தேவரீர் திருவடிகளுக்காகாதாரில்லை யெனுமிடத்தையும இக்கிடைதானே உ சிக்கிறதில்லையோ, நம்பக்கலிலேவந்து நீகொள்ளப்புகுகிற காரியமென்னென்ன; உ ளானுமாசை தன்னால் - வந்துநின்றேன தேவரீர் க்ருபையினபக்கல் எனக்குண்டான யாலேவந்தேன தந்தாமை முடியச்சூழ்க்கச கொண்டவர்களுக்கும தேவரீர் க்ரு கைபண்ணலாமபடியிறே தேவரீர் க்ருபையிருப்பது. ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே அழிபகு தேவரீர் உத்யோகித்ததசையிலும காகத்துக்குத் திருவடிகளிலே புகுரலாமபடியிறே ரீர் க்ருபையிருப்பது. (க) "ஸ்யா ஸ்வ[illegible]" எ கடவதிறே.

உள்ளுறைபக்கல நன்மைகளில்லாமையுமறிந்து தீமைகளுண்டென்னுமிடமும ஸம்பந்தமுமறிந்திருக்கும்பக்கல வந்தீரல்லீரோ, அதிகாரிகளில் இப்படிப்பட்ட உம்மை ராம் தேடியிருக்கிறது, இதுதான் மெய்யோ என்ன; பொய்யனேன். நிரூபித்தவிட இதுவும்பொய்யாயிருந்ததென்கிறார். ஸ்வதஸ்ஸாவஞ்ஞரான தேவரீர ஸந்நிதியிலே பொன்று சொல்லலாவது என்பக்கலுண்டோ வென்கிறார். பொய்யனேன் "தீமைகள் எ லாதனவில்லை" என்று சொன்ன இவ்வார்த்தைகள். (உ) "[illegible]

(க) "வதார்ஹமபிகாகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத" (உ) "அஹமஸ்ம்யப ராதாலய:"

என்னும் வார்த்தை. இவ்வதிகாரிக்கு தேவரீர் வைக்கிற விஷயீகாரம் வார்த்தை யென்று சொன்னேனித்தனை, மன்தன்மை யெல்லாம் சொல்லிற்றுச் சொன்னேனாயக்கேன. பொய்யனேனை.ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான தேவரீர் இப்படிப்பட்டவனென்று மெய்யென்று பக்ஷிக்கும்படி. பண்டு நான்பொய் சொன்னபடி. தாம் கீழ் " ஆதரம்பெருகவைத்தவழகன் " என்னுமவர், ' கணணிணைகளிக்குமாறே " என்னும,' பனியரும்புதிருமாலோ " என்னும,"டகொளக் கருகுமாலோ " என்னும சொன்ன பொய்ம்மாலைகளை அநுஸந்திதது " பொயயனேன் பொய்யனேனே " என்கிறார். மெய்கொண்டு பரிமாறுமவன்பெண் தேவரீர் திருவடிகளிலே சாத்தினேன் பொய்சொன்னேனென்கிறார் . . ... ௩ ரு.

அ முப்பத்துநாலாம்பாட்டு உள்ளத்தே ஜ்ஞாநப்ரஸாத்வாரமான நெஞ்சிலே நித்யவாஸம்பண்ணுமவனாய் நங்குற்றங்களை நோக்கவறியும் ஸர்வஜ்ஞனான விவனை பொய்யனான்கிடடி அவத்யத்தைவிளைத்து என்னகாரியம் செய்தேனென்று லஜ்ஜித்து இதிற் காட்டில் நங்குற்றமறிகைக்கு ஜ்ஞானமின்றிக்கேயிருக்கிற ஸம்ஸாரிகளோடே முடிந்துபோகைநய னென்றென்று பெரியபெருமாள் திருவடிகளிலே நசையறுத்து அகலுகிறார்

மூ —உள்ளத்தே யுறையும்மாலை யுள்ளுவா னுணர்வொன்றிலலாக
  கள்ளத்தேன நானுந்தொண்டாய்த் தொண்டுக்கே கோலம்பூண்டு
  உள்ளுவா ருள்ளிற்றெல்லா முடனிருந் தறிதியென்று
  வெள்கிப்போ யென்னுள்ளேநான் விலவறச் சிரித்திட்டேனே ௩௪.

ப-ரை —உள்ளத்து - நெஞ்சிலே, உறையும - எப்போதும வர்த்திக்கும, மாலை— ஸர்வாதிகனானவனை, உள்ளுவான் — அநுஸந்திக்கைக்கிடான, உணர்வு ஒன்று இல்லா - ஆத்மஜ்ஞாநமென்ன பகவத்ஜ்ஞாநமென்ன தேஹவ்யவபாவஜ்ஞாநமென்ன இவற்றில் ஒன்று மில்லாதவனாய், கள்ளத்தேன் — ஜ்ஞாநஹீநனென்று என்னை நாட்டாரறியாமல் மறைத்துப் போருகிறவனாய், நானும — ஒருவகை நன்மையுமின்றிக்கேயிருக்கிற நானும, தொண்டாய் — டனானுடைய அடிமையிலே அந்வயித்தவனாய், தொண்டுக்கே கோலம்பூண்டு — அடியார்போல ஸாமரூபங்களைதரித்து, உள்ளுவார் உள்ளிற்று எல்லாம — அநுஸந்திப்பார் அநுஸந்திக்குமதெல்லாம், உடன் இருந்து அறிதி என்று — கூடவிருந்து அறியுமவனென்று, நான் —, என னுள்ளே — எனக்குள்ளே, வெள்கி, லஜ்ஜைப்பட்டு, விலவு அற சிரித்திட்டேன் — விலாக்க ளொடியும்படி சிரித்தேனென்கிறா

வ்யா உள்ளத்தே நினைவுக்கு வாய்த்தலான நெஞ்சிலேயிருக்குமவனாய்த்து. அறமுள்ளாரொருவனுக்கிறே கண்ணால்கண்டாருக்கு அவ்வருகறியானென்றிருக்கலாவது உறையும் ஸதாஸந்நிஹிதனாயிருக்கை போக்குப்பகுதியுண்டாகிலிறே போனபோதாக மூலையடியே நடக்கலாவது மாலை. ஸர்வாதிகனை. ஆத்மாவுமுள்ளே வர்த்தியாநிற்கச்செய்தே யவனதுவும் அறியமாட்டான; ஆகாசம் வ்யாபியாநிற்கச்செய்தே வ்யாப்யத்தைக்குறித்து அதுக்கு நியந்த்ருதையில்லை. இவன் ஸர்வஜ்ஞனுப ஸர்வநியந்தாவாயிருக்கும் உள்ளுவா னுணர்வு. நம்முள்ளே வர்த்தியாநின்றான் என்று அநுஸந்திக்கைக்கிடான ஜ்ஞாநமில்லை, உணர்வொன்றில்லா ஆத்மஜ்ஞாநமுண்டாகிலிறே பகவத்ஜ்ஞாநமுண்டாவது அதில் ப்ரதமத்திலேயறியவேண்டிய ஆத்மஜ்ஞாநமில்லை, ஸர்வாபேக்ஷயஜ்ஞாநமுமில்லை ; தேஹவ்யவபாவத இலவுமஜ்ஞாநமில்லை

யிருக்கப் பார்த்தேனில்லை; நீர்கிட்டின ப்ரயோஜந மிறிதே, நாம தோஷத்திலே அவிஜ்ஞா தா, அவர்கள் குணங்களில் அவிஜ்ஞாதா, அவர்கள் தோஷத்திலே ஸர்வஜ்ஞர், நாம் குணஸர் வஜ்ஞர்; ஆசையாலே நம்வாசல் ஸர்வாத்மாக்களுமென்ன; (இது உகதிமாத்ரமேயோ, அநுஷ்டாநமு முண்டோவென்ன, பண்டே அடிபட கிடக்கிறது காணுமென்று த்ரிவிக்ர மாபதாநத்தைக் காட்டிக்கொடுத்தான்;) த்ரைவிக்ரமாபதாநம் கேட்டபடியோ, வஸிஷ்ட சண் டாள விபாகமற எல்லார் தலையிலும் நமகால பொருந்தினபடி அறியீரோவென்று, ஸௌலப் யத்தையும் தன்செல்லாமையையும் காட்டி ஸமாதாநம்பண்ண ஸமாஹிதராகிறார்.

மூ — தாவியன் றுலகமெல்லாந் தலைவிளாக் கொண்டவெந்தாய்
சேவியே னுன்னையல்லாற் சிக்கனச் செங்கண்மாலே
ஆவியே யமுதே யென்ற னாருயிரனைய வெந்தாய்
பாவியே னுன்னையல்லாற் பாவியேன் பாவியேனே. ௩௫

ப-ரை — அன்று — மஹாபலியாலே அபஹ்ருதமானவன்று உலகம் எல்லாம் — ஸகலலோகங்களையும், தாவி தலைவிளாக்கொண்ட — எல்லார் தலைக்கும் அவ்வருகாம்படி தாவி அளந்தருளினவனாய், எந்தாய் — எனக்குசேஷியாய், செங்கண்மாலே — புண்டரீகாக்ஷனை ஸர்வேச்வரனே, உன்னை அல்லால் சேவியேன் — உன்னையொழிந்தவர்களுக்கு ஆட்செய்யேன்; ஆவியே — எனக்குப்ராணபூதனாய், அமுதே — அம்ருதம்போலே ரஸாவஹனாய், என்றன் ஆர் உயிர் அனைய — என் அருமந்த ப்ராணனுக்கு அந்தராத்மாவாய், எந்தாய் — என ஸ்வாமியான வனே, பாவியேன் பாவியேன் — மஹாபாபியான நான், உன்னை அல்லால் — உன்னையொழிய, பாவியேன் — புறம்பொருவரை நெஞ்சாலும் நினையேனென்கிறார்

வ்யா. தாவி. உங்கள தலையிலே நாம காலைவைக்க புகாநின்றோமென்னில்; தார் மிக வாஸனையாலே ஸம்மதியாதே ஆணையிடுவார்களிறே "திருவாணை நின்னாணை" என்று - ஸாத்விகர் திருவடிகளை லபிக்கைக்கு மறுக்கவொண்ணாதபடி யிடுமாணையை, திரு வடிகளைக் கிட்டாமைக்கு இடுவார்களாய்த்து, இவர்களறியாதபடி ஆராய்ச்சிலே எல்லார்தலை யிலும் திருவடிகள்பட வளர்ந்தான் தாவுதல் - கடத்தல் அன்று மஹாபலியாலே அப ஹ்ருதமாய், தன்னுடைய சேஷித்வமும ஸம்ஸாரிகளுடைய சேஷத்வமும அழிந்துகிடந்த வன்று. உலகமெல்லாம் மஹாபலியால அபஹ்ருதமான அளவேயன்றியே ப்ரஹ்மலோக பர்யந்தமாக ஸகலலோகங்களையும், வஸிஷ்ட சண்டாள விபாகமற எல்லார்தலையிலும திரு வடிகள் படும்படி வளர்ந்தபடி. தலைவிளாக்கொண்ட ரக்ஷகத்துடைய வளவல்லவாய்த்து ரக்ஷகனுடைய பாரிப்பு, (க) "ககுதிக்ஷணோபஸ்ருஷ்டி" என்னக்கடவதிறே எந்தாய். "அமராசெனனிப்பூவினை" என்று - நித்யஸூரிகள் சிரஸாவஹிக்கும் திருவடிகளை விமு கரான ஸம்ஸாரிகள் தலையிலே வைக்கைக்கு ஹேதுவென்னென்னில், அவர்ஜநீய ஸம்பந்த மெனகிறார் நாங்கலையிலும் திருவடிகளை வைக்கையினாலே "எந்தாய்" எனகிறார். உறங் குகிற ப்ரஜையைக் கட்டிக்கொண்டு கிடக்கும தாயைப்போலே அன்று தனபேறாகவிறே ரக்ஷித்தது. அன்றியாக குறைதீர முறையறிந்தவினாலு உபகாரஸ்ம்ருதியாலே "எந்தாய்" எனகிறார் ஸம்ஸாரிகள் இன்றுமறிந்திலர்களே, அவர்களுக்குமாகத் தாம் உகக்கிறாரிறே.

---

(க) "அக்ஷதிஷ்டந்தசாங்குலம"

அ முப்பத்தாறும்பாட்டு. மழைக்கு அபேக்ஷயின்றிறு அகலாதபடி தன் நீர்மையைக்காட்டிச் சேரவிட்டுக்கொண்டானென்கிறார்-கீழ்ப்பாட்டில், இதில்-தம்முடைய அபேக்ஷையைக் கழிந்தவாறே பரப்பத்தில் த்வரையாலே, யோக்யரைக்கொண்டுபோய அடிமைகொள்ளும் தேசத்தேறக்கொண்டுபோகவேண்டியிருந்தார், அதுசெய்யக்கண்டிலர், அதுக்கு இவரை அகலாமே சேரவிடுகைக்குத் தான்பட்டபாடறியுமவனுகைபாலே ஆமமறவும் பரிசிகவேணு மென்று பேசாதிருந்தான்; விஷயங்கள் நடையாடுகிறதேசத்திலேயிருந்து க்லேசப்பட்டே போமித்தனையாகாதே! என்று பாரப்யத்தில த்வரையாலும் விரோதியில அருசியாலுமாக, பெரியபெருமாளை கண்வளர்ந்தருள அரிதாமபடியாகவும, கேட்டாரெல்லாரும நீராமபடி யாகவும பெருமிடறுசெய்து கூப்பிடுகிறார்.

மூ —மழைக்கன்று வரைமுன்னேந்தும் மைந்தனே மதுரவாறே<br>
உழைக்கன்றே போலநோக்க முடையவர் வலையிற்பட்டே<br>
உழைக்கின்றேற் கென்னைநோக்கா தொழிவதே யுன்னையன்றே<br>
அழைக்கின்றேன் ஆதிமூர்த்தி யரங்கமா நகருளானே ௩௯

ப-ரை மழைக்கு—இந்த்ரனேவின ஸம்வர்த்தகம என்கிற மேககணங்களாலே, அன்று—இடையரும் பசுக்களும வருந்தினவன்று, வரை—கைக்கெட்டிற்றொருமலையை, முன—அவை நலியப்படுவதற்கு முன்னமே, ஏந்தும—தரித்த, மைந்தனே—பெருமிடுக்கனுப், மதுர ஆறே—இனிதான நதியையொத்தவனே, உழைக்கன்றேபோல நோக்கம் உடையவர் வலையில் பட்டு—மான்கன்றையொத்த விழியையுடையரான ஸ்த்ரீகளுடைய வலையிலே அகப்பட்டு, உழைக்கின்றேற்கு—துடிக்கிறவனுன, என்னை—, நோக்காதொழிவதே—கடாக்ஷியாதொழிகிறுயே, ஆதிமூர்த்தி-ஜகத்காரணபூதனுய, அரங்கமாநகருளானே-, உன்னை-ரக்ஷ்யவர்க்கம் தேடித்திரிகிற தேவரீரை, அழைக்கின்றேன—ரக்ஷகாபேக்ஷையுடையனாயக் கொண்டுகூப்பிடாநிற்க,என-ரக்ஷித்தருளாமல் தாமஸிப்பதற்கு ஹேதுவென்னென்கிறார்.

வயா மழைக்கு மழையென்றும ஆனையென்றும வ்யவஸ்திதமாயாயத்து இவர்கள் சேஷ்டித்திருப்பது இப்போது கோவர்த்தநோத்தரணத்தைச் சொல்லுவானென்னென்னில், அவனைப்பற்றிக் தம துக்கநிவ்ருத்தியைப்பண்ணிக்கொள்ள நினைத்தவராகையாலே அவனுடைய ஆபத்ஸகத்வத்தை யருளிச்செய்கிறார். பசித்தவர்கள் "சோறே! என பசியைப்போக்கவேணும்" என்னுமாப்போலே ஆபத்ஸகனே! என துக்கநிவர்த்தியைப் பண்ணித்தரவேணுமெனகிறார் அன்று (௧) "கோகோபீஜநஸங்குலமதீவார்த்தம்" என்றபடியே—கன்றுகளும, பசுக்களும், இடையரும, நடுங்கினவன்று அன்று மின்றுமே பார்த்து ஆபத்து அன்று கல்வர்ஷத்திலகப்பட்டாரை ரக்ஷித்தாப்போலே இன்று துக்கவர்ஷத்தே யகப்பட்ட வென்னை ரக்ஷிக்கவேணும கலவர்ஷத்திலே நோவுபடவேணுமோ ரக்ஷிக்கும்போது, துக்கவர்ஷத்தே நோவுபட்டாரை ரக்ஷிக்கலாகாதோ, ஒருவூராக நோவுபடிலோ ரக்ஷிக்கலாவது; அவ்வூராகப்பட்ட நோவை ஒருவன்பட்டால் ரக்ஷிக்கலாகாதோ.

வரை. இந்த்ரன ஏவ ஸம்வர்த்தகமேககணம வர்ஷிக்க உத்யோகித்தவாறே திருவாழியை நியமிக்கவவஸரமில்லாமையாலே கைக்கெட்டிற்றொரு மலையை யெடுத்து ரக்ஷித்தருளித்தது இத்தால - இனத்தைப் பரிகாரமாகக்கொண்டு இனத்தை ரக்ஷிக்கவேணும்

(௧) "கோகோபீஜநஸங்குலமதீவார்த்தம்"

யாஸஹேதுவாக எனக்கொரு நல்வார்த்தை யருளிச்செய்யவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய; அவர்கள் சொன்னவையடங்க ஸ்ரவணஞ்செய்து ஸ்ரீ மார்க்கண்டேய பகவான் சொல்லுவதாகச் சொன்னதாயிருக்கும் பிச்சைச்லோகம். பின்பு சிறாமப்பிள்ளையுடைய ஆபத்தசையிலே பட்டர் அருளிச்செய்ததாயிருக்கும் தந்தையுந் தாயுமாவார் பரிபத்துக்கும் கடவார், அதுக்கு கடவார்.

எளியதோரருளுமன்றே எனதிறத்து என விஷயத்தில் ஈலையையுடைத்தா ரக்ஷிக்கவேணுமோ, தம்மையொழிய வேறேயொரு பாபோஜனத்தைக் கணிசித்தேனாய் அத்தைக் கொடுத்து விடுகிறேனென்றிருக்கிறரோ ஸ்ரீ விபீஷணாழ்வான்கள் ரக்ஷணையோலே வில்லும் கோலும் கைக்கொண்டு ரக்ஷிக்கவேணுமென்றிருக்கிறரோ, * குளிர் கொடுக்கடக்ஷடிக்கி என் விஷயத்தில் பண்ணவேண்டுவது. எம்பிரானார் எனக்கு உபகாரகரானவர். இன்றுகிற தசையிலும் உபகாரகரென்பானென்னென்னில், செய்த அம்சத்தை இல்லைசெய்யுமவரல்லாமையாலே அதைமுன்னிடுகிறார் அடியிலே முறையையுணர்த்தி, அதுக்குமேல் ப்ராப்யப்ராபகங்கள் தாமே யென்னுமிடத்தை உணர்த்தி, இப்போதும் நமக்கு ப்ரீதி கேட்கவல்ல ஸந்நிதிதரா யிருக்கிற ஆகாரமுமுண்டிறே

அளியன நம்மையலேனுர் "அளி" என்னு-தவானவி இவன நமக்கு நல்லன், நம்முடைய பையனென்று ஒருவார்த்தை யருளிச்செய்யக் கேட்க வாய்த்து இவ்வாசைப்படுகிறது; ஆழ்வீரென்னுமது இவர்க்கு அஸஹ்யமாய்த்து

சேஷபூதரான நாம் இவர்த்தங்களை நினைத்திருக்கவமையாதோ, அவன் சொல்லவேணுமோவென்னில், அதுபோராது, சேஷியானவனும் இதுக்குமேலெ பூர்த்தியென்றுபத்து சேஷத்வம் நிலைநின்றதாவது,-மணக்கால்நம்பி நம்மாண்டு திருமயிற்மாலைமாரினுக்குறிற ஸையுறிற பிள்ளைப்பிள்ளையாழ்வான்தம்பி அப்பிள்ளைபாழ்வான்வாயாலே "ஈளி" என்னப் பெற்றேனென்றுறிறே. அம்மலோகொடியவாறே ஆர்த்தத்வனிகேட்டால் எழுந்திருக்கவேண்டாவோ ஆர்த்தத்வனிகேட்டும் இவர்கண்ணுறங்குவதே!, இவர் திருவுள்ளம்இங்ஙனே சோடிதப்பத்தாகாதே! அம்மே! இவர்ஸ்வபாவ மிருந்தபடியென்னென்கிறார் . ௩௭.

அ—முப்பத்தெட்டாமபாட்டு மேம்பொருள் மஹாபாரதத்துக்குச் சரமச்லோகம்போலே யாய்த்து-இப்ப்ரபந்தத்துக்கு இப்பாட்டு மஹாபாரதமாகிறது - (க) 'மதிமந்தாநமாவித்ய பேநாஸௌ ஸர்வஸாகராத் । ஜகத்திதாய ஜநிதோ மஹாபாரதசந்த்ரமா:' என்கிறபடியே சதுஸ்ஸாகரசந்த்ரமாவாய்த்து மஹாபாரதம். ஸர்வேச்வரன் க்ஷீராப்தியைக்கடைந்து தேவர்களுக்கு அம்ருதத்தைக்கொடுத்தான், ஸ்ரீவேதவ்யாஸபகவான் சுருதியைக்கடைந்து ஸம்ஸாரிகளுக்கு அல்லாத ஸாரமான மஹாபாரதத்தை ஸம்ஸாரிகளுக்கு ஆத்மோஜ்ஜீவந ஹேதுவாகக் கொடுத்தான தேவர்களுக்கு ஈச்வரன்கொடுத்த அம்ருதம் பந்தகம், ஸ்ரீ வேதவ்யாஸபகவான் ஸம்ஸாரிகளுக்குக் கொடுத்த மஹாபாரதம் ஸம்ஸார விமோசகமிறே; அம்மஹாபாரதந்தான் கோலேனும்படியாயது ஸ்ரீகீதை, அதில் ஸாரமாய்த்து சரமச்லோகம். இதுசொல்லுகைக்காக கீழடங்கச்சொல்லிற்று; இதுக்குமேல் (உ) "இதந்தே நாதபஸ்காய" என்று தொடங்கி இந்த சரமச்லோகத்திலுடைய கௌரவத்தைச் சொல்லுகிறது. அப்படியே

(க) "மதிமந்தாநமாவித்ய பேநாஸௌ ஸர்வஸாகராத் । ஜகத்திதாய ஜநிதோ மஹாபாரதசந்த்ரமா:" (உ) "இதந்தே நாதபஸ்காய"

இப்பாட்டவதாரிகைக்காகவாய்த்தது இப்ப்ரபந்தமவதரித்தது, இதுக்குமேலே ப்ரபந்தசேஷமும் இப்பாட்டில் சொல்லுகிற அர்த்தத்தில் நிஷ்டராயிருப்பாருடைய ஏற்றஞ் சொல்லுகிறது. ஆக, மஹாபாரதஸாரம் ஸபச்லோகமானபோலே இப்ப்ரபந்த ஸாரம் இப்பாட்டு. இதுதான் த்வயத்தினுடைய அர்த்தத்தைச் சொல்லுகிறது. த்வயத்தில் ப்ராபகம் முன்னாய ப்ராப்யம் பின்னாயிருக்க, இதில் ப்ராப்யம் முன்னாய் ப்ராபகம் பின்னாயிருப்பானென்னென்னில்; வ்யுத்பத்திவேளையில் ப்ராப்யம் முன்னாய் ப்ராபகம் பின்னாயிருக்கக் கடவதிறே. (க) "ஸ்வர்க்ககாமோ ஜ்யோதிஷ்டோமேந யஜேத" என்றிறே வ்யுத்பத்திவேளையிலிருப்பது; அநுஷ்டாநவேளையிலே ஜ்யோதிஷ்டோமாநுஷ்டாந பூர்வகமாகவிறே ஸ்வர்க்கஸித்தி, ப்ராபக நிஷ்டையாலேயிறே ப்ராப்யஸித்தி, அப்படியே இப்பாட்டிலே வ்யுத்பத்திவேளையாய் த்வயம் அநுஷ்டாநவேளையாயிருக்கிறது. அதில் பூர்வபாகத்தைக் கவிலே அநுஸந்தித்தார் நம்மாழ்வார்; உத்தரபாகத்தை அநுஸந்தித்தாள் ஆண்டாள்; அவையிரண்டையும் சேரவநுஸந்தித்தார் இவ்வாழ்வாரே யாய்த்து இப்பாட்டுக்கு கிழ்ப்பாட்டோடே ஸங்கதியென்னென்னில்; "அளியன்நம்பையல் என்னார் அம்மவோ கொடியவாறே" என்று சேலைத்து வார்த்தைசொன்னவாறே, விஷயாந்தர ப்ரவணபரமான ஸம்ஸாரத்திலே வந்த புருஷார்த்தத்தை அபேக்ஷிக்கையும், தமக்கு நம் கைபார்த்திருக்கையும் அதுக்குமேலே விளம்பம்பொறுக்க கிலாய்க்கையும், ஆசிவ்வளவு புகுராநிற்பாரைப் பெறுவோமே என்று பெரியபெருமாள் திருவுள்ளம் பர்வசமாய், திருவுள்ளத்தில் ஹர்ஷமடங்காதும் திருமுகத்திலே தோற்றும்படியாயிருக்க, தேவரீரைக்கிட்டி தேவரீர்பக்கலிலே ந்யஸ்தபராய்த் தந்தாமுடைய ஹிதத்தில் கைவாங்கியிருப்பாரைக் கண்டால் இங்ஙனேயோ தேவரீர் திருவுள்ளமிருப்பதென்று பெரியபெருமாள் திருமுகத்தைப் பார்த்து விண்ணப்பம் செய்கிறார். சரமச்லோகம் ப்ரபத்தியை விதிக்கிறதாயிருக்கும்; அதில் ருசியுடையாருடைய அநுஸந்தாநமாயிருக்கும் த்வயம்; த்வயநிஷ்டர்பக்கல் ஈச்வரனுக்குண்டான உகப்பைச் சொல்லுகிறது இப்பாட்டு.

மூ—மேம்பொருள் போகவிட்டு மெய்ம்மையை மிகவுணர்ந்து
ஆம்பரி சறிந்துகொண்டு ஐம்புல னகத்தடக்கி
காம்பறத் தலைசிரைத்துன் கடைத்தலையிருந்து வாழும்
சோம்பரை யுகத்திபோலுஞ் சூழ்புன லரங்கத்தானே ௩அ.

ப—ரை—புனல்சூழ்—காவேரியால் சூழப்பட்ட, அரங்கத்தானே—கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே, மேம்பொருள்—மேன்மையை விளைக்கக்கடவதான பாஹ்யபதார்த்தங்களை, போகவிட்டு—ஸவாஸநமாகப்போக்கி, மெய்ம்மையை மிக உணர்ந்து—ஆத்மாவை உள்ளபடியறிந்து, ஆம் பரிசு அறிந்துகொண்டு—சேதநனுக்கு கைங்கர்யமே புருஷார்த்தமென்பதையறிந்து, ஐம்புலன்—பஞ்சேந்த்ரியங்களையும், அகத்து அடக்கி—விஷயாந்தரங்களில் போகாமே தம்முள்ளே அடக்கி, காம்பு அற—உபாயாந்தரங்களில் தமக்குண்டான ஸம்பந்தமற, தலைசிரைத்து—தம்பக்கலுண்டான துரிதங்களைப்போக்கி, உன் தலைக்கடை—உன் திருவாசலிலே, இருந்து—ஸுப்ரதிஷ்டிதராயிருந்து, வாழும்—வாழுமவராய், சோம்பரை—ஸ்வஹிதத்தில் சோம்பினவர்களை, உகத்திபோலும்—உகக்குமவனல்லையோ வென்கிறார்

(க) "ஸ்வர்க்ககாமோ ஜ்யோதிஷ்டோமேந யஜேத".

பயா மெய்ம்பொருள். இதுக்கு மூன்றுபடி நிர்வாஹம். மேலெழுந்தபொருளென்றும், மேலினபொருளென்றும், § மேய்பாட்டைவிளக்கும் பொருளென்றும். மேலெழுகை யாவது - கர்மமடியாகவந்தேறியாய் பகவத்ஜ்ஞாநம்பிறந்தவாறே மறந்துபோமதாயிருக்கை; இத்தை போக்யமென்று பார்த்து இழிந்தவனுக்கும் ஆபாதப்ரதீதியில ஒன்றுபோலே தோற்றி, நிரூபித்தால் அநுபாவ்யமாயிருப்பதொன்று மன்றிக்கே யிருக்கையென்றுமாம். மேலினபொருள் என்றது - (க) "ஜ்யாய ஸாத்யா" என்கிறபடியே சேதநனில் பிரிக்கவொண்ணாதபடியிருக்கை. (உ) "தேஹோஹம் தேஹிஷ்வஹம்" என்று உடம்பைத் தானாக நினைத்திருக்கும்படியிறே இதோடேயுள்ள பொருத்தமிருப்பது, அத்தைச்சொல்லிற்றாகவுமாம். § மேய்பாட்டை விளக்கையாவது - தன்னைப்பற்றினரை ஸர்வஜ்ஞராக்கவிமோசிக்கி நிற்கும்படியன்னவறாகை பொருள் என்று - பதார்த்தம், அதாகிறது - தேஹம் இது நான் தேஹாநுபந்தியான ப்ராக்ருதபதார்த்தங்களுக்கும் உபலக்ஷணம். போகவிட்டு வாஸநையோடே விட்டென்கை சரீரிகளால அவை துஷ்காமாகையாலே ப்ராகாதி பராக்ருதங்கள் புருஷார்த்தமென்கிற ஜ்ஞாநத்தையுடையனாகை, அல்லது புகுரவிட்டான இவனுக்கிறே இவனால் போகவிடலாவது; (௩) "ஈஶ்வரோஹம்" என்கிறபடியே ஈச்வரன் புகுந்தத்தைத இவனால் போக்கவொண்ணாதிறே (௪) "ஸநாதநத்வம்" என்கிற லோகநாதினபடியே - தேஹத்தில ஆத்மபுத்தியையும், தேஹாநுபந்தியான ப்ராக்ருதபதார்த்தங்களில் மமதாபுத்தியையும், தேஹாதிரிக்தனான ஆத்மாவில் ஸ்வதந்த்ரபுத்தியையும் தவிருகை. அளவுடையரான ஸநகாதிகளுக்கும் செயயலாவது இவ்வளவே. இரண்டுமே கூட நின்றால ஒன்றைவிட்டு நினைத்தவன ஒருமாததிலே தொதுப்பெருங்காயத்தை — அதுபட்டு நிற்குமாப்போலே, இப ப்ரதிபத்திமாத்ரத்திலே யிதுவுமீடும் "மெய்ம்மையை மிகவுணர்ந்து ஆம் பரிசறிந்துகொண்டு" என்று மேலும் ஜ்ஞாநப்ரகரணமாகையால், "போகவிட்டு" என்று - ப்ரகரணபலத்தாலே ஜ்ஞாநத்தைச்சொல்லிற்றாக்கடவது.

மெய்ம்மையை மிகவுணர்ந்து மெய்யெனகிறது - ஆத்மாவை. "மெய்" என்று ஆத்மாவைக்காட்டுமோவென்னில, (௫) "ஸத்யஞ்ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்கிற ச்ருதிச்சாயையாலே யருளிச்செய்கிறார் ஸத்யசப்தம் அஸத்ய வ்யாவ்ருத்தியைச்சொல்லுகிறதன் ஆத்மஸ்வரூபத்தின நித்யத்தைச்சொல்லுகிறது. "மெய்ம்மை" என்றொரு பூர்வமல்லாப, ப்ரத்யக்விஷயத்தைச் சொல்லுகிறது "வெம்மை, பொய்ம்மை" என்னுமபோலே ஆக "மெய்ம்மை" என்று - மெய்யான தன்மையென்றபடி. மிகவுணர்ந்து. தேஹமே ஆத்மா" என்றிருக்கும லோகாயதிகனைப்போலன்றிக்கே, "தேஹாதிரிக்தமாய் பமாயிருக்குமாத்மா" என்னும் மீமாம்ஸகனைப்போலன்றிக்கே, "ஜ்ஞாநம் ஆகந்துகம்" என்ற வைசேஷிகனைப்போலன்றிக்கே, ஸ்வயம்ப்ரகாசனாய், நித்யனாய், ஜ்ஞாநகுணகனாய், அணுவானுப், ஈச்வரனுக்கு அநந்யார்ஹசேஷமாய், அவன்தன் ததீயசேஷத்வ பர்யந்த முணருகை அதாவது - ஆத்மாவையுள்ளபடி யுணருகை.

ஆம்பரிசறிந்துகொண்டு "பக்ரதிப்ராக்ருதங்கள் த்யாஜ்யம்" என்றறிந்து. ஆத்மாவையுள்ளபடி யுணர்ந்தால், பின்னை, ஆம்பரிசாவது — கைங்கர்யமேயுரியது. ஆம்பரிச

---

§ "மெய்ப்பாட்டை" என்றும் காண்கிறது.

(க) "ஜ்யாய ஸாத்யா" (உ) "தேஹோஹம் தேஹிஷ்வஹம்" (௩) "மமமாயா துரத்யயா" (௪) "அநாத்மந்யாத்மபுத்திர்யா" (௫) "ஸத்யஞ்ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம"

